உ

# अवधूत गीता

# "அவதூத கீதை"

ஸ்ரீ தத்தாத்ரேயர்
இயற்றியது.

34

"அருட்சக்தி"
நாகராஜன்.

॥ श्रीगणेशाय नमः ॥

# अवधूतगीता

श्री दत्तात्रेय विरचिता

श्रीस्वामि कार्तिकेय संवादरूपा ।

ஸ்ரீ ஸ்வாமி — கார்த்திகேய — ஸம்வாத வடிவில்
ஸ்ரீதத்தாத்ரேயர் இயற்றிய

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் N. S. யஜ்ஞேசுவர சாஸ்திரிகள், அல்லூர்.

ईश्वरानुग्रहादेव पुंसामद्वैतवासना ।
महद्भयपरित्राणा विप्राणामुपजायते ॥ १ ॥

ஈசுவரனுடைய அனுக்ரஹத்தினால்தான் மனிதர்களுக்கு அத்வைத வாஸனை ஏற்படுகிறது. இந்த வாஸனை பெரிய பயத்திலிருந்து மனிதனை காப்பாற்றக் கூடியது. இந்த வாஸனை, முதல் வர்ணத்தவர்களுக்கே ஏற்படும் என்று பொருள். विप्राणां என்ற இடத்தில் द्वित्राणां என்று பாட மாறுதல் உண்டு. இரண்டு மூன்று மனிதர்களுக்கே ஏற்படும் என்று பொருள். ईश्वर என்ற சொல் முதலில் அமைந்ததே மங்களமாகவாகிறது. वासना என்ற சொல், மனிதன் புண்ய பாப பலனாக பல ஜன்மாக்களை அடைந்து அவ்வப்பொழுது அனுபவித்தவைகளின் ஸம்ஸ்காரத்தை கூறுகிறது. (संस्काराः —वासनाः- Impressions) மீன் ஜன்மாவாக பிறப்பவனுக்கு உடனேயே ஜலத்தில் நீந்தும் சக்தி ஏற்படுகிறது. குரங்கு ஜன்மம் எடுத்தவுடன் தாயின் வயிற்றைக் கட்டிக்கொள்ளும் திறமை ஏற்படுகிறது. மனிதனாகபிறந்தவுடன்தாயின்பாலைஉறிஞ்சி சாப்பிடும் தன்மை உண்டாகிறது. இவைகள் கற்றுக்கொடுத்துப் பின் வருபவைகள் அல்ல. இவைகளைப் பற்றி ஐதரேயஉபநிஷத்தில் பேசும்பொழுது வாஸனைகளைக் கணக்கிடவே முடியாது. எல்லோருக்கும் எல்லா வாஸனைகளும் உண்டு. இவைகள் செயல் ஏற்பட்ட பின் ஊஹித்து அறியத்தக்கவைகள்தான் என்று கூறியுள்ளது. ஆகவே மனிதனுக்கு அத்வைத வாஸனை என்பது சாஸ்த்ர பரிசயத்தால் ஏற்படுவது, அது எல்லோரிடமும் எளிதில் காண முடியாததாகும். எவனுக்கு பகவானுடைய அனுக்ரஹம் (தயவு—கருணை) இருக்குமோ அவனுக்குத்தான் ஏற்படுகிறது. பல கோடி ஜனங்களுக்குள் கணக்கு செய்து பார்த்தால் இரண்டு அல்லது

மூவர்களிடம்தான் காண முடிகிறது. ஸர்வ ஸாதாரணமல்ல. இந்த வாஸனையானது பெரிய பயத்திலிருந்து மனிதனைக் காப் பாற்றும். பெரிய பயம் என்பது பிறப்பு — இறப்பு என்ற கடலில் மூழ்கியிருப்பதுதான். இதில் ஒய்வு பெறுவது நம்மால் ஆவதில்லை. எவனுக்கு ஈச்வர கிருபை இருக்குமோ அவனுக்கேதான் ஏற்படும். மற்ற பயங்கள் விலகும், மறுபடி வரும். ஸம்ஸார பந்தம் விலகி விட்டால் மறுபடி அந்த மனிதனை இந்த பயம் வந்து அடையாது. இதையே வியாஸ பகவான் ஸூத்திரத்தில் கூறும்போது न स पुनरावर्तते என்று கூறுகிறார். अद्वैतम् என்பதற்கு எந்த இடத்தில் - (எந்த நிலையில்) இரண்டாக தோற்றமே இருக்காதோ என்று பொருள் — द्विधा + इतं = द्वितं — द्वितमेव द्वैतम् - न विद्यते द्वैतं यत्र — तत् — अद्वैतम् என்று இந்த சொல்லிற்கு விளக்கம் கூறு வார்கள். இப்படிக் கூறாமல் न + द्वैतं = अद्वैतं இரண்டில்லை என்றால் பல உண்டோ என்று தோன்றும். எந்த ஆத்ம நிலையில் உள்ளவர் களுக்கு இரண்டாக தோன்றும் தோற்றமே கிடையாதோ என்றால் - தன்னைத் தவிர வேறு ஒன்றுமே இல்லையோ என்ற பொருள். தன்னை அறிவது வேதாந்தம். தலைவனை அறிவது ஸித்தாந்தம் என்பார்கள். சிவ விசிஷ்டாத்வைதத்தில் நமக்கு தலைவன் ஒருவன் உண்டு; அவனை அறிவதே புருஷார்த்தம் (வீடு பெறல்) என்பார்கள். அத்வைத வேதாந்தத்தில் என்னைத் தவிர வேறொன் றும் கிடையாது. நான் ஒருவனே உண்மைப் பொருள் என்பது தான் அனுபவமாகும். अहं ब्रह्मास्मि என்ற அனுபவம் வந்த பின் செய்ய வேண்டியது ஒன்றும் கிடையாது. இப்படிப்பட்ட ஒரு வாஸனையை கடவுளின் கருணை இல்லாமல் அடைய முடியாது என்று முதல் சுலோகத்திலேயே அத்வைத சாஸ்த்ரத்தின் பெருமை விளக்கப்படுகிறது.

மாண்டுக்யோபநிஷத்தின் கௌடபாதகாரிகையில் अजातवादम् என்ற ஒரு முறை கையாளப்படுகிறது. இந்த வாதம் எல்லோருக் கும் நன்கு விளங்காது என்றும், எல்லோரிடமும் கூறக் கூடாது என்றும் வரை முறை விதித்துள்ளார்கள்.

ஒரு குறிப்பிட்ட பரிபக்குவமான மனதுடையவர்களிடம், அதிலும் ஸன்யாஸிகளிடம்தான் இந்த வாதம் விளக்கமாய் கூறத் தக்கதாகும் என்பது சாஸ்த்ர ஸித்தாந்தம். ஸ்ரீ தத்தாத்ரேயர் இந்த அஜாதவாதத்தையேதான் மிகவும் அதிகமாக இந்த அவதூத கீதையில் கையாளுகிறார். பரமேச்வராம்சாவதார மானதால் ஞானப்ரதானமாகவுள்ள அஜாதவாதத்தையே கடைப் பிடித்துள்ளார். ज्ञानमिदं ... महेश्वराद-ईशानः सच्चिदानं என்ற

வார்த்தைகளின் உட்கருத்தை கொண்டுதான் முதல் சுலோகம் அமைந்துள்ளது. இந்த அவதூதகீதை எட்டு அத்யாயங்கள் கொண்டது. முதல் அத்யாயம் ज्ञान संवित्त्युपायः என்று பெயர் உள்ளது. தத்வஜ்ஞானத்தை நன்கு அறிவதற்கு அல்லது அடை வதற்கு ஏற்பட்ட உபாயம் — மார்க்கம் — வழி என்று பொருள். இந்த முதல் அத்யாயத்தில் மொத்தம் 76 சுலோகங்கள் அமைந்து இருக்கின்றன.

येनेदं पूरितं सर्वं आत्मनैवात्मनाऽऽत्मनि ।
निराकारं कथं वन्दे ह्यभिन्नं शिवमव्ययम् ॥ २ ॥

(அவதூத கீதை முதல் அத்யாயம்—இரண்டாவது செய்யுள்.)

கண்களுக்கு எதிரில் தோற்றமளிக்கின்ற இவ்வுலகம் முழுதும் எந்த ஒரு ஆத்மாவினாலேயே நிரப்பப்பட்டுள்ளதோ इदं सर्वं येन आत्मनैव पूरितम्. நிரம்பியுள்ள வஸ்துவும் ஆத்மாதான். நிரப்பப் படும் இடமும் ஆத்மாதான் आत्मना—आत्मनि. உருவமற்றதும் எங்கும் பரந்து நிற்பதும் அழிவற்றதும் எவ்விதத்திலும் பிரி வற்றதும் (பேதம்=வேற்றுமை, பிரிவு) சிவஸ்வரூபமானதும் அந்த ஆத்மாவேதான். என்னினும் வேறுபடாத தத்துவத்தை எவ்விதம் நமஸ்கரிப்பேன்—अभिन्नं कथं हि वन्दे இவ்விதம் கூறும் விவரம் பிருஹதாரண்யக உபநிஷத்தில்

पूर्णमदः पूर्णमिदं पूर्णात् पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥

என்ற வாக்யத்தில் கூறியிருக்கிறது. ஒரு இடத்தில் पूर्णं ब्रह्म सनातनम् என்று பூர்ணம் என்ற சொல் பிரஹ்மத்தையே குறிப்பிடு வதாக விளக்கமும் இருக்கிறது. நம் புலன்களுக்கு எட்டாமல் உள்ளதும் பிரஹ்மம்தான். पूर्णमदः पूर्णमिदं நமக்குத் தெரிகின்ற உலகம் முழுதும் பிரஹ்மம்தான். पूर्णात् पूर्णमुदच्यते உலகத்துக்கு காரணமாக உள்ள (தனிப்பட்டுள்ள) பிரஹ்மத்தில் இருந்துதான் உலகம் தோற்றமாகிறது. पूर्णस्य पूर्णमादाय உலகமாக தெரிகின்ற பூர்ண ஸ்வரூபத்தின் உண்மையான (அடிப்படை) ப்ரஹ்மத்தை அறிந்துகொண்டு पूर्णमेव பூர்ண ப்ரஹ்மதத்வமே अवशिष्यते எஞ்சி நிற்கிறது. இந்த பொருள் எவனுக்கு அனுபவத்தில்வந்து விடுமோ அவனுக்கு தனிப்பட்ட வஸ்துவின் தோற்றமின்மையால் எவ்விதம் நமஸ்காரம் செய்யமுடியும்? இந்த அனுபவம் எல்லோ ருக்கும் எளிதில் வர இயலாது என்பதையே முதல் சுலோகத்திலும் கூறியிருக்கிறார்.

पञ्चभूतात्मकं विश्वं मरीचिजलसन्निभम् ।
कस्याप्यहो नमस्कुर्यां अहमेकोनिरञ्जनः ॥ ३ ॥

पञ्चभूतात्मकं பிருதிவீ (மண்) – ஜலம் – நெருப்பு – காற்று – ஆகாயம் - (இடைவெளி) இவைகளின் கலப்பாக தோன்றுவதான विश्वं உலகமானது मरीचि जल सन्निभम् கானலில் தோன்றும் தண்ணீருக்கு ஒப்பானது. अहो அந்தோ! 'ஆச்சர்யம். कस्य नमस्कुर्याम् யாருக்கு நமஸ்காரம் செய்வேன் निरञ्जनः எந்தவிதமான (ஒட்டுதலும்) பற்றுமில்லாதவனாக अहं एकः நான் ஒருவனே இருக்கிறேன். நமஸ்காரம் என்ற செயல்; நமஸ்காரம் செய்பவர் – செய்யப்படுபவர் - (எவரைக் குறித்து செய்கிறோமோ அவர்) என்று இருவர்களிடையே ஏற்படுவதாகும்: நான் ஒருவனே என்னை விட்டு வேறு ஒன்றுமில்லை என்ற அனுபவசாலிக்கு நமஸ்காரம் ஏற்படுவதற்கே வழியில்லை என்பது முற்றிலும் உண்மை.

உலகம் தோன்றுகிறதே எனின் அது உண்மையல்ல ; கானல் நீர் போன்றது. கானல் நீருக்கு मृगतृष्णिका என்றும் பெயர் உண்டு. மான்களுக்கு மிகவும் அதிகமாக தோன்றி ஏமாற்றக் கூடியது என்று பொருள். ஆனால் மான்களுக்குத்தான் தோன்றும் என்று விளக்கம் கிடையாது. மனிதர்களுக்கும் தோன்றும். மிருகங்கள் கண்டு ஏமாறுவது அதிகம். அவைகளுக்கு பகுத்தறிவு இல்லை. பகுத்தறிவு உள்ள மனிதன் சில ஸமயம் ஏமாற்றம் அடையலாம். செயல்பட்டு அதன் உண்மையை அறிந்துகொண்டு விட்டால் மறுசமயம் ஏமாறமாட்டான். தத்வஜ்ஞானம் ஏற்பட்டவனுக்கு உலகம் தோன்றாது என்பதல்ல. கண்ணாடியில் தெரிகின்ற பிம்பம் போல் பொய்யானது என்றும் சேர்ந்தே தோன்றும். அவ்விதம் தோன்றுகின்ற வஸ்துவை பார்த்து நமஸ்கரிக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றாது. கண்ணாடியில் தோன்றுகின்ற உருவம் பொய் என்பது மட்டுமே உபமானமாகும். அவ்வளவுக்குத்தான் உபமானத்தின் உபயோகம். சாஸ்த்ரங்களில் प्रतिबिम्ब दृष्टान्त ங்கள் இந்த அளவுக்குத்தான் கூறப்பட்டுள்ளன.

आत्मैव केवलं सर्वं भेदाभेदो नविद्यते ।
अस्ति नास्ति कथं ब्रूयां विस्मयः प्रतिभाति मे ॥ ४ ॥

सर्वं எல்லாமே आत्मैव केवलं—ஆத்மாவேதான். (ஆத்மாவை விட்டு வேறாக உள்ளது ஒன்றுமில்லை) அப்படியுள்ள ஆத்மாவில், भेदः — பிளவோ अभेदः — இரண்டு பொருளின் சேர்க்கையோ

न विद्यते — இருக்கவில்லை. ஆகையினால் अस्ति — இருக்கிறது

न अस्ति — இருக்கவில்லை என்று कथं — எவ்விதம் ब्रूयां — கூறு வேன். मे — எனக்கு विस्मयः प्रतिभाति — ஒரே ஆச்சரியமாக தோன்றுகிறதே !

यथा सैन्धवघनः — எப்படி உப்புக்கட்டியோ, அதுபோல் ஆத்மா இருக்கிறார் என்று சாந்தோக்ய உபநிஷத்து கூறுகிறது. (இந்துப்பு என்கிற பெரிய பாறையாகவுள்ள உப்பை நினைவில் கொள்ளவும்) உப்பு கட்டியில் இடைவெளியே காணாமல் எல்லா இடமும், உப்பு ரஸம் தவிர வேறு ரஸம் எப்படியில்லையோ - அந்த உப்பு ரஸமே கட்டியாக இருக்கிறதோ — (இவ்விதமே பனிக்கட்டி கல்கண்டு கட்டி இவைகளையும் நினைவில் கொண்டு புரிந்துகொள்ள வேண்டும்) அதற்குள் வேற்றுமையோ ஒற்றுமையோ கான முடி யாதோ — மனதினால் கற்பனை செய்து கூட காண முடியாதோ — அவ்விதம் இந்த ஆனந்த ரஸக் கட்டியான (रसघनः என்று பிருகதாரண்யக உபநிஷத்து) ஆத்மாவிடமும் பேதம் — அபேதம் காண முடிவதில்லை. அதனால் अस्ति—नास्ति என்றும் கூற முடிவதில்லை. எவ்விதம் சமுத்ரம் ஜலம் தவிர வேறில்லையோ — (ஜலமில்லாவிடில், அலை—நுரை—குமிழ் இவைகளுக்கு தோற்றமே கிடையாது.) அவைகளுக்குள் உண்மையில் வேற்றுமையே கிடையாதோ அவ்விதம் கானல்நீர் போல் தோன்றுகின்ற உலகத் துக்குள் பிரஹ்மத்துக்கும் எப்படி भेद-अभेद-अस्ति-नास्ति என்ற வார்த்தைகளை சொல்வேன் — ஆச்சர்யமாக உள்ளதே !

(தொடரும்)

  

# "சொன்னபடி செய்தால் சுகம் கிடைக்கும்"

சிந்திப்பவர் " பரதேசி "

நான்கு பெரிய தத்துவங்கள் — நடைமுறைப் பருவங்கள்.

அத்வைதம் — த்வைதம் — விசிஷ்டாத்வைதம் — நாஸ்திகம்.

குழந்தை — பாலன் — வாலிபன் — முதியவர்.

பிரம்மசாரி — குடும்பஸ்தன் — மனைவியுடன் காட்டில் வாழ் பவன் — முற்றும் துறந்த யோகி.

மூளையைக் குழப்புகிறதா ?

மூளை இருப்பதால் வந்த வினைதானே இது ? உங்களுக்கு எது மூளை ? மூளையை நீங்கள் எங்கே காண்பீர்கள் ?

குழந்தை குறுக்கிடுகிறான். '' தாத்தா இதோ பார், மூளையின் வரைபடத்தை ! ''

'' இதுதான் மூளையா ? '' '' ஆமாம் '' ஏன் ?
'' வாத்தியார் போட்டுக் கொடுத்தாரா ? ''

ஆக இதோ புதிர் அவிழ்கிறது.

நம் கண்ணால் காண முடியாத பௌதிக தத்துவங்களைப் போலவே, நம் அறிவால் மட்டும் உய்த்துணரக்கூடிய ஆன்மீகத் தத்துவங்களும் இருக்கிறது.

பௌதிக — விஞ்ஞானம்—தன் பல்வேறு இயல்புகளால், பிரிவுகளால் மனிதனை இயற்கையோடு போராடி அதை வென்று சுகம் காண வழி காட்டுவதைப் போலவே, ஆன்மீகவாதியும் பௌதிக விஞ்ஞானத்தை முழுதும் பயன்படுத்திக்கொண்டு அதற்கும் அப்பால் ஆன்மீக விஞ்ஞானமும் இறையருளை சுட்டிக்காட்டி அவனருளின்றி நம்மால் எதுவும் செய்ய இயலாது என்பதை உலகுக்கு உணர்த்தி வருகிறான்.

தன்னலம் கருதாமல் உலக மக்களுக்காகவே உழைத்த மஹரிஷிகளின் பொன்மொழிகளே உபநிடதங்களாகின - வேத மந்திரங்களாகின. இமய மலையில் தோன்றும் கங்கையும் - கர்நாடகத்தின் குடகு மலையில் தோன்றும் காவிரியும் - தங்கள் கிளை நதிகளாலும் உப நதிகளாலும் பாரதத்தின் உயிர்நாடியான ஆத்மீகத்தை வளர்த்து வருகின்றன. அந்தக் கரையில் தங்கி, அந்த நீரைக் குடித்து வளர்ந்த மஹான்களின் நல்லாசி பெற்று, அவர்களின் சீடர்களாகவும் - அபிமானிகளாகவும் - தோழர்களாகவும் - ஆதரவாளர்களாகவும் அவர்களைப் போலவே தோற்றம் கொண்டு உணவருந்தி - பட்டினி கிடந்து - வழிபாடுகள் நடத்தி - பல்வேறு பரம்பரையைப் பேணிட மடாலயங்களைக் கட்டி ஆண்டு - ஆங்காங்கு அரசியல் மண்வாடையால் அவதிப்பட்டு - படித்தும் பண்பில்லாத மக்களால் அல்லல்பட்டு - ஏசுபிரானைப் போல் - மகாத்மா புத்தரைப் போல் - மஹாத்மா காந்தியைப் போல் எளிமையாகவும் எல்லோர்க்கும் நற்பயன் விளைவிக்கும் கர்ம யோகிகளாயும் இயங்கி வருகிறார்கள்.

மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற நாலுபடிகளில் உயர்ந்த படியில் உள்ள இறைவனை அடைந்தால் உண்மையில் நாம் சுகம் பெறலாம் என்பதை மூன்றும் படியிலிருந்து மாதா - பிதாக்களுக்கும் அவர்கள் மூலம் மக்களுக்கும் உபதேசித்து வரும் ஆசார்ய தேவனுக்கு அடியேனின் ஆத்மாவை அர்ப்பணிக்க விழைகிறேன். பந்தங்களை நீக்கி அவன் ஆட்கொள்வானாக !

# अवधूतगीता

## श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

(முன் தொடர்ச்சி)

**वेदान्तसारसर्वस्वं ज्ञानं विज्ञानमेव च ।**
**अहमात्मा निराकारः सर्वव्यापी स्वभावतः ॥ ५ ॥**

அவதாரிகா - வேதாந்தம் எனப்படுகிற உபநிஷத்துக்களின் பரம உண்மையான கருத்து என்னவென்பதை கூறுகிறார்.

**वेदान्त सार सर्वस्वं** வேதாந்தங்கள் என்றால் வேதங்களின் கடைசியில் கூறப்படுகின்ற உபநிடதங்கள். அவைகளின் **सार** என்றால் முக்ய கருத்து என்று பொருள். பல விஷயங்கள் கூறப்பட்டிருப்பினும் அவைகளில் முக்ய நோக்கமாக எதை கூறுகின்றதோ அதுவே ''ஸார''மாகும். **सर्वस्वं** என்றால் எல்லா சொத்துக்கள் என்பார்கள். யாகங்களினுள் ''விச்வஜித்'' என்று ஒரு யாகம் உண்டு. அந்த யாகத்தில் ''ஸர்வஸ்வம்'' தக்ஷிணை என்று கூறியிருக்கிறது. ஸ்தாவரமாக உள்ள வீடு மனை நிலம் இவைகள் தவிர ஜங்கமமான பணம் நகை பாத்ரங்கள் ஆடை, ஆபரணங்கள் எல்லாவற்றுக்குமே ஸர்வஸ்வம் என்று பெயருண்டு. அம்மாதிரியான எல்லா வஸ்துக்களையுமே தக்ஷிணை யாக கொடுக்கவேண்டியது, விச்வஜித்து என்ற யாகத்தில். இம் மாதிரி யாகம் செய்து ஒன்றுமே இல்லாதவரான ரகு மஹாராஜ னிடம் குரு தக்ஷிணை கொடுப்பதற்காக கௌத்ஸர் என்ற பிராமணர் பணம் யாசிக்க வந்ததாக ரகு வம்சத்தில் 5ம் ஸர்க்கத்தில் கதை கூறப்பட்டிருக்கிறது. அம்மாதிரி, வேதங்களில் முக்ய பொருள்கள் எல்லாம் ஒருங்கே சேருவதற்கு பெயர் **वेदान्त सार सर्वस्वं** அது என்னவென்பதை கூறுகிறார். **अहं—आत्मा—निराकारः** நான் என்பது ஆத்மாவேதான். அந்த ஆத்மப் பொருளுக்கு **आकारः** என்ற உருவமே **निर्गतः+आकारात्=निराकारः** கிடை யாது. **स्वभावतः** இயற்கையாகவே **सर्वव्यापी** எல்லா இடங் களிலுமே நிரம்பியுள்ளவர். ஆகாயம் இல்லாத இடமே கிடை யாது; அவ்விதமே ஆத்மாவும் பரந்து நிற்கிறார். ஆத்மா இல்லாத இடமோ, பொருளோ, காலமோ கிடையாது. எங்கும் எப்போதும் எல்லாமாகவும் உள்ளவர் என்று கருத்து.
**आप्नोतीति—आत्मा** அடைகிறவர் ஆத்மா. **आदत्ते इति—आत्मा**

எடுத்துக்கொள்பவர் ஆத்மா. अत्ति इति = आत्मा சாப்பிட்டுவிடு கிறர் ஆத்மா. अततीत्यात्मा எங்கும் வியாபித்தவர் ஆத்மா என்பதை यच्चाप्नोति, यदादत्ते, यच्चात्ति विषयानिह । यच्चास्य सन्ततो भावः, तस्मादात्मेति कथ्यते என்று சங்கர பாஷ்யத்தில் குறிப்பிட்டிருக்கிறது. ஆகையினால் सर्वव्यापी स्वभावतः என்று கூறப்பட்டிருக்கிறது. சாஸ்திரங்களில் ஞானம் என்றும் விஞ் ஞானம் என்றும் உபநிஷத்துக்களிலும்கூட வருகிறது. ஞானம் என்பதற்கு பரோக்ஷம் என்று பொருள். அதாவது வார்த்தை களுக்கு அர்த்தம் புரிந்துகொள்வது பரோக்ஷம் எனப்படும். விஞ்ஞானம் என்பதற்கு அபரோக்ஷம் என்று பொருள். அதாவது தன் அனுபவத்துக்கு வருவது என்று தாத்பர்யம். எவ்விதம் எனில் சர்க்கரை, தேன் என்ற சொல்லைக் கேட்டவுடன் இவ்விரண்டு பொருள்களின் ஞாபகமும் வருகிறது. தித்திப்பு என்ற சொல்லுக்கும் மனத்தில் தித்திப்பு என்று தோன்றுமேயல்லாது அனுபவம் ஏற்படாது. சர்க்கரை, தேன் இரண்டும் கைக்கு கிட்டி உண்ணவும் ஆரம்பித்தால் தித்திப்புக்கு உணர்வு அனுபவம் ஏற்படுகிறது என்பது உண்மை. அவ்விதம் ஆத்மா ஒன்று என்று சொல்லும் போது ஆகாயம் ஒன்று என்பது போல் - அர்த்தம் புரிகிறது. (பரோக்ஷ ஞானம்) ஆகாயம் போல் எங்கும் பரந்து நின்று, (ஆத்மா விற்கு) நானேதான், வியாபித்து இருக்கிறேன் என்று உண்மை யாகவே அனுபவம் வருவது (அபரோக்ஷ ஞானம்) உண்மையான விஜ்ஞானம். இவ்விதமாக வேறு வேருக கூறப்படுகிற ஞானம் விஜ்ஞானம் என்பதும் ஆத்மாதான். வேறல்ல. நான் என்பது ஆத்மாதான். ஞானம் விஜ்ஞானம் என்பதும் ஆத்மாதான். அந்த ஆத்மாவிற்கு உருவம் என்பது கிடையாது. (கண்களுக்கு தெரியாது). இயற்கையிலேயே எங்கும் பரவி நிற்பது ஆத்மா. அப்படிப்பட்டவன் நான்தான் என்று அனுபவம் வர வேண்டும். இவைதான் வேதாந்தங்களின் ஸகல ஸொத்தும் ஆகும். எல்லா சொத்துக்களும் உடையவனுக்கு வேறு அடைய வேண்டியது கிடையாது. அது மாதிரி மேலே கூறிய அனுபவம் வந்துவிட்டால் பிறகு வேதாந்தங்களில் இவனுடைய ஸர்வஸ்வம் ஒன்றுமேயில்லை. இயற்கையாகவே எங்கும் பரவியுள்ள - உருவமற்ற - ஆத்மாவின் சப்தார்த்த ஞானமும் அனுபவ ஞானமும் வந்துவிடுமாகில் வேறு தேட வேண்டியதில்லை. அஹம் என்கிற ஜீவனே ஆத்மா. ஆத்மாவே அஹம் - ஜீவன். இவர்களுக்குபேதமில்லை என்ற நிலை தான் வேதாந்தஸார ஸர்வஸ்யம்.

அவதாரிகை

சாஸ்த்ரங்களில் வியதிஹாரம் என்று ஒரு முறையில் கூறுவது உண்டு. அதாவது त्वं वा अहमस्मि भगवो देवते । अहं वै त्वमसि

என்பது. உபாஸனங்களில் ஹே தேவதையே, நீயேதான் நான், நானேதான் நீயும், என்று திரும்பிச் சொல்வதற்கு வியதிஹாரம் எனப் பெயர். இப்படிச் சொல்வதால் விசேஷ லாபமுண்டு. நமக்கு நன்கு ப்ரத்யக்ஷமாக உள்ளது நம் ஸ்வரூபம். பரோக்ஷமாக (கண்களுக்கும் அனுபவத்திற்கும் அப்பாற்பட்டது) உள்ளவன் தேவன். அதே போன்று சிறியவன் ஜீவன் (நான் என்பவன்). தேவதை வியாபகமாக எங்கும் நிரம்பியுள்ளது. நமக்கு தெரிந்த தோடு, தெரியாததை சேர்த்துவிட்டால் அதுவும் நமக்கு தெரிந்த தாக ஆகிவிடும். பெரியதோடு உ வியாபகத்துடன் சிறியதை சேர்த் தால் பரிச்சின்னமும் சிறியதும் எங்கும் நிரம்பிய பரம்பொருளாகி விடும். இவ்விதம் வியதிஹார லக்ஷணம் கலந்து இரு ச்லோகங் களில் (6-7-ல்) கூறுகிருர்.

त्वं वा अहमस्मि என்ற முறை 6 வது சுலோகத்திலும் अहं वै त्वमसि என்ற முறை 7 வது சுலோகத்திலும் முறையே விளக்கப்பட்டிருக்கிறது.

यो वै सर्वात्मको देवः निष्कलो गगनोपमः ।
स्वभावनिर्मलः शुद्धः स एवाहं न संशयः ॥ ६ ॥

यो वै देवः எந்த ஒரு தேவன் பரமாத்மா परंब्रह्म सर्वात्मकः எல்லாவற்றின் உண்மைப் பொருளாகவும் (ஸகல வஸ்து ஸ்வ ரூபமாகவும்) निष्कलः (சந்திரனுக்கு கலைகள் 16 உண்டு. அவ்வித மாக, உருப்புகள் உள்ளவரல்லவோ) பிரிக்கப்படக்கூடிய பல பாகங்கள் இல்லாதவராகவும் गगनोपमः ஆகாயத்தை போன்ற வராகவும். (ஆகாயம் என்று எண்ணும்போது அதில் வேறுபாடு கிடையாது. வேறு வஸ்துக்களுடன் சேர்ந்தால்தான் घटाकाशः मठाकाशः, सूच्याकाशः என்று பிரிவினை பெயர்களும், வெவ்வேறு உருவங்களும் வருகிறது. அவ்விதமே ஆத்மாவிற்கும் இயற்கையில் பேதம் இல்லை. உபாதியோடு சேர்ந்தால்தான் பலவாக ஆகிறது.)

स्वभावनिर्मलः இயற்கையிலேயே எந்தவிதமான தோஷ ஸம்பந்தமற்றவராயும் शुद्धः மிகத் தூய்மையானவராயும் இருக் கிருரோ स एवाहं அவரேதான் நான். न संशयः இதில் சிறிதும் ஸந்தேஹமில்லை: (என்று கூறுகிருர்)

(தொடரும்)

# 1984 ஏப்ரல் மாதத்திய தேவீமான அஷ்டாங்கம்

கணித்தவர் :—வைத்ய S. V ராதாகிருஷ்ண சாஸ்திரி, திருச்சி.

(1) सं ஸதாசிவ தத்வயுகம் (2) थं த்வக்தத்வ பரிவ்ருத்தி (3) नं க்ராணதத்வ வருஷம்

(4) ऌं சந்திரிகா கலாமாஸம் 22உ வரை, மேல் ॡं சாந்திகலாமாஸம்

(ருதிரோத்காரி ஞூ பங்குனி–மீ 19உ முதல் ரக்தாக்ஷி ஞூ சித்திரை–மீ 18உ முடிய)

| தேதி | கிழமை | (5) | தத்துவ-தினம் | | (6) தினநித்யா | | (7) வாஸரம் | (8) உதயகடிகை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஞாயி | ढं | புத்தி | ईं | பேருண்டா | तं | பூர்ணானந்தநாத | ए |
| 2 | திங் | णं | மனஸ் | इं | நித்யக்லின்னா | पं | ஸ்வபாவானந்தநாத | च |
| 3 | செவ் | तं | ச்ரோத்ர | आं | பகமாலினீ | यं | ப்ரதிபானந்தநாத | ट |
| 4 | புதன் | थं | த்வக் | अं | காமேச்வரீ (அமா) | षं | ஸுபகானந்தநாத | य |
| 5 | வியா | दं | சக்ஷுஸ் | अं | காமேச்வரீ (சுக்-பிர) | अं | ப்ரகாசானந்தநாத | अः |
| 6 | வெள் | धं | ஜிஹ்வா | आं | பகமாலினீ | ऌं | விமர்சானந்தநாத | ए |
| 7 | சனி | नं | க்ராண | इं | நித்யக்லின்னா | कं | ஆனந்தானந்தநாத | च |
| 8 | ஞாயி | पं | வாக் | ईं | பேருண்டா | चं | ஞானானந்தநாத | व |
| 9 | திங் | फं | பாணி | उं | வஹ்னிவாஸினீ | टं | ஸத்யானந்தநாத | य |
| 10 | செவ் | बं | பாத | ऊं | மஹாவஜ்ரேச்வரீ | तं | பூர்ணானந்தநாத | अः |
| 11 | புதன் | भं | பாயு | ऋं | சிவதூதீ | पं | ஸ்வபாவானந்தநாத | ए |
| 12 | வியா | मं | உபஸ்த | ॠं | த்வரிதா | यं | ப்ரதிபானந்தநாத | च |
| | | | ரக்தாக்ஷி | | சித்திரை | | மாதம் | |
| 13 | வெள் | यं | சப்த | ऌं | குலஸுந்தரீ | षं | ஸுபகானந்தநாத | ट |

# अवधूतगीता

## श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

(முன் தொடர்ச்சி)

உலகத்தில் அழுக்கின் ஸம்பந்தத்தை அடைந்த வஸ்துக்களை, செயற்கையால் நாம் சுத்தமாக்குகிறோம்; கண்ணாடியில் உள்ள அழுக்கை துடைக்கிறோம். பாத்ரங்களை நன்கு தேய்த்து வெளுப்பாக செய்கிறோம். இந்த சுத்தியானது இயற்கையாக உள்ளதல்ல—செயற்கையால் ஏற்படுவது. பாத்ரங்களிலும் கண்ணாடியிலும் மங்கல் ஏற்படுவது இயற்கை. அதை போக்குவது செயற்கை. ஆனால் ஆத்மஸ்வரூபமானது இயற்கையிலேயே எந்த தோஷமும் ஒட்டாமல் சுத்தமாகவுள்ளவர் என்பதை நன்கு விளக்க வேண்டித்தான் स्वभावनिर्मलः शुद्धः என்று கூறியுள்ளது. இவ் விதமாக எந்த ஒரு தேவன் ஸர்வஸ்வரூபமாகவும் ஆகாயம் போன்றவராகவும் பேதமற்றவராயும் கலைகள் இல்லாதவராயும் இயற்கையாகவே தூய்மை பெற்றவராயும் இருக்கிறாரோ அவரே தான் நான், வேறல்ல.

अहमेवाव्ययोऽनन्तः शुद्धविज्ञानविग्रहः ।
सुखं दुःखं न जानामि कथं कस्यापि वर्तते ॥ ७ ॥

अहमेव அஹம் என்ற சொல்லிற்கு பொருளாக உள்ள நானேதான் अव्ययः எவ்விதமான குறைவற்றவராகவும் अनन्तः அந்தம் என்பதற்கு முடிவு என்று பொருள். न विद्यते अन्तः यस्य अनन्तः எத்தனை விதமாக முடிவுகள் உண்டோ அவ்வித முடிவுகள் ஒன்றுமில்லாதவராகவும் शुद्ध विज्ञान विग्रहः மிகத் தூய்மை வாய்ந்த அனுபவமே உருவமாயும் உள்ள தேவனாக இருக்கிறேன். सुखं ஸுகத்தையோ दुःखं துக்கத்தையோ न जानामि அறிகிலேன் டி ஸுகதுக்கங்கள் என்னைவிட்டு வேறாக कथं वर्तते எவ்விதம் இருக்கும்? कस्य (என்னைத்தவிர வேறொருவன் இல்லாமையால்) எவனுக்கு ஸுகமும் துக்கமும் இருக்கிறது? व्ययः என்பதற்கு நாசம் என்று பொருள் अव्ययः நாசமற்றவன் अनन्तः முடிவு (எல்லை) இல்லாதவன் शुद्ध विज्ञान विग्रहः தூய்மையான அனுபவம் என்ற உருவமானவன். அழிவற்றவனும், முடிவு பெறாதவனும், உணர்வு ரூபமானவனுமாகிய எந்த ப்ரஹ்மதத்வ முண்டோ, அந்த தத்வம் நானேதான். உடல் படைத்தவனுக் கான—ஸுகம் துக்கம் எப்படி எனக்கு வரும்? வேறு ஒருவனே கிடையாதே! அப்படியிருக்க எவனுக்கு ஸுகதுக்கங்கள் உண்டு?

என்று ஆக்ஷேபிக்கிருர். (முன்பு 3-வது சுலோகத்தில் பஞ்சபூதங்களால் ஏற்பட்டுள்ள உலகம் கானல்நீருக்கு ஒப்பானது என்று சொன்னதை மனதில் கொண்டு இந்த சுலோகத்தின் பொருளைப் புரிந்து கொள்ள வேண்டும் என்றபடி)

அவதாரிகை: ஸுகம்-துக்கம் இரண்டும் நல்ல-கெட்ட, கர்மாக்களின் பலனுகும். கர்மாக்களின் பிரிவு மூன்ருக, காயிகம்-வாசிகம் மானஸிகம் என்றெல்லாம் பிரித்துக் கூறப்பட்டுள்ளனவே! இவ்விதமிருக்க—ஸுகதுக்கம் எவனுக்கென்றும், எவ்விதமென்றும் ஆக்ஷேபனை கூறுவது பொருந்துமா? என்று எண்ண வேண்டாம்.

न मानसं कर्म शुभाशुभं मे न कायिकं कर्म शुभाशुभं मे ।
न वाचिकं कर्म शुभाशुभं मे ज्ञानामृतं शुद्धमतीन्द्रियोऽहम् ॥

मे எனக்கு मानसम् மனதினுல் செய்யக்கூடிய शुभाशुभं कर्म புண்ய பாவங்கள் न இல்லை. मे எனக்கு कायिकं சரீரத்தினுல் செய்யக்கூடிய शुभाशुभं कर्म புண்ய பாபச் செயல்களும்கூட न கிடையாது. मे எனக்கு वाचिकं சொல்லினுல் ஏற்படக்கூடிய शुभाशुभं कर्म புண்ய பாபச் செயல்களும் न இல்லை. ஏனென்ருல் अतीन्द्रियः புலன்களுக்கெல்லாம் புலப்படாத अहं நான் शुद्धः ஒருவிதமான குற்றமோ கெடுதலோ சம்பந்தப்படாத ज्ञानामृतः உயர்ந்த ஞானருபமாகிற அம்ருத (க்கடலாக) மாக இருக்கிறேன். மனதினுல் பிறருக்கு நன்மையும் ஸுகமும் ஏற்பட வேண்டும் என்றும் பிறருக்குக் கஷ்டம் ஏற்படவேண்டும் என்றும், எண்ணுவது மானஸ—சுபாசுபங்கள் எனப்படும். பிறருக்கு உபகாரம் செய்வது சந்தனம் பூசுவது-பூமாலை போடுவது, பணிவிடைகள் செய்வது போன்றவைகளும், பிறரை அடிப்பது உதைப்பது முதலியனவும், சரீரத்தினுல் செய்யும் காயிக சுபாசுபங்கள் எனப்படும். அவ்விதம் வாயினுல் பிறரை ஸ்துதி செய்து கொண்டாடுவது நன்மைகளையே பேசுவது முதலியவைகளும், பிறரை நிந்தனை செய்து பேசுவது மனவருத்தம் அவமானம் ஏற்படும்படி பேசுவது முதலியவைகளும் வாசிக சுபாசுபங்கள் எனப்படும். எனக்கு வேருக சரீரமும் வாக்கும் மனதும் இல்லையாதலால் எப்படி இந்த புண்ய பாபங்கள் நேரும்? அதன் பயனுகவுள்ள சுகமும் துக்கமும் ஏற்படப் போவதில்லை. அதனுல்தான் முன் சுலோகத்தில் ஆக்ஷேபனை செய்தது பொருத்தமாக இருக்கிறது.

# अवधूतगीता

## श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

(முன் தொடர்ச்சி)

(அவதாரிகை) ஒவ்வொருவருக்கும் மனது என்று ஒரு வஸ்து இருக்கிறதே - அப்படி இருக்கும்போது - எப்படி மானஸிக கர்மாக்களும் இல்லையென்று கூறுவது எனின்,

मनो वै गगनाकारं मनो वै सर्वतोमुखम् ।
मनोऽतीतं मनः सर्वं न मनः परमार्थतः ॥ ९ ॥

மனது என்பது ஆகாயம் போன்றது. மனது எல்லாவிடத்திலும் பரவியுள்ளது. மனதை அறிந்துகொள்ள வேறு தனிப்பட்ட மனது ஒன்று இல்லை. ஆகையினால் மனதுக்குப் புலப்படாதது மனதாகும். உண்மையாகப் பார்த்தால் மனது என்று ஒரு வஸ்துவே கிடையாது.

N. B.: மனது ஆத்மாவைவிட வேறாக இருப்பின் அத்வைதம் முறிந்து போகும். மேலும் உலகில் உள்ள எல்லாப் பொருளுமே ஆத்மாவைத் தவிர வேறல்ல. ஆத்மாதான் உண்மைப்பொருள். மற்ற பிரபஞ்சம் எல்லாமே "கானல் நீர் போன்றது" என்று 3வது சுலோகத்தில் கூறப்பட்டது. அதையும் சேர்த்து எண்ணிப் பார்த்தால் "மனது" உண்மையில் தனிப்பொருள் அல்ல. எல்லாம் கற்பனையே! என்று நன்றாக புரிந்துகொள்ள முடிகிறது.

(அவதாரிகை) மனஸ் இல்லை என்று கூறும்போது ஆத்மா ப்ரத்யக்ஷமாக இருக்கிறார் என்றும் ப்ரத்யக்ஷமாக தெரியவில்லை என்றும் எவ்விதம் கூற முடியும் எனின்,

अहमेकमिदं सर्वं व्योमातीतं निरन्तरम् ।
पश्यामि कथमात्मानं प्रत्यक्षं वा तिरोहितम् ॥ १० ॥

தெரிகின்ற உலகமெல்லாமே அஹ் என்னும் ஆத்மாவேதான். அந்த பிரம்ம தத்வமான ஆத்மா "உப்புக்கட்டி" போல் நடுவில் வேறு இடைவெளியே இல்லாததாகும். ஆகாயம் எங்கும் பரவி இருப்பதால் வேறு இடைவெளி (ஆகாயம் இல்லாத பாகம்) என்று

ஒன்றும் கிடையாது. அவ்விதமான ஆகாயத்தைக் காட்டிலும் பிரஹ்ம தத்வம் ஸூக்ஷ்மமானது. இவ்விதமிருக்க எப்படி ஆத்மாவில் வேறு இடைவெளி இருப்பதாக ஊஹிக்க முடியும்? முடியாது. உண்மை இவ்விதமிருக்கிறபடியால், ஆத்மாவை எவ்விதம் பார்ப்பேன்? ப்ரத்யக்ஷம் என்றோ, மறைந்தது என்றோ எவ்விதம் கூறுவேன்? என்று ஆக்ஷேபமாக கூறுகிறார்.

N. B.: ஒருவன் ஒரு வஸ்துவை பார்க்கிறான் என்றால் கர்த்தா - கர்மா - க்ரியை என்ற வேற்றுமை மூன்றாக தெரிந்தாக வேண்டும். இராமன் யானையை பார்க்கிறான் என்று கொண்டால், இராமனும் யானையும் ஒன்றாக இல்லை. இராமன் வேறு - யானை வேறு - பார்வை வேறு. பார்வை என்றால் பார்க்கும் இராமன் - யானை - இவைகளைவிட வேறானது. ஒருவித்மான பாகுபாடும் இல்லாமல் எங்கும் பரவி நிற்கின்ற ஆத்மாவை "ப்ரத்யக்ஷம்" என்றும் "மறைந்து இருக்கின்றது" என்றும் எப்படிக் கூற முடியும்? கர்த்தா - கர்மா - கிரியை 'என்று "த்ரிபுடி"யுடன் கூடிய அனுபவம் எந்தவிதமான பேதமுமற்ற ஆத்மாவில் எப்படி ஏற்பட முடியும்? ஆகையினால்தான் மனஸ் - இல்லையென்பதால் எந்தவிதமான (சிக்கல்களும்) கஷ்டமும் ஏற்படாது என்று கூறுகிறார்.

(அவதாரிகை) மேற்சொன்ன கேள்வியை கேட்கிற "நீ"யும் பிரஹ்ம தத்வமும் ஒன்றே. அப்படியிருக்க ஒன்றாயிருப்பதை உணராமல் இருக்க காரணமே இல்லையே! என்கிறார்.

त्वमेवमेकं हि कथं न बुध्यसे समं हि सर्वेषु विमृष्टमव्ययम् ।
सदोदितोसि त्वमखण्डितः प्रभो दिवा च नक्तं च कथं हि मन्यसे ॥

முன்கூறிய இவ்விதமாகவுள்ள "நீ" நான்ஒருவனே உண்மையான தத்வம் என்று ஏன் உணரவில்லை? எப்போதும், என்றும், அழிவற்ற பிரஹ்ம தத்வமன்றோ, விமர்சனம் செய்து பார்க்கும் போது எல்லாவற்றிலும் விளங்குகிறது. समं என்ற சொல்லிற்கு ஸமமாக உள்ளது என்றும் பொருள். எப்போதும் உதித்தவராகவே இருக்கின்ற நீர் - துண்டிக்கப்படாதவர். ஸூர்யன் உதிக்கின்ற ஸமயம் பகல் என்றும், மறைகின்ற ஸமயம் இரவு என்றும் கூறுவதுண்டு.

ஹே ப்ரபோ! நீரோ என்றும் உதித்தவாறே உள்ள நித்ய ப்ரகாசமானவர். இவ்விதமிருக்க, பகல் - இரவு என்று கூறுவது போல் [illegible] என்று எவ்விதம் எண்ணுகிறீர், கண்களுக்கு புலப்படும் தன்மை கொண்டுள்ள வஸ்துவைத்தான், தெரியாவிடில்

மறைந்தது என்று கூற முடியும். ஷ தன்மை கொண்ட மறைந்த வஸ்துவை திரும்பக் காணும்போது ப்ரத்யக்ஷமாக தெரிகின்றது என்றும் கூற முடியும். ஆத்ம வஸ்துவிற்கோ மறைவு கிடையாது. மறைந்திருக்கும் தன்மையில்லாததால் பிரத்யக்ஷம் என்றும் கூற முடியாது. எப்போதும் அழிவற்ற ஒளி மயமாக இருப்பதால் ''தெரிந்தது'', ''மறைந்தது'' என்று எப்படி கூற முடியும் என்பது மிகவும் உயர்ந்த தத்வமாகும்.

(அவதாரிகை) முன் கூறியுள்ள அகண்ட ஸ்வரூபத்தையே மறுபடியும் விளக்குகிறார்.

आत्मानं सततं विद्धि सर्वत्रैकं निरन्तरम् ।
अहं ध्याता परं ध्येयं अखण्डं खण्ड्यते कथम् ॥ १२ ॥

எல்லா இடத்திலும் உள்ளதாகவும் (अन्तरः=भेदः) எவ்வித பேதமோ இடைவெளியோ இல்லாததாகவும் உள்ள ஒரே ஒரு ஆத்ம ஸ்வரூபம்தான் உண்மைப் பொருள். அதுவேதான் வியாபித்ததாக உள்ளது. நான் தியானிப்பவன். (தியானம் செய்கிறவன்) மிக உயர்ந்ததான பரம்பொருள் தியான விஷயமானது என்று எவ்விதம் அகண்டமான பொருள் துண்டிக்கப்படும்? துண்டிக்க முடியாது.

நான் கிருஷ்ணரை தியானிக்கிறேன் என்றால் உலகில் - நான் என்பவன் - தியானம் செய்பவன். கிருஷ்ணரை என்று கூறும் போது - கிருஷ்ணர் தியான விஷயமாகிறார். ध्यानम्-ध्याता-ध्येयं என்பது துண்டிக்கப்பட்ட பல பொருள் ஆகிவிடுகிறது.

ஜீவன் தியான கர்த்தா. பரம் பொருள் தியானிக்கப்படுகிற பொருள் என்பது பேத அனுபவம். இந்த அனுபவம் கற்பனையே! வாஸ்தவமல்ல. வாஸ்தவமாக பார்த்தால், ஜீவனும், பிரஹ்மமும் வேறலல என்பதுதானே வேதாந்த அனுபவம்! இந்த அனுபவம் நிலைத்திருப்பவனுக்கு எல்லாம் ஒன்றாகவே உள்ளது. வேறுபாடு கிடையாது.

இந்த நிலையில்தான் अखण्डं-कथं-खण्ड्यते ? என்று ஆக்ஷேபம் செய்வது பொருத்தமாகும். இந்த அனுபவத்தில்தான் - நான் என்றும் - பரம் என்றும் - தியானிப்பவன் - தியானிக்கப்படும் பொருள் என்றும் எவ்விதம் துண்டித்து வேறுபடுத்தி பேசுவது? எல்லாம் ஒன்றேதான் என்று இந்த ஸ்லோகத்தில் கூறப்படுகிறது.

" வளைந்த மூங்கில் அரசன் முடிமேல்
வளையாத மூங்கில் குறவன் காலிலே "

வளைந்த மூங்கில் பல்லக்குக்கு உதவுகிறது. அது அரசன் முடிக்கு மேல் ஸ்தானத்தை அடைகிறது. வளையாத மூங்கில் குறவன் காலடியில் தட்டி, கூடை பண்ணத்தான் உதவுகிறது.

" தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் (கு) அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது " —திருக்குறள்.

ஸ்ரீராமசந்திர மூர்த்தி பிதுர்வாக்கிய பரிபாலனத்துக்காக 14 வருஷம் கானகம் செல்வதற்குமுன் தன்தாய் கௌசல்யா தேவியை நமஸ்கரித்தார். அதற்கு அவள்

" யம்பாலயஸி தர்மம் த்வம் த்ருத்யாச நியமேன ச
ஸவை ராகவசார்த்தூல தர்மஸ்த்வாம் அபிரக்ஷது "

எந்த பிதுர்வாக்ய பரிபாலன தர்மத்தை அனுஷ்டிப்பதற்கு காட்டிற்கு செல்லுகிறாயோ, அந்த தர்மமே உன்னை ரக்ஷிக்கும் என்று ஆசீர்வதித்தாள். 14 வருஷங்கள் வனவாஸம் இருந்து, அரிய பெரிய செயல்களை செய்துவிட்டு அயோத்தி மாநகரை அடைந்து பட்டாபிஷேகம் செய்துகொண்டு நம் பாரத தேசத்தை ஆண்டு வந்தார் பிரபு ஸ்ரீ ராமசந்திர மூர்த்தி.

---

# अवधूतगीता

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

(முன் தொடர்ச்சி)

அவதாரிகை — வேதாந்த சாஸ்திரத்தில் எல்லா பொருள்களுக்கும் ஆறுவிதமான (भावविकारः) மாறுபாடுகள் உண்டு என்று கூறப்பட்டுள்ளது. (जायते - अस्ति - वर्धते - विपरिणमते - अपक्षीयते - नश्यति என்ற षड्भावविकाराः) உண்டாகிறது - இருக்கிறது - வளருகிறது - மாறுகிறது - குறைவடைகிறது - அழிந்துவிடுகிறது என்று ஆறு விதமான மாறுபாடுகள் எல்லா வஸ்துக்களுக்கும் உண்டு. ஆனால் ஆத்மாவிற்கு இந்த ஆறு விதமான மாறுபாடுகளும் கிடையாது. ஆத்மாவிற்கு உத்பத்தியே இல்லை. எப்போதும் அழிவற்ற நித்தியஸ்வரூபமாக திகழ்கிறது என்பது திண்ணம். இந்த உண்மையையே பகவத்கீதையிலும் கூட न जायते म्रियते वा என்ற சுலோகத்திலும் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறார். இவ்விடத்திலும் ஸ்ரீதத்தாத்ரேயர் இதையே கூறுகிறார்.

न जातो न मृतोसि त्वं न ते देहः कदाचन-
सर्वं ब्रह्मेति विख्यातं ब्रवीति बहुधा श्रुतिः ॥

त्वं நீ नजातोसि பிறந்தவனுமல்ல नमृतोसि இறந்தவனுமல்ல कदाचन ஒருபொழுதும் ते உனக்கு न देहः உடலும் கிடையாது सर्वं ब्रह्मेति विख्यातम् உலகில் எல்லாமே மிகவும் பிரஸித்தமான ப்ரஹ்மம்தான் என்று श्रुतिः வேதமானது (உபநிஷத்துக்கள்) बहुधा பலவிதமாக பலதடவை ब्रवीति தெளிவாகக் கூறுகிறது. இந்த சுலோகத்தில் பிறப்பும் இறப்பும் இல்லை என்று கூறியதிலிருந்தே மற்ற விகாரங்களும் இல்லை என்று கூறியதாக ஆகின்றன.

(தொடரும்)

# अवधूतगीता

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

(முன் தொடர்ச்சி)

सबाह्याभ्यन्तरोऽसि त्वं शिवः सर्वत्र सर्वदा ।
इतस्ततः कथं भ्रान्तः प्रधावसि पिशाचवत् ॥ १४ ॥

ஒருவீடு என்று இருந்தால் அதற்கு வெளியில் உள்ளது बाह्यं எனப்படும். வீட்டிற்குள் இருப்பதை आभ्यन्तरं உள்புறம் உள்ளது என்று கூறுவதுண்டு. सर्वत्र எல்லா இடத்திலும் सर्वदा எல்லா காலத்திலும் शिवः சிவஸ்வரூபமாக உள்ளவனே त्वं நீ (இவ்விதமாக உள்ளே—வெளியிலே—என்ற பாகுபாடு இல்லாமல் பூர்ணமாகவே உள்ளவன் நீ) இவ்விதமிருக்கும்போது इतस्ततः இங்குமங்கும் कथं भ्रान्तः எவ்விதம் பிரமைபிடித்தவனாக पिशाचवत् பிசாசுபோல प्रधावसि ஓடுகிறாய். உன்னைத்தவிர வேறு வஸ்துவே இல்லையே! பிசாசு சுற்றுவதுபோல எங்கே பார்த்தாலும் பறந்து கொண்டு ஓடுகிறாயே! எதற்காக ஓடுகிறாய். யாது பயனைப்பெற வேண்டி ஓடுகிறாய். எல்லா வஸ்துவுமே உன்னைத் தவிர வேறு இல்லையே. எதற்காக ஓடவேண்டும். ஓடாதே என்கிறார்.

அவதாரிகை: இதையே மறுபடியும் விஸ்தாரமாக வேறுவிதமாகக் கூறுகிறார்.

संयोगश्च वियोगश्च वर्तते न च ते न मे ।
न त्वं नाहं जगन्नेदं सर्वमात्मैव केवलम् ॥ १५ ॥

ஒரு பொருள் மற்றொரு பொருளுடன் சேரும்போது அந்த சேர்க்கைக்கு ஸம்யோகம் என்று பெயர். சேர்ந்துள்ள அதே வஸ்துக்கள் தனித்தனியாக பிரியும்போது வியோகம் என்பது உண்டு. இந்த ஸம்யோகமோ வியோகமோ எங்கும் நிரம்பியுள்ளதற்கு ஏற்படாது. न त्वं நீயென்று ஒன்று தனித்து இல்லை. नाहं நான் என்பதும் இவ்விதமே தனியாக இல்லை न इदं जगत् இவ்விதம் தெரிகின்ற உலகம் என்பதும் பரதத்வத்தை தவிர வேறல்ல. सर्वं எல்லாமே आत्मैव केवलं ஸ்வபாவமாக தனிப்பட்டு நிரம்பி உள்ள ஆத்ம தத்துவம்தான். இந்த கருத்தைக்கொண்டு சேர்க்கை பிரிவு என்பது எனக்குமில்லை, உனக்குமேயில்லை. நான், நீ, உலகம் என்று கூறுவதற்கு வேண்டிய உண்மைப்பொருள் இல்லையே! எப்படி நான், நீ, உலகம். சேர்க்கை, பிரிவு

என்றெல்லாம் எண்ணிக்கொண்டு ஓடி சிரமமடைகிருய் — சிரமம் வேண்டாம் என்கிருர்.

அவதாரிகை : இவ்விதம் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து விஷயங்களும் உனக்காகவென்று இல்லை. நீயும் அவைகளுக்காக இல்லை. ஏனென்ருல் நீ ஒருவனே "தத்வமான" உண்மைப்பொருளாக உள்ளவன். மற்றவை இருப்பதாக தோற்றமே. கானலில் நீர் இருப்பதாக தோன்றுவதுபோல் அல்லவா தோன்றுகின்றன. அவைகளைக் கண்டு ஏன் பரிதவிக் கிருய் ?

शब्दादि पञ्चकस्यास्य नैवासि त्वं न ते पुनः ।
त्वमेव परमं तत्त्वं अतः किं परितप्यसे ॥ १६ ॥

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற இந்த ஐந்து விஷயத்துக்காக त्वं நீ नैवासि இருக்கவில்லை ते पुनः அந்த ஐந்து விஷயங்களும்கூட न உண்மையில் உள்ளவைகளுமல்ல त्वमेव நீ ஒருவன்தான் परं மிகவும் உயர்ந்ததான तत्त्वं உண்மைப்பொருள் ஆகிருய். अतः ஆகையினுல் किं எதற்காக (ஏன்) परितप्यसे பரிதவிக்கிருய். காதினுல் நல்ல சப்தம் கேட்கவும் உடம்பினுல் (த்வக் என்ற புலனுல்) மிருதுவான உணர்ச்சிக்காகவும், கண் களால் நல்ல அழகான உருவத்தைக் காணவும், நாக்கினுல் நல்ல சுவையுள்ள உண்டியை வேண்டியும், மூக்கினுல் நறுமணமுள்ள வாஸனைப் பொருள்களை நுகரவேண்டியும் வேகத்துடன் பரிதவிக் கிருய் என்கிருர்.

जन्म मृत्युर्न ते चित्तं बन्धमोक्षौ शुभाशुभौ ।
कथं रोदिषि रे वत्स नाम रूपं न ते न मे ॥ १७ ॥

रे वत्स குழந்தாய் जन्ममृत्युः न ते உனக்கு பிறப்பும் இறப்பும் இல்லை चित्तं மனது என்பதும் शुभाशुभौ நன்மை தீமைகளும் बन्धमोक्षौ பந்தம், மோக்ஷம் என்பவைகளும் (அல்லது நன்மை தீமைகளாகிய-பந்தம் மோக்ஷம் இவைகளும்) नाम रूपं நாமாவும் ரூபமும்கூட न ते உனக்கும் இல்லை न मे எனக்கும்இல்லை. இவ்விதம் இருக்கையில் कथं रोदिषि ? எப்படி அழுகிருய், ஏன் அழுகிருய் ? रोदनं அழுகை பொருத்தமில்லையே ! இவ்விதம் 17 வது சுலோ கத்தில் "சித்தம்" என்பது மனதாகும். அந்த சித்தமே இல்லை என்றதால், மனதை காரணமாகக் கொண்டு ஏற்படக்கூடிய பந்தம் மோக்ஷம், சுபம், அசுபம் (நன்மை-தீமை) நாமரூபம்-ஜன்ம மரணம் (பிறப்பு-இறப்பு) எல்லாமே, உபதேசிக்கின்ற எனக்கும் சிரவணம் செய்கின்ற உனக்கும்கூட இல்லை என்று கூறப்பட்டு இருக்கிறது.

मनः एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः।
बन्धाय विषयासक्तं मुक्त्यै निर्विषयं स्मृतम्॥

என்று மனதினுல்தான் எல்லாவிதமான வியவஹாரங்களும் ஏற்படுகின்றன. அவ்விதமான மனதே இல்லையென்ருல், மனதைக் கொண்டு ஏற்படுகின்ற ஸகல விவஹாரங்களுமே இல்லையென்று ஆகிவிடும். இதுவே உயர்ந்த நிலை, இந்த அனுபவம், உபதேசிக்கப்பட்டுள்ளது.

अहो चित्त कथं भ्रान्तः प्रधावसि पिशाचवत्।
अभिन्नं पश्य चात्मानं रागत्यागात् सुखी भव॥ १८॥

चित्त ஏ மனமே! कथं ஏன் भ्रान्तः பித்து பிடித்தவனுகி पिशाचवत् பிசாசுபோல प्रधावसि ஓடித்திரிந்து அலைகிருய். अहो ஆச்சரியமாக இருக்கிறது. आत्मानं உன்னை (தன்னை) अभिन्नं च ஆத்ம தத்துவத்தைவிட்டு தனிப்பட்டதாக இல்லையென்று पश्य பார், அறிந்துகொண்டு யோசனைசெய். இவ்விதமான த்ருஷ்டியினுல் உனக்கு எந்த விஷயத்திலும் ஆசை ஏற்படாது. இவ்விதம் रागत्यागात् ஆசையையே விட்டதால सुखी भव ஸுகமடைந்தவனுகயிரு. தன்னைவிட்டு வேறுபொருள் இருந்தால் அதில் ஆசை ஏற்படும். எல்லாமே ஆத்மதத்வம தவிர வேறில்லை என்று அனுபவம் ஏற்படும்போது, ஆசை இல்லை. ஆசை தோன்ருததால் துக்கமில்லை. துக்கமல்லாதபோது, ஆத்மஸுகம வெளிப்படுகிறது. இந்த உண்மையைத்தான் रागत्यागात् सुखी भव என்றுகூறுகிருர்.

त्वमेव तत्त्वं हि विकारवर्जितं निष्कम्पमेकं हि विमोक्षविग्रहम्।
न ते च रागो-ह्यथवा विरागः कथं हि सन्तप्यसि कामकामतः॥

विकारवर्जितं எப்போதும் எந்தவிதமான மாறுதலையும் அடையாமல் இருக்கிற तत्त्वं உண்மைப்பொருள் त्वमेव हि நீயே! निष्कम्पं (சலனமற்ற) அசைவற்றதும் विमोक्ष विग्रहं மோக்ஷமே தன் உருவமாகவும் உள்ள एकं ஒரே வஸ்துவாகவும் உள்ள तत्त्वम् உண்மைப்பொருள் हि நீ ஒருவனேதான் रागः ஆசையோ अथवा विरागः அல்லது வைராக்யமோ न ते உனக்கு கிடையாது कामकामतः ஒவ்வொரு வஸ்துவையும் பார்த்து இஷ்டம்போல் कथं हि सन्तप्यसि எவ்விதம் தாபங்களை அடைகிருய். ஆசை ஏற்பட்டு பிறகு விலகினுல் அவனுக்கு வைராக்யம் ஏற்பட்டதாக கூறலாம். ஆசை ஏற்படவே காரணமில்லாததால் ஆசை, வைராக்யம் இரண்டும் இல்லை என்று இங்கு கூறப்பட்டிருக்கிறது.

Avoid Janavasam Expenses
Avoid Lavish Marriage Expenses
Avoid Taking Dowry in Cash or Kind
Give More Importance to Vaithiga Karma

மாப்பிள்ளை அழைப்பு செலவுகளையும்,
ஆடம்பரமான திருமணச் செலவுகளையும்,
வரதட்சணை வாங்குவதையும் தவிர்க்கவும்.
வைதீக காரியங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கவும்.

கடவுளைக் கும்பிடு, கஷ்டங்கள் அகலும்.
விபூதி அணிந்துகொள், வியாதிகள் அகலும்.
திருமண் அணிந்துகொள் தீவினைகள் விலகும்.
ஹிந்து தர்மத்தை கடைப்பிடி
இன்பமாக வாழ்! ஒற்றுமையாய் இரு!

J. பாலராமநாதன், BHEL, திருச்சி—14.

27. சாம்பவீ சாதஹ்ருல்லேகா ஸமயா பரபோதினீ ।
கௌல பஞ்சாக்ஷரீ பஞ்ச தசார்ணாநனுத்தராத்மிகா ॥

28. ஷோடசீ பூர்த்தி வித்யாச மஹா த்ரிபுர ஸுந்தரீ ।
ஊர்த்வ ஸ்ரீ பாதுகா பூர்வம் சரணாந்தம் குருக்ரமாத் ॥

29. பச்சாதனுத்தரம் வந்தே பரப்ரஹ்ம ஸ்வரூபிணீம் ।
அனுத்தராம்நாய மனூநாக்ஞா சக்ரே விபாவயேத் ॥

30. ஸ்ரீநாத குருமந்த்ராதீன் மண்டலாந்தம் யதாக்ரமம் ।
ஸப்தகோடி மஹா மந்த்ரம் த்வாதசாந்தே ஸதா ஸ்மரேத் ॥

31. சுசிர்வாப்யசுசிர்வாபி கச்சன் ஸ்திஷ்டன் ஸ்வபந்நபி ।
மந்த்ரைக சரணோ வித்வாந் மனஸாபி ஸதா ஸ்மரன் ॥

32. தத்தத் ஸித்திம்ச ஸாஹஸ்ரம் ஜபேத் ஸாதக புங்கவ: ।
ஜபாந்தே சுத்த மாலாச ஆம்னாய ஸ்தோத்ரமுத்தமம் ॥

33. லலிதாநாம ஸாஹஸ்ரம் ஸர்வ பூர்த்திகரம் ஸ்தவம் ।
ஸ்தவராஜம் ச் பஞ்சைதே பக்த: ப்ரதி தினம் படேத் ॥

34. புக்த்வா போகான் யதாகாமம் ஸர்வபூதஹிதே ரத: ।
ஸபார்யா புத்ர ஸௌபாக்ய: ஸபூதி: பசுமான் பவேத் ॥

35. ஏகவாரம் ஜபேதேதத் கோடி யக்ஞ பலம் லபேத் ।
ஏதத் விக்ஞான மாத்ரேண ஸர்வேஷாம் தேசிகோத்தம: ।
சிவ ஸாயுஜ்ய மாப்னோதி சிவயோரேவ சாஸனாத் ॥

இதி ஸ்ரீருத்ரயாமள தந்த்ரே உமா மஹேச்வர
ஸம்வாதே சிவேன விரசிதம் ஆம்னாய ஸ்தோத்ரம்
தத: லலிதா ஸஹஸ்ரநாம த்ரிசத்யௌ
பூர்வோத்தராங்க ஸஹிதே படிதவ்யே ॥





சுபம் !

# अवधूतगीता

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

वदन्तिश्रुतयः सर्वाः निर्गुणं शुद्धमव्ययम् ।
अशरीरं समतत्त्वं तन्मां विद्धि न संशयः ॥ २० ॥

सर्वाः श्रुतयः எல்லா வேத வாக்யங்களும் (உபநிஷத்துக்களும்) तत्त्वं உண்மைப் பொருளான ஆத்மஸ்வருபத்தை समं எங்கும் ஒரேமாதிரி வியாபித்து இருப்பதாகவும் निर्गुणं எந்த விதமான குணசம்பந்தமற்றதாகவும் अव्ययं எந்தவிதமானகுறை பாடுகளும் அற்றதாகவும் शुद्धं மிகவும் தூய்மையாகவுள்ளதாகவும் अशरीरं சரீர ஸம்பந்தமில்லாததாகவும் वदन्ति கூறுகின்றன तन्मां विद्धि இவ்விதமான பரம்பொருளாகவே என்னைத் தெரிந்து கொள்வாயாக न संशयः ! இவ்விஷயத்தில் சந்தேகமேயில்லை ! मां, तत् – विद्धि என்னை அந்த பரம்பொருளாக தெரிந்துகொள் என்றால், நானும் நீயும் வேறல்ல, நானும் பரமாத்மாவும் வேறல்ல — நீயும் பரமாத்மாவும் கூட வேறல்ல — நான் — நீ— பரமாத்மா என்று கூறப்படுகின்ற எல்லாமே ஒன்றுதான் என்ற உயர்ந்தநிலை கூறப்பட்டிருக்கிறது.

இவ்விதம் உயர்ந்த பரமாத்ம ஸ்வருபத்தில் வேறுபாடுகள் ஒன்றும் இல்லை என்று கூறப்பட்டது.

இந்த இரு ஹம்ஸங்கள் மலர்ந்த ஞானத்தாமரைப் புஷ்பத்தின் ஆனந்தமாகிய மகரந்தத்தை விரும்பி அனுபவிக்கின்றன. மஹான்களின் மனங்களாகிய ஏரிகளில் நீந்தி விளையாடுகின்றன. இந்த இரு ஹம்ஸங்களை த்யானம் செய்கிறேன். அவைகளுடைய இன்பப் பேச்சுக்களிலிருந்தே 18 வித்தைகளும் உண்டாயின. (வேதங்கள் 4; சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ் ஜோதிஷம் ஆகிய 6; மீமாம்ஸை, ந்யாயம், புராணம், தர்ம சாஸ்திரம் ஆகிய 4; ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம் நீதி சாஸ்திரம் ஆகிய 4 — ஆக 18) அவை தோஷங்களிலிருந்து எல்லா குணங்களையும் பிரிக்கின்றன. நீரிலிருந்து பாலைப்பிரிப்பது போல். (பலன் : அரிஷ்ட நிவாரணம், வாதநோய் குணமாதல்)

I worship the pair of indascribable Swans, which are relishing the honey in the blossoming Lotus flower and are moving about in the Manasa Lake (Minds of great men), from whose talks the 18 Vidyas developed, and which distinguishes all good from evil as milk from water. (Meditation in the Anahata Chakra as 'Hamsa Soham - Soham Hamsa' is indicated).

புண்ணிய யாத்திரைப் பகுதி

# வெள்ளிப் பனிமலை

(தொடர்ச்சி)

(C. P. ராமஸ்வாமி)

கௌரீகுண்டிலிருந்து புறப்பட்டால் அடுத்த முகாம் கேதார் நாத் தான். நடைபாதை தூரம் 7 மைல்கள் தான். ஆனால் 7000 அடி உயரத்தில் இருக்கும் கௌரீ குண்டிலிருந்து 11750 அடி உயரத்தில் கேதார் இருப்பதால் 4750 அடி மலையேறவேண்டும். ஆகையால் பாதை செங்குத்தாகவே இருக்கும். கௌரீ குண்டிலிருந்தே கேதார் மலைகளின் பனி மூடிய சிகரங்களைப் பார்க்கலாம். இந்த 7 மைல் பாதை நெடுக இயற்கையின் ஸௌந்தர்யமும் ஹிமவானின் காம்பீர்யமும் உள்ளத்தை அள்ளுகிறது. நடக்க நடக்க மேலே ஏற ஏற, உடல் கனம் குறைந்து குளிர் மிகுதியினால் சற்றே மறத்தும் போகிறது. ஆனால் உள்ளம் நிறைந்தே இருக்கிறது. இயற்கையின் அழகிலும் பனி முடிகளின் காம்பீர்யத்திலும் எண்ணற்ற மலையருவிகளின் சலசலவென்ற சத்தத்திலும் ஆண்டவன் அருளை நினைத்து மெய்மறந்து, கடும் குளிரையும் நடையின் சிரமத்தையும் அறியாமலேயே மேலே ஏறிவிடுகிறோம்.

கேதார்நாத்தில் குளிர் தாங்கமுடியாமலிருந்தது. தண்ணீரைக் கையால் தொடக்கூட இயலவில்லை. இந்த கடும் குளிரில் அங்கு மரங்கள்கூட முளைத்து வளருவதில்லை. கோவில் மிகவும் சிறியதுதான். கேதாரேச்வரர் (பரமசிவன்) ஸ்வயம்பூ லிங்க வடிவிலோ விக்கிரக வடிவிலோ இல்லை.

தரை மட்டத்திலிருந்து சுமார் 3 அடி உயரத்துக்கு எழும்பியுள்ள ஒரு பாறையுச்சியே லிங்கமாகிறது. படுத்திருக்கும் ஒரு மாட்டின் முதுகுப்புறம் போலிருக்கும். பூஜையை நாமேதான் செய்யவேண்டும். மந்திரங்களை பண்டா சொல்லித்தருவார். மந்தாகினி கங்கையிலிருந்து நீர் கொணர்ந்து அபிஷேகம் செய்து, நெய் தடவி (நெய் கலபோல் கெட்டியாக இருக்கும்) புஷ்பம், கோதுமை, பருப்பு, குங்குமம் இவைகளால் பூஜை செய்து, மிட்டாய் (பேடா) நிவேதனம் செய்து, கற்பூர ஆரத்தி செய்கிறோம். பிராகாரத்திற்குள் கணேசர், பார்வதி, ஆதிசங்கரர் சிலைகள் உள்ளன. வெளியே கோவிலைச் சுற்றிப் பனிமுடிய மலைகள் அருகிலேயே பயங்கரமாக [illegible]க்கும் மந்தாகினி கங்கை. கேதார் மலையுச்சியிலிருந்தே பிரவாஹமாக கங்கை கீழே

விழுகிறதையும் கண்குளிரப் பார்க்கலாம். கோயிலின் அருகிலேயே ஒரு மண்டபம் அமைத்து அதில் மிகப்பெரிய ஆதிசங்கரர் சிலை வைக்கப்பட்டிருக்கிறது. ஒரு கையினால் தண்டியைப் பிடித்துக்கொண்டும் மறு கையினால் அபயஹஸ்தம் காட்டியும் இருக்கும். அந்த சிலையின் முகத்தில் அருளும் அழகும் விளையாடுகிறது. பார்த்துக் கொண்டேயிருக்கலாம் போலிருக்கும். ஆனால் அண்ணாந்துதான் பார்க்கவேண்டும் சிலை மிக உயரமாக இருப்பதால். கோவிலுக்குப் பின்புறம் சுமார் 500 அடி தொலைவில் ஒரு சிறு கர்ப்பக்கிருஹம் சுமார் 8 அடி சதுரத்தில் உள்ளது. அதற்குள் ஒரு சிறு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. இதை ஆதிசங்கரர் ஸமாதி என்று சிலாசாஸனம் செய்து வைத்திருக்கிறார்கள். வரலாற்று ஆராய்ச்சியாளர்களிடையே ஆதிசங்கரர் எங்கு ஸமாதியானார்கள் என்பதைப் பற்றி இன்னும் விவாதங்களும் பலவித அபிப்பிராயங்களும் நிலவிவரும் நிலையில் எது நிஜம் என்று நிர்ணயிக்க இயலாமல் இருக்கிறது. ஆனாலும் அந்த அபூர்வ அவதார மஹா புருஷரை மனதில் நினைத்துக்கொண்டு பக்தியுடன் கும்பிடுகிறோம்.

இரவு சத்திரத்தில் தங்குகிறோம். இரண்டு ரஜாய்களை கீழே விரித்து மேலும் இரண்டினால் உடலை கால்முதல் தலைமுடிய மூடிக் கொண்டும் படுத்திருந்தும்கூட குளிர் நடுக்கத்தினால் தூங்க முடியவில்லை. மூச்சு விடுவதும் சற்றுக் கடினமாக இருந்தது. இந்த உயரத்தில் பிராணவாயு குறைவாக இருப்பதே காரணம். வாந்தி வருவதுபோலவும் தோன்றிற்று. இந்தக் கடும் குளிரினால் சற்றும் பாதிக்கப்படாமல் நம்மை வருத்திக்கொண்டிருக்கும் மூட்டைப் பூச்சிகளின்மேல் பொறாமையாகவும் இருந்தது. இப்படியெல்லாம் இருந்தாலும் எல்லாவற்றையும மீறி மனதிற்குள்தான் எத்தனை சந்துஷ்டி! துக்கங்கள் இல்லாமல் சுகம் ஏது!

நான் கேதாரேச்வரர் தரிசனம் செய்த தினம் (1964 புரட்டாசி புனர்வசு) எனது 52-வது பிறந்தநாள். ஆகையினால் மற்றெல்லோரையும்விட நான் மகிழ்ச்சியாக இருந்தேன் என்பதையும் சொல்லிக்கொள்ளவேண்டும்.

மறுநாள் காலை மறுபடியும் தரிசனம் பூஜைகள் செய்துவிட்டு வந்த வழியே கௌரீ குண்டிற்கு இறங்குகிறோம். அங்கு காலை ஆகாரத்தை முடித்துக்கொண்டு ராம்பூர் குப்தகாசி வழியாக குண்டுச்சட்டி வந்துசேர்ந்து அங்கிருந்து பஸ்ஸில் ருத்திரப்பிரயாகை வந்து பத்ரீநாத் பாதையில் (பஸ்ஸில்தான்) செல்ல ஆரம்பித்தோம். பயணம் துவங்கியது முதலே இரவு ஒருவேளைதான் அன்னச்சாப்பாடு, இரவு தங்குமிடத்தில்தான் சமையல் செய்ய இயலும் என்பதால். பகல்வேளை பூராவும் பயணம். ஆங்காங்கே

கிடைக்கும் காய்ச்சிய பால், கையில் வைத்திருக்கும் பிஸ்கட்டுகள், உலர்ந்த பழவகைகள், இவைகள்தான் பகல் ஆகாரம். ஆயினும் எந்தவிதமான பலஹீனமும் தோன்றவில்லை. இடத்துக்கும் நிலைமைக்கும் தகுந்தபடி நமது உடலையும் பழக்கவழக்கங்களையும் மாற்றித்தரும் ஆண்டவனின் விந்தைச் செயலை என்னவென்பது?

(யாத்திரை தொடருகிறது)

---

# अवधूतगीता

## அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

तत्वमस्यादि वाक्यैश्च स्वात्माहि प्रतिपादितः ।
नेति नेति श्रुतिर्ब्रूयादनृतं पाञ्चभौतिकम् ॥ २५ ॥

அவதாரிகை: இந்த விஷயத்தையே வேதங்களில் உள்ள மஹாவாக்யங்களும் நன்கு விளக்கிக் கூறுகின்றன. पाञ्चभौतिकं பஞ்ச பூதங்களின் சேர்க்கையினால் அமைந்திருக்கிற உலகம், உடல் புலன்கள், விஷயங்கள், பிராணன் முதலிய ஐந்து வாயுக்கள் எல்லாமே अनृतं மித்யையானவை - (பொய்யான) தோற்றம்தவிர வேறில்லை (உண்மையான பொருள் அல்ல) என்பதை नेति नेति இவ்விதமில்லை இவ்விதமில்லை என்று बृहदारण्यक உபநிஷத்தில் मूर्तामूर्त ப்ராம்ஹணத்தில் கூறப்படுகிறது श्रुतिर्हि வேத ஸமுதாய மானது तत्वमस्यादि தத்வமஸி—அஹம் ப்ரஹ்மாஸ்மி முதலியது களான वाक्यैश्च மஹாவாக்யங்களினாலும் स्वात्मा தன்தன்னுடைய ஆத்மாவானது (எவ்விதமான குண ஸம்பந்தமுமில்லாதது என்று) प्रतिपादितः நன்கு விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது—மஹாவாக்யங் களுள் முக்கியமானது तत्वमसि என்பதாகும். இந்த வாக்யத்தில் तत् - त्वं - असि என்று மூன்று பதங்கள் உள்ளன तदिति परोक्षे विजानीयात् என்ற பிரகாரம் तत् என்ற பதத்திற்கு பிரத்யக்ஷமாக தெரியாததும், ஸகல சக்தி வாய்ந்ததும், ஸர்வக்ஞமாகவும் உள்ள चैतन्यं ஞானவடிவான ஆத்மதத்வம் என்று பொருள். ஒரு பதத் திற்கு அர்த்தம் கூறும்பொழுது எந்த இடத்தில் என்பதையும் பார்த்துக்கொள்ள வேண்டும். அத்துடன் तत् என்ற சொல்லானது

முன் தொடர்ந்துள்ள பொருளையே குறிக்கும் என்பதும் சாஸ்திர ஸித்தாந்தம். तच्छब्दः स्वपूर्वपरामर्शी என்று கூறுவார்கள். இவ்விதம் பார்க்கும்போது இந்த மஹா வாக்யம் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆறுவது அத்யாயத்தில் வருகிறது. இந்த 6 வது அத்யாயத்தில் ஆத்மதத்வமே விளக்கப்படுகிறது. இந்த ப்ரகரணத்தில் स आत्मा பரமாத்ம தத்வம் இவ்விதம் உள்ளது என்று 9 இடங்களில் விளக்கி त्वं நீ तत् அதுவாக असि இருக்கிறாய் என்று கூறுகிறது. இந்த இடத்தில் तत् - त्वं - असि என்று கூறும்போது நீயும் அதுவும் வேறல்ல, ஒன்றுதான் என்று பொருள் கொள்ள வேண்டும். सामानाधिकरण्यम् என்று ஒரு முறையுண்டு. இவ்விதம் ஸாமானாதிகரண்யம் என்பது பலவகை உண்டு. அதில் ऐक्ये (ஐக்யே) ஸாமாநாதிகரண்யம் என்பதுதான் இங்கு பொருத்தம். ஐக்யம் என்றால் வேறில்லை, ஒன்றே என்று பொருள். त्वं என்ற பதம் முன் உள்ள ஜீவனைக் குறிக்கும். சிற்றறிவு உள்ளவனும் குறைந்த சில சக்திகள் உள்ளவனுமான ஜீவன் என்று பொருள். असि என்பதற்கு இருக்கிறாய் என்று பொருள். இந்த இடத்தில் மற்றொரு உதாரணத்தை எடுத்துக் கொண்டால் அர்த்தம் நன்கு விளங்கும். அதாவது உலகில் முன் ஒரு சமயத்தில் பார்த்த ஒரு மனிதனை பிறகு பல நாட்கள் கழித்து பார்க்கும்போது ஒரு அனுபவம் ஏற்படும். இதை சாஸ்திரங்களில் सोयं देवदत्तः என்று கூறுவதுண்டு. सः—अयं—देवदत्तः என்று மூன்று பதம். सः என்றால் முன்னொரு சமயம் பார்க்கப்பட்டவனும் अयं தற்சமயம் எதிரில் பார்க்கப்படுபவனுமான देवदत्तः தேவதத்தன் என்ற மனிதன் ஒருவனேதான் — வேறல்ல என்று பொருள். सः அந்த காலத்தில் அந்த இடத்தில் பார்க்கப்பட்ட देवदत्तः தேவ தத்தன் என்பவனே अयं இந்த இடத்தில் இந்த சமயத்தில் பார்க்கப்படுபவன் என்று பொருள். सः என்ற பதத்திற்கு (காலம்-தேசம் இவைகளை விட்டுவிட்டு) தேவதத்தன் என்பதை மட்டும் எடுத்துக் கொண்டு अयं என்ற பதத்திற்கும் (இந்த காலம் — இந்த இடம் என்பதை விட்டுவிட்டு) தேவதத்தன் என்பதை மட்டும் எடுத்துக் கொண்டு, தேவதத்த: என்ற பதத்திற்கும் தேவதத்தனை மட்டும் எடுத்துக்கொண்டால் सः अयं देवदत्तः என்ற பதத்திற்கு மொத்தமான அர்த்தம் தேவதத்தன் ஒருவன்தான். காலம் தேசம் மட்டும் மாறுமல்லாமல் அவனது வாஸ்தவஸ்வரூபம் மாறுவதில்லை என்று புரிந்துகொண்டு அவனிடம் பழைய கதைகளை பேசுகிறோமல்லவா? ஆள்மாறவில்லை என்று புரிவதுபோல் எடுத்துக்கொண்டால் எப்படி அனுபவத்திற்கு சரியாகிறதோ, அவ்விதம் இங்கும் ஸாமாநாதி

கரண்யம் பொருந்தும். ஒரே விபக்தி, ஒரே வசனம் சேர்ந்து வந்தால் மேற்கூறிய ஸாமானாதிகரண்யம் என்று கூறுவது.

तत्-त्वं-असि மூன்றும் ஏகவசனமாகவும், ஒரே முதல் வேற்றுமையாகவும் வருகிறது. असि என்ற பதத்திற்கு अस्मद्युष्मदः என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதை இவ்விடத்தில் விவரிப்பது ஸாத்யமல்ல என்று விட்டுவிட நேருகிறது.

त्वं குறைந்த அறிவு, சக்தி கொண்ட ஜீவஸ்வரூபமான நீ तत् நிறைந்த அறிவு, ஸர்வசக்தி கொண்ட பரமாத்ம தத்வமாக असि இருக்கிறாய். உனக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் கிடையாது. இரண்டும் ஒன்றே. இந்த இடத்திலும் सोऽयं देवदत्तः என்ற இடத்தில்போல், அறிவு சக்திகளுடைய வேற்றுமைகளை விட்டு விட்டு தனிப்பட்ட சைதன்ய ரூபமான ஜ்ஞான ஸ்வரூபத்தை மட்டும் எடுத்துக்கொண்டால் மஹாவாக்யங்கள் எல்லா குறைகளையும் விட்டு தனிப்பட்ட ஞான ஸ்வரூபமான ஆத்மா இரண்டு (ஜீவாத்ம—பரமாத்மாக்களுள்) ம் ஒன்றே, வேறில்லை என்பதை விளக்கி ஆத்மாவைப்பற்றி நன்கு விளக்கிக் கூறுகின்றன என்று கூறப்பட்டது. மஹாவாக்யங்கள் ஆத்மஸ்வரூபத்தை நன்கு விளக்கிக் கூறுகின்றன. अवान्तर वाक्यங்களான नेति नेति முதலியவைகள் நமக்கு நேரில் காண்கின்றதான பிரபஞ்சம், பூதங்கள், பௌதிகங்கள், ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்கள் எல்லாமே मिथ्या பொய்மையானது, ஆனால் தோற்றமளிக்கும் வஸ்துக்கள் என்று கூறுகின்றன. இவ்விதம் உபநிஷத்துக்களும், மஹாவாக்யங்களும் ஆத்மதத்வத்தையே நன்றாக விளக்கிக் காட்டுகின்றன என்ற தத்வார்த்தத்தை இந்த 25 வது சுலோகத்தில் உபதேசிக்கிறதாகக் கொள்ளவேண்டும்.

(தொடரும்)

# अवधूतगीता

# அவதூத கீதை

## श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேச்வர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

व्याप्य व्यापक निर्मुक्तं त्वमेकः सफलो यदि ।
प्रत्यक्षं च परोक्षं च ह्यात्मानं मन्यसे कथम् ॥ ३५ ॥

அவதாரிகை : தத்வஜ்ஞானம் ஏற்பட்டவர்களுக்கு பிரத்
யக்ஷம் என்றோ, பிரத்யக்ஷமில்லை என்றோ ஆத்ம விஷயத்தில்
எண்ணம் தோன்றாது என்பதை விளக்கிக் கூறுகிறார்.

व्याप्य குறைவான இடத்தில் உள்ளது व्यापक எல்லா
இடத்திலும் உள்ளது என்ற பேச்சுக்கு निर्मुक्त அப்பாற்பட்டதான
ஆத்ம தத்வ ஜ்ஞானத்தை அடைந்த त्वमेकः நீ ஒருவனே सफलः
பிறவிப்பயனை அடைந்தவன் என்று यदि இருக்குமாயின் आत्मानं
ஆத்ம தத்வத்தை प्रत्यक्षं च கண்கூடாக அறியப்பட்டது என்றோ
परोक्षं च நேரில் அறியப்படாதது என்றோ कथं मन्यसे எப்படி
எண்ணுகிறாய் हि! இவ்விதம் எண்ணுவது ஆச்சர்யமல்லவா !

உலகில் உள்ள பொருள்களில் சிலவை எங்கும் உள்ளவை.
ஆகாயம், வாயு இவை எங்கும் பரந்து உள்ள பூதங்கள். பூமி,
ஜலம், நெருப்பு இவைகள் குறுகியவைகள். சில இடங்களில்தான்
இருக்கும். மண் ஜலம் இவைகளை வியாப்யம் என்றும், வாயு
ஆகாயம் இவைகளை வியாபகம் என்றும் உலகில் கூறுவார்கள்.

இவ்விதம் இரண்டு விதமாகக் கூறமுடியாதது ஆத்மதத்வம்.
எவன் இந்த அறிவை அடைகிறானோ அவனும் ஆத்மதத்வமே.
தன்னைத்தவிர வேறு பேதம் இல்லாத நிலையில் எவ்விதம் தெரியும்,
தெரியாது என்று கூற முடியும். முடியவே முடியாது. வேறு ஒன்று
இருந்தால்தான் "ப்ரத்யக்ஷம், " எனக்கு யானை ப்ரத்யக்ஷமாகத்
தெரிகிறது " என்று கூறுவது போல் கூற முடியும். வேறு ஒன்று
இருந்தால்தான், எனக்கு ' நீர்யானை ' தெரியாது பரோக்ஷம்
என்று கூற முடியும். உனக்கோ ஜ்ஞானம் வந்துவிட்டது. பிறவிப்
பயனை அடைந்து விட்டாய். எப்படி நீ மற்றவர்களைப் போல் பேச
முடியும். இந்த நிலையில் நீ இருவிதமாகப் பேசினால் இதுவே
ஆச்சர்யம்! ஆகையினால் இந்த சொல் பொருத்தமில்லை. ஆத்ம
அனுபவம் ஏற்பட்டுவிட்டால் வேறு பேச்சுக்கே இடமில்லையே !

अद्वैतं केचिदिच्छन्ति द्वैतमिच्छन्ति चापरे ।
समं तत्वं न विन्दन्ति द्वैताद्वैत विवर्जितम् ॥ ३६ ॥

அவதாரிகை: எவர்களுக்கு ஆத்மஜ்ஞானம் ஏற்பட வில்லையோ அவர்கள் தத்வம் புரியாதவர்கள். அவர்கள் அத்வைதம் த்வைதம் விசிஷ்டாத்வைதம் என்றெல்லாம் பேசுவார்கள் என்று கூறுகிறார்.

केचित् உலகில் சிலர் अद्वैतं அத்வைதம்தான் உண்மை என்று इच्छन्ति விரும்பிக்கொண்டு வாதம் புரிவார்கள் अपरे மற்றும் சிலர் களோ द्वैतं த்வைதம்தான் உண்மை என்று इच्छन्ति விரும்பிக் கொண்டு வாதிப்பார்கள். ஆனால் இவர்கள் யாவரும் द्वैताद्वैत विवर्जितं த்வைதம், அத்வைதம் இவைகளுக்கெல்லாம் சம்பந்தம் அற்ற समं तत्वं எங்கும் பூர்ணமாக நிரம்பி இருக்கின்ற உண்மைப் பொருளை न विन्दन्ति அறியாதவர்கள் ஆவார்கள். இதனால்தான் பலவிதமாக வாதம் புரிகிறார்கள்.

द्वैतं என்றால் द्विधा+इतं=द्वितम् द्वितमेव द्वैतम् இரண்டாக தோன்றுவது என்று பொருள். பரமாத்மா; ஜீவாத்மா என்ற இரண்டும் உண்மைப் பொருள்தான் என்று அழுத்தமாகக் கூறுவது த்வைதமாகும். अद्वैतं என்றால் न+द्वैतं=अद्वैतं என்று கூறுவது சரியல்ல. ஏனென்றால் இரண்டாக தெரிவதல்ல என்றால் ஒன்றுதான் என்று எண்ணுவது ஸுலபமாகாது. இரண்டல்ல, பல உண்டு என்றும் பொருள்கொள்ள இடமுண்டு. அதனால்தான் न विद्यते द्वैतं यत्र तदेव अद्वैतं என்று விரிவுரை கூறப்படுகிறது. यत्र எந்த ஆத்மானுபவ நிலையில் இரண்டாகத் தோற்றம் ஏற்பட ஹேது இல்லையோ அந்த நிலையைத்தான் அத்வைதம் என்கிறார்கள். समं तत्वं என்றால் எந்த விதமான விசேஷமும் இல்லாத பூர்ண நிலை என்று பொருள். த்வைதானுபவம் உள்ளவர்களை அனுசரித்துப் பேசும்போதுதான் அத்வைதம் என்ற சொல் பொருந்தும். தன்னையே ப்ரஹ்மமாக புரிந்துகொண்ட நிலையில் உலக வியவஹாரமே தெரிவ தில்லை. அதனால் த்வைதம், அத்வைதம் என்ற பேச்சு, பூர்ணப் பொருள் எய்திய நிலையில் கிடையாது. இந்த நிலையை நன்கு புரிய வைப்பதற்காக இந்த சுலோகத்தை கூறியிருக்கிறார்.

श्वेतादि वर्णरहितं शब्दादि गुण वर्जितम् ।
कथयन्ति कथं तत्वं मनोवाचामगोचरम् ॥ ३७ ॥

அவதாரிகை : முன் சுலோகத்தில் கூறிய கருத்தையே அடுத்து 2, 3 சுலோகங்களில் வேறு விதமாக கூறுகிறார்.

श्वेतादि वर्ण रहितं வெள்ளை, கருப்பு, சிவப்பு, மஞ்சள் என்ற நிறங்களின் சம்பந்தம் இல்லாததும் शब्दादि गुण वर्जितं சப்தம், ஸ்பர்சம், ரஸம், கந்தம் என்ற குணங்களின் சம்பந்தம் அற்றதும் मनो-वाचा-मगोचरं மனது, வாக்கு முதலிய புலன்களுக்கு எட்டாதது மான तत्वं உண்மைப் பொருளை कथं कथयन्ति எப்படி கூறுவார்கள் கூற முடியாது. சப்தங்கள் ஒரு பொருளை விளக்கிக் கூற வேண்டுமாயின் ஜாதி, கிரியை, குணம் ஏதாவது ஒன்றை வைத்துக் கொண்டுதான் விளக்கும். மனதுக்கு தெரியாத பொருளை வாக்கு கூற முடியாது. வாக்கு சொல்ல வேண்டுமாயின், செயல் அல்லது உருவம் அல்லது நிறங்கள் இவைகளை எதிர் பார்க்கும். இந்த உண்மைப் பொருளுக்கு ஜாதியில்லை, செயல் இல்லை, நிறம் கிடையாது. ஆகையினால் மனது வாக்கு இவைகள் பிரஹ்ம தத்வத்தை விளக்குவது ஸாத்யமில்லை என்று ஒதுங்கி விடுகின்றன. ஆனால் உபநிஷத்துக்கள் ஆத்ம ஜ்ஞானத்துக்கு இன்றியமையாத ஸாதனங்கள். எப்படி இது பொருத்தம் என்றால், ஆகாயத்தில் உள்ள 3ம் பிறை சந்திரனை நேரில் கூற முடியாதாயினும் தென்னை முதலிய மரக்கிளைகள் நேரில் தொட்டுக் காட்ட சக்தியற்றதாக இருந்தாலும் சொல்லாமல் சொல்லிக் காட்டுவது போல, உபநிஷத்துக்களில் உள்ள சப்தங்கள் உபலக்ஷணம் என்ற முறையில் தெரிவிக்கின்றன என்பதாம்.

यदाऽनृतमिदं सर्वं देहादिगगनोपमम् ।
तदा हि ब्रह्म संवेत्ति न ते द्वैतपरंपरा ॥ २८ ॥

देहादि गगनोपमं ஆகாயம் போன்ற உடல் உறுப்புகள், புலன்கள் எல்லாமே सर्वमिदं अनृतं உண்மைப் பொருள் அல்ல, எல்லாம் தோற்றமே என்ற ஆழ்ந்த அனுபவம் எப்போது यदा வருமோ तदा हि அப்போதுதான் ब्रह्म संवेत्ति பிரஹ்மத்தை அறிகிறான், பிரஹ்மத்தை அறிந்த ते உனக்கு द्वैतपरंपरा இரண்டாகத் தெரியக்கூடிய உலக வகைகள் (த்வைத வரிசையான அனுபவம்) न தெரியாது.

உலகத் தோற்றம் உள்ளவரை பிரஹ்மானுபவம் ஏற்படாது. பிரஹ்மானுபவம் ஏற்பட்டவனுக்கு உலகம் உண்மையாக தெரியாது என்ற நிலையை இந்த சுலோகத்தில் கூறுகிறார். இந்த விவரத்தை உபநிஷத்தும் கூறுகிறது. यत्र हि द्वैतमिव भवति எந்த

அக்ஞான நிலையில் இரண்டாவது பொருள் இருப்பது போல் தெரியுமோ அப்பொழுது என்று, ஞானம் ஏற்படாத நிலையிலுள்ள அனுபவத்தை यत्रत्वस्य सर्वमात्मैवाभूत् எந்த நிலையில் எல்லாமே ஆத்ம ஸ்வருபமாக ஆகிவிடுமோ அந்த நிலையில், எதை, யார் எதனால், எந்த பயனைக்கருதி பார்க்கிறான், கேட்கிறான், எதை விரும்பிக்கொண்டு இருப்பான் என்று ஆக்ஷேப முறையில் கூறி உபநிஷத்து விவரிக்கிறது.

(தொடரும்)

---

இவ்வருடம் சதருத்ரீய மஹா யக்ஞம் மே மாதம் கடைசியில் வருகிறது. ஆனால் ஆசிரமத்தில் தண்ணீர் தட்டுப்பாடும் அதிக மான அளவில் மின்வெட்டும் இருந்து வருவதால் யக்ஞத்தைப் பற்றிய அறிவிப்பு ஏப்ரல் அல்லது மே இதழில் வரும்.

— ஆசிரியர்.

---

# अवधूतगीता

# அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

परेण सहजात्मापि ह्यभिन्नः प्रतिभाति मे ।
व्योमाकारं तथैवैकं ध्याताध्यानं कथं भवेत् ॥ ३९ ॥

मे என்னுடைய सहजात्मा ஜீவாத்ம ஸ்வரூபமானது परेण பரமாத்ம ஸ்வரூபத்தோடு अभिन्नः हि प्रतिभाति சேர்ந்ததாகவே (வேறுபடாததாகவே) தோன்றுகிறது अपि மேலும் तथैव அவ் விதமே एकं ஒன்ருகவுள்ள व्योमाकारं ஆகாயத்துக்கு ஸமமாக எங்கும் நிரம்பியுள்ளதாகவும் (விளங்குகிறது) தோன்றுகிறது. இவ்வாறு ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபம் எவ்வித வித்யாஸமும் இல்லாமல் ஒன்ருகவே தோன்றுகிறது. அத்துடன் எங்கும் பரந்து நிற்கின்ற ஆகாயம்போலும் இருக்கின்றது. ஆகாயத்தில் எவ்வித தோஷமும் ஸம்பந்திக்காது. இவ்விதமே ஆத்மாவினிடமும் எந்த விதமான பந்தமும் ஸம்பவிக்காது என்பதையும் கூறுகிருர். ध्याता, ध्यानं தியானம் செய்பவர், தியானம் என்ற செயல், இரண்டும் कथं எவ்வாறு भवेत् ஏற்படும்? இதே பொருள் கொண்ட சுலோகம் முன்னுலும் கூறப்பட்டிருக்கிறது. எப்படியாவது ஆத்மானுபவம் ஏற்பட வேண்டுமே என்பதற்காக முன் சொன்ன விஷயத்தையே திரும்பவும் கூறியுள்ளார்.

यत्करोमि यदश्नामि यज्जुहोमि ददामियत् ।
एतत्सर्वंनमे किञ्चित् विशुद्धोहमजोऽव्ययः ॥ ४० ॥

அவதாரிகை: ஸ்ரீமத் பகவத்கீதையில், எதிர்நிலையாக கூறியுள்ள விஷயத்தையே இவ்விடம் தன் நிலையாக மாற்றியும் கூறி, கீதையில் கூறப்பட்டுள்ள சிறந்த அனுபவ நிலையையும் விளக்கியிருக்கிருர்.

अहं विशुद्धः நான் மிகவும் தூய்மையானவன் (எந்த குண ஸம்பந்தமும் இல்லாதவன்) இதனுலேயே अजः பிறப்பு அற்றவன் புதிய தோற்றம் ஏற்படுவதை பிறந்தான், பிறந்தது என்று

கூறுவதுண்டு. ஆத்மாவிற்கோ புதிய தோற்றமுமில்லை. முக்காலத்திலும் இருக்கிறார். இதனால் अव्ययः அழிவற்றவர். உண்டாகிற பொருளுக்கு அழிவு (நாசம்) உண்டு. ஸதாகாலமும் உள்ள பொருளுக்கு அழிவில்லை, சாசுவதமானது. ஆகையினால் यत्करोमि எதனைச் செய்கிறேனோ यदश्नामि எதை சாப்பிடுகிறேனோ यज्जुहोमि எதை ஹோமம் செய்கிறேனோ ददामियत् எதனை தானம் செய்கிறேனோ எல்லாவற்றுக்கும் मे எனக்கும் न किंचित् எந்தவிதமான (பற்றும்) ஸம்பந்தமும் இல்லை. பகவத்கீதையில் பகவான் கூறும் போது, உயர்ந்த ஞானியின் நிலை எவ்வாறு உள்ளது என்பதை நன்கு தெளிவாக கூறியிருக்கிறார்.

ஜ்ஞானியாயுள்ளவனும், ஸாதாரண மனிதனும், இருவர்களும் சாப்பிடுவார்கள், ஜல மலம் கழிப்பார்கள், உறங்குவார்கள். சரீரத்தில் ரத்தக்காயமும் உண்டாகும். எல்லாமே ஒரே மாதிரியாக தோன்றினாலும் இருவர்களுடைய மனோபாவம் வேறாகவே இருக்கும். ஸாதாரண மனிதன் நான் செய்கிறேன், எனக்கு உடம்பில் காயம் ஏற்பட்டுள்ளது என்றெல்லாம் தன் அபிமானம் கொள்வான். ஜ்ஞானிக்கோவென்றால் தன் அபிமானம் ஏற்படாது गुणाः गुणेषु वर्तन्ते इति मत्वा न सज्जते என்பது பகவான் வசனம். गुणाः உடல், உறுப்பு, புலன்கள், உருவமாகமாறி வந்திருக்கின்ற ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் गुणेषु (குணங்கள்தான் விஷயங்களாகவும் மாறியுள்ளன) அவ்விதம் மாறியுள்ள- சப்தஸ்பர்சம் முதலியவையான குணங்களில் वर्तन्ते இருக்கின்றன इतिमत्वा என்று எண்ணிக்கொண்டு न सज्जते ஸங்கத்தை அடையமாட்டான் தன் அபிமானம் கொள்ளமாட்டான். என்று ஜ்ஞானியின் நிலையை கூறுகிறார். இவ்விதமான மனோநிலையின் வித்யாஸமானது அவர் அவர்களின் அனுபவத்திற்கேதான் தெரியும், வெளியில் தெரியாது. இம்மாதிரியான நிலை அடைந்தவர்கள் சிறந்த ஜ்ஞானியாவார்கள். இந்த 40வது செய்யுளில் இந்த உயர்ந்த அபிப்ராயத்தைத் தெரிவிப்பதற்காக एतत् सर्वं नमे किंचित् இந்த எல்லாமே எனக்கு ஸம்பந்தப்பட்டவையல்ல विशुद्धोहं अजोऽव्ययः நான் மிகத் தூய்மையானவன். (குணஸம்பந்தம் இல்லாதவன், பிறப்பு இறப்பு அற்றவன்) என்று கூறி (பகவான் கூறியுள்ள நிலை) ஜ்ஞானியின் தன் நிலையை கூறியுள்ளார்.

सर्वं जगद् विद्धि निराकृतीदं सर्वं जगद् विद्धि विकार हीनम् ।
सर्वं जगद् विद्धि विशुद्धदेहं सर्वं जगद् विद्धि शिवैकरूपम् ॥ ४१ ॥

அவதாரிகை : பரமார்த்த நிலையில் சிவதத்வமாகிய பரதத்வம் ஒன்றே உண்மையானது. மற்றவை எல்லாமே தோற்றம் தவிர வேறில்லை என்கிறார்.

इदं सर्वं जगत् கண் முன் தோன்றுகின்ற இந்த உலகம் யாவுமே निराकृति தனக்கென, தனிப்பட்ட, உண்மையான உருவம் அற்றது, (தனக்கென்று உருவமற்றது) என்பதை विद्धि நன்றாக அறிவாயாக इदं सर्वं जगत् இந்த உலகம் முழுதுமே विकार हीनं विद्धि எந்தவிதமான (திரிபும்) மாறுபாடும் இல்லாதது என்றும் அறிவாயாக सर्वं जगत् உலகம் முழுதுமே विशुद्ध देहं மிகத்தூய்மை வாய்ந்த பரதத்வத்தையே உடலாகக் கொண்டுள்ளது என்பதையும் विद्धि புரிந்துகொள்வாயாக सर्वंजगत् எல்லா உலகமும் शिवैकरूपं பரமசிவன் ஒருவரையே உருவமாகக் கொண்டுள்ளது என்பதையும் विद्धि தெரிந்துகொள்வாயாக!

N. B. கயிறு என்ற ஒரு உண்மைப் பொருள்தான் மாலை, பாம்பு, தண்ணீரின் தாரை, பூமியின் வெடிப்பு என்றெல்லாம் பல தோற்றங்களுக்கு அடிப்படைப் பொருள். அடிப்படையான கயிறு ஒன்றுதான் உண்மைப் பொருள், மற்றவைகள் யாவும் 'கற்பனை' அல்லாது வேறல்ல, என்று புரிந்து கொண்டு பார்ப்பவனுக்கு எவ்விதம் கயிறு தவிர வேறல்ல, கயிறு ஒன்றுதான் ஸத்யமான வஸ்து, மற்றவை எல்லாமே கானலில் தோன்றுகின்ற நீரைப் போல உண்மையல்ல. கானல் நீரைக் காண்பவனுக்கு, நீர், கண்களுக்குத் தெரியும். ஓடுவது போலவும், அலைவரிசைகள் மெதுவாக சலனமடைவது போன்றும், அந்த ஜலத்தில் பக்கத்தில் உள்ள மரத்தின் நிழல் விழுவது போலும் தோன்றலாம். ஆனால் அறிவாளியாக இருப்பவனுக்கு மட்டுமேதான் தோற்றம்யாவுக்கும் அடிப்படையான உண்மைப்பொருள் 'கானல்'தான் வேறு இல்லை என்று புரியும். மற்றவர்கள் உண்மையை புரிந்து கொள்ள முடியாது. இவ்விதம் 'சிவதத்வ' ஜ்ஞானிக்கு மட்டுமே உலகம் யாவும் உண்மைப் பொருள்களல்ல என்பது புரியும் என்பதை குரு விளக்குகிறார்.

(தொடரும்)



# अवधूतगीता

## அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

तत्त्वं त्वं हि न सन्देहः किं जानाम्यथवा पुनः ।
असंवेद्यं स्वसंवेद्यं आत्मानं मन्यसे कथम् ॥ ४२ ॥

त्वं हि நீயேதான் तत्त्वं உண்மையான பொருள் न सन्देहः இந்த விஷயத்தில் சிறிதளவுகூட ஸந்தேகம் கிடையாது किं जानामि எதை அறிகிறாய் (அல்லது) எப்படி அறிகிறாய், அறிவது முடியாது என்று ஆக்ஷேபிக்கிறார். अथवा पुनः இப்படியில்லாவிடில் आत्मानं உயர்ந்த ஆத்மஸ்வரூபத்தை असंवेद्यं - स्वसंवेद्यं அறியப்பட முடியாதது என்றும், தன்னால் அறியப்பட முடியக்கூடியது என்றும் कथं எவ்வாறு मन्यसे எண்ணுகிறாய்.

உலகில் உள்ள பொருள்கள் ஒரே ஸமயத்தில் அறிய முடிவதாயும் அறிய முடியாததாகவும் இருக்கமுடியாது மரம் செடி கொடிகள், நதி இவைகள் அறிவுககுப் புலப்படக் கூடியவைகள். இவைகள் அதே ஸமயத்தில் அறியப்படாதவை என்று கூற முடியாது. இவ்விதமே உலகில் அணுக்கள் அறிய முடியாதவை. (ஊஹத்தினால் கற்பனை செய்து கொண்டு புரிந்து கொள்ள முடியுமே அல்லாது கண்கூடாக பார்க்க முடியாதவைதான்). இவைகளை संवेद्यं என்று கூறுவதில்லை. இவ்விடத்தில் संवेद्य - असंवेद्यं என்று சேர்ந்து கூறுவதின் கருத்து என்னவென்றால் இந்த இரண்டு விதமான பேச்சுக்கும் அப்பாற்பட்டது என்று ஆத்ம தத்வத்தை நன்கு சிஷ்யனுக்கு குருவானவர் உணர்த்தி வைக்கிறார்.

मायाऽमाया कथं तात छायाऽछाया न विद्यते ।
तत्त्वमेकमिदं सर्वं व्योमाकारं निरञ्जनम् ॥ ४३ ॥

तात! குழந்தாய்! माया अमाया कथं மாயையானது, மாயை இல்லாததாக எப்படியாகும். இவ்விதமே மாயையாக இல்லாததை

எப்படி மாயை என்று கூறுவது. இரண்டுமாக ஒரு பொருள் காண முடியாது. இதற்கு உவமையாக छाया நிழல் என்றும் अछाया நிழலற்றது (நிழலுக்கு மாறுனது) என்றும் ஒரு இடத்தில் வியவஹாரம் எப்படி உலகில் ஏற்படாதோ, இவ்விதமேதான் மாயை, அமாயை என்ற விஷயத்திலும் புரிந்துகொள்ள வேண்டும். इदं सर्वं இந்த உலகம் முழுதுமே व्योमाकारं பரந்து நிற்கின்ற ஆகாயம் போல் निरञ्जनं ஒன்றோடும் ஒட்டாத एकं तत्त्वं ஒன்ருகவே உள்ள உண்மை தத்வமாகும் என்று உபதேசிக்கிருர். இந்த இடத்தில் யோசனையை நீண்டதாக செலுத்திப் பார்க்கும்போது யோக சாஸ்திரத்தில் நிர்விகல்பஸமாதி என்ற நிலையையே கூறுவது போல் தோன்றுகிறது. நிர்விகல்பஸமாதியில், தான், உலகம், யோகம் என்ற மூன்றுமே தெரியாது என்று யோக சாஸ்திரம் கூறுகின்றது. இதை நாம் புரிந்து கொள்வது கடினம் ஆகிறது. காரணம் என்னவென்ருல் நமக்கு யோகப்பயிற்சி, அதிலும் நிர்விகல்பஸமாதி என்ற ஒருமுறை கொஞ்சம்கூட பழக்கம் இல்லை. நமக்குப் பழக்கமில்லாத, அதிலும் நன்ருக புரியாத ஒரு விஷயத்தை கூறும்போது முற்றிலும் இது சரியல்ல, ஏதோ ஏமாற்றவே கூறுகிருர்கள் என்று தோன்றும். யோக சாஸ்திரமே நமக்கு புதியதாகும். அதைவிட வேதாந்த சாஸ்திரத்தில் கூறுகின்ற தத்வ ஜ்ஞானிகளின் நிலை முற்றிலும் சம்பந்தமற்ற நிலை. இந்த நிலையில் உள்ளவர்கள் பேசவே முன்வர மாட்டார்கள். ஆனுல் தான் அனுபவிக்கின்ற உயர்ந்த நிலையை உணர்த்திஞலன்றி மற்றவர்களுக்கு இந்த நிலை கிட்டாமல் போய்விடுமே! என்று எண்ணி தயவிஞல் சில சமயங்களில் உபதேசம் செய்வார்கள். இவ்வித உபதேச நிலையில்தான் இம்மாதிரி விஷயங்கள் நமக்கு கிடைக்கின்றன.

आदिमध्यान्तमुक्तोऽहं न बद्धोऽहं कदाचन ।
स्वभावनिर्मलः शुद्धः इति मे निश्चिता मतिः ॥ ४४ ॥

அவதாரிகை: இவ்விதம் உபதேசம் செய்த குருவானவர் தன்னுடைய தீர்மானமாக (திட்டவட்டமாக) உள்ள நிலையை மறுபடியும் சுருக்கமாக கூறுகிருர்.

अहं நான் आदि-मध्या-न्त-मुक्तः ஆரம்பம், நடுவு, முடிவு என்ற (பிறப்பு, வாழ்க்கை, அழிவு என்ற) நிலைகள் இல்லாதவன் ஆவேன் कदाचन எப்போதுமே अहं நான் न बद्धः பந்த நிலையில் இருப்பதில்லை, இருந்தவனுமல்ல, இருக்கப்போவதுமில்லை स्वभाव निर्मलः எப்போதுமே இயற்கையாக மாசு அற்றவன் शुद्धः மிகத்

தூய்மையானவன் इति என்று मे எனக்கு निश्चितामतिः தீர்மானிக்கப்பட்ட புத்தியானது நிலைத்திருக்கிறது. மாண்டுக்ய உபநிஷத்தில் உயர்ந்த நிலையைக் கூறுகின்ற காரிகை என்ற பகுதியில் கூறுவது இங்கு சிந்தனைக்கு வருகின்றது.

न मुमुक्षुः न वै मुक्तः न बद्धो न च साधकः ... इत्येषा परमार्थता என்ற இடத்தில் முக்தியை அடைய விரும்புபவனுமில்லை, முக்தியை அடைந்தவனுமில்லை. பந்தம் அடைந்தவன் என்றும் இல்லை. பந்தத்தை விலக்கிக் கொள்ள ஸாதனங்களை அனுஷ்டிப்பவனும் இல்லை, என்ற ஒரு நிலைதான் உண்மையாக தெரிந்து கொள்ள வேண்டியது. இது உயர்ந்த ஜ்ஞானியினுடைய அனுபவமாகும்.

महदादि जगत् सर्वं न किञ्चित् प्रतिभाति मे।
ब्रह्मैव केवलं सर्वं कथं वर्णाश्रमस्थितिः ॥ ५ ॥

[முதல் ச்லோகத்தில் கூறிய நிலையிலிருந்து பார்ப்பவனுக்கு உலகில் எதுவுமே இல்லை என்பது இங்கு விவரிக்கப்படுகிறது.]

महदादि மஹத்தத்வம், அஹம் தத்வம், பஞ்ச பூதங்கள் அதன் கலவை விசேஷங்கள், ஜ்ஞான கர்மேந்திரியங்கள், ஜடமான உலக வஸ்துக்கள் எல்லாம் 'மஹத்' என்று தொடங்கி ஜகத் என்ற உலகம் வரையில் மாறியிருக்கின்ற किञ्चित् எதுவுமே मे எனக்கு न प्रतिभाति தோன்றவில்லை सर्वं மேற்கூறிய எல்லாமே केवलं ब्रह्मैव பிரஹ்ம ஸ்வரூபம் தவிர வேறாக ஒன்றுமேயில்லை.

சர்க்கரையைக்கொண்டு தயாரித்து வைக்கப்பட்டுள்ள மிட்டாய்கள் பல உருவங்களில் அமைகின்றன. மலைகள், கோவில்கள் - கடவுளின் பல மூர்த்தங்கள் - மனிதர்கள் - ஸ்த்ரீகள் - மாடுகள் - ஆடுகள் - முதலைகள் - மீன்கள் - பாம்புகள் - தேள்கள் - கெடியாரங்கள் - வீணை, பிடில், புல்லாங்குழல்கள் - இன்னும் பல பல வஸ்துக்களாக தோன்றுகின்றன. விவரம் புரியாத குழந்தைகளுக்கு பல வஸ்துக்களாக தோற்றமளித்தாலும்கூட உண்மை அறிந்த வியாபாரிக்கு எல்லாம் சர்க்கரையாகத்தான் தெரியுமே அல்லாது வேறு விதமாக தெரியாதல்லவா! இவ்விதமே ஞானிக்கு எல்லாம் பரம்பொருளாகவே தோன்றும்!



(தொடரும்)

# अवधूतगीता

# அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

जानामि सर्वथासर्वं अहमेको निरन्तरम् ।
निरालंबमशून्यंच शून्यं व्योमादि पञ्चकम् ॥४६॥

அவதாரிகை : முன் சுலோகத்தில் கூறிய விஷயத்தையே சுருக்கமாகக் கூறுகிறார்.

सर्वं தோற்றம் எல்லாமே निरन्तरं இடைவெளியே இல்லாததும் निरालम्बं பிடிப்பற்றதும் (வேறு ஒன்றை தனக்கு ஆதாரமாக அமைத்துக் கொள்ளாததும்) अशून्यं சூன்யம் என்று கொள்ள முடியாததுமான अहं एकः நான் ஒருவனேதான் (அழியாததத்வம்) என்னைத்தவிர்த்து வேறு உண்மைப் பொருள் இல்லை என்பதையும் सर्वथा பலவிதமாக பார்த்தாலும் (தீர்மானமாக நான் என்ற தத்வம்தான் உண்மைப் பொருள் என்பதை) जानामि நன்கு தெரிந்து கொண்டிருக்கிறேன் च மேலும் व्योमादि पञ्चकं ஆகாயம் முதலான பூதங்கள் ஐந்துமே शून्यं சூன்யமானது (மலடி மகன், முயற்கொம்பு என்ற வஸ்துக்கள் எப்படி தோற்றத்தில்கூட காண முடியாததோ, அவ்விதம் சூன்யமானவை) என்றும் जानामि தெரிந்து கொண்டிருக்கிறேன். "பிரஹ்மவஸ்துவை, என்னுடைய ஸ்வரூபமாகவும் உண்மைப் பொருளாகவும், பிற வஸ்துக்களை உண்மையில் நிலைக்காதவைகளாகவும் நன்கு அறிகிறேன்" என்று பொருள்.

नषण्ढो नपुमान् नेस्त्री न बोधो नैव कल्पना ।
सानन्दो वा निरानन्दं आत्मानं मन्यसे कथम् ॥ ४७ ॥

அவதாரிகை : ஆத்மாவைப் பற்றி, உபநிஷத்துக்களில் இவ்விதமாகவும் இல்லை, அவ்விதமாகவும் இல்லை என்று பலவிதமாக நிஷேதம் செய்யப்படுகிறது. இவ்விதம் கூறப்படுவதை எப்படி புரிந்துகொள்வது—எவ்விதம் புரிந்துகொண்டிருக்கிறாய் என்று கேட்கிறார் குரு.

नषण्ढः (ஆத்மாவானது) அலியும் அல்ல नपुमान् புருஷனும் அல்ல न स्त्री பெண்ணுமல்ல न बोधः அறிவு ரூபமாகவும் இல்லை नैव कल्पना தானுகவே ஒரு உருவத்தை மனதினுல் அமைத்துக் கொண்டு அவ்விதமாக புரிந்துகொள்ள முடிவதுமல்ல, இவ்விதம் இருக்க सानन्दो वा ஆனந்தம் என்ற ஸந்தோஷத்துடன் கூடிய தாகவோ, அல்லது निरानन्दं ஆனந்தம் எனப்படுகிற ஸந்தோஷத் தினின்றும் விடுபட்டதாகவோ (ஸந்தோஷமே இல்லாத வஸ்து வாகவோ) आत्मानं ஆத்ம வஸ்துவை कथं मन्यसे எவ்வாறு எண்ணு கிருய். உபநிஷத்துக்களில் மேற்கூறியவாறு பலவிதமாக ஆத்ம ஸ்வரூப வர்ணனை செய்யப்பட்டிருக்கிறது. இவைகளை எப்படி நீ தெரிந்துகொண்டிருக்கிருய் ? ஒரே பொருளைப் பற்றி நேர்முக மாகவோ, எதிர் முகமாகவோ கூறப்படுவதை எப்படி புரிந்து கொள்வது—யோசனை செய்.

षडङ्गयोगान्नतु नैव शुद्धं मनोविनाशान्नतु नैवशुद्धम् ।
गुरूपदेशान्नतु नैवशुद्धं स्वयं च तत्वं स्वयमेव शुद्धम् ॥ ४८ ॥

அவதாரிகை: (ஜீவ) ஆத்மாவின் தூய்மைக்காக என்று, பல ஸாதனங்கள் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. இவை எல்லாம், எப்பொழுதுமே மிகவும் தூய்மையாகவுள்ள (சுத்தமான) ஆத்மாவிடம் பொருந்தாதவைகளே ! என்று கூறுகிருர்.

अपि च மேலும் षडङ्गयोगात् ஆறு அங்கங்களுடன் கூடிய யோகத்தினுல் (இருவிதமான ஸமாதியினுல்) शुद्धं ஆத்மா, தூய்மை யானது என்றும் नैवशुद्धं தூய்மையை அடையவில்லை என்றும் नतु கூறவே முடியாது मनोविनाशात् तु (வாஸிஷ்டம் என்ற க்ரந் தத்தில் வாஸனுக்ஷயம், மனேநாசம் என்று இரண்டு நிலைகள் கூறப்பட்டுள்ளன. இவை இரண்டும் எவனுக்கு அமைகின்றனவோ அவனே மிகவும் பரிசுத்தன் என்று கூறப்பட்டுள்ளன.) மனே நாசம் என்ற ஒரு நிலை அமைவதினுல்தான் शुद्धं ஆத்ம தத்வம் தூய்மையாகிறது என்ருே, இந்நிலை ஏற்படாவிடில் नैव शुद्धं தூய்மையை அடையாது என்ருே नतु கூறிவிடவும் முடியாது. இவ்விதமே गुरूपदेशात् குருவினுடைய உபதேசம் பெற்ருல்தான் शुद्धम् தூய்மை பெறுகிறது இல்லையேல் नैव शुद्धम् தூய்மை பெறுவ தில்லை என்ருே नतु கூறிவிடவும் முடியாது. ஏனெனில் स्वयं तत्वं (ஆத்மவஸ்து) தானே உண்மைப் பொருளாகவும் स्वयमेव शुद्धं च தானே தூய்மையாகவும் இருக்கிறது.

நான் ஒன்றே உண்மைப் பொருள் என்றால், தன்னைத் தவிர வேறு ஒன்றும் உண்மைப்பொருள் இல்லை என்று முடிகிறது. உண்மையல்லாத ஒன்றினால், உண்மைப் பொருளுக்கு தூய்மை ஏற்படாது. ஸ்வப்னத்தில் உண்டான சந்தனப்பூச்சினால், உண்மை என்று எண்ணப்படுகின்ற உடலுக்கு வாஸனையும் ஏற்படாது. சாணிப்பூச்சினால் கெட்ட நாற்றமும் ஏற்படாது. இவ்விதமாக உண்மையான ஆத்மாவிற்கு உண்மையல்லாத (ஆத்மாவைத் தவிர்த்தயாவும் உண்மையல்லாததால்) ஒன்றினால் தூய்மையும் ஏற்படாது. அசுத்தமும் ஏற்படாது என்றும் கூறியதாகவாகிறது. இதையே இவ்விடம் नैवशुद्धं नतु என்று கூறுகிறார்.

ஆறு அங்கங்கள் கொண்ட யோகம் என்று கூறுவதில்: யமம், நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணா என்ற ஆறும் தியானம் என்ற ஸமாதி நிலைக்கு இன்றியமையாத ஸாதனங்கள். (அங்கங்கள் எனப்படுபவை) தியானம் என்பது ஸவிகல்ப ஸமாதி. ஸமாதி என்பது நிர்விகல்ப ஸமாதி. தியானம் ஸமாதி என்ற யோகநிலையை அடைய முற்கூறிய ஆறு அங்கங்கள் ஸாதனங்களாகின்றன. இவ்விதமாக ஸாதனங்களுடன் கூடிய ஸமாதியும் ஆத்மாவின் தூய்மைக்கு காரணமாகாது. இப்படியே குருவினுடைய உபதேசமும் தூய்மைக்குக் காரணமாகாது. குறிப்பாக சாஸ்திரங்களில் ஜீவாத்மா, பரமாத்மாவைத் தவிர வேறில்லை, இரண்டும் ஒன்றேதான், ஆனால் ஜீவாத்மாவிடம் அசுத்தியிருக்கிறது. அசுத்தமும், சுத்தமும் ஒன்றாகாது. ஜீவாத்மா விடம் உள்ள அசுத்தியை விலக்க வேண்டியதற்கான ஸாதனங்களை சாஸ்திரங்களில், யோகம் என்றும் விவேகம் என்றும் குருவின் உபதேசம் என்றும் மனோநாசம் வாஸனாக்ஷயம் என்றும் கூறுகின்றன. எப்படி ஆகாயத்தில் அசுத்தம் ஏற்படாதோ, அவ்விதம் ஆத்மாவிடமும் அசுத்தம் ஏற்பட வழியில்லை. ஜீவாத்மா பரமாத்மா என்பது घटाकाश महाकाश வித்யாஸம் போல்தானே! ஆகாயத்தில் போலவே ஆத்மாவிடமும் அசுத்தியில்லை. அதைப் போக்கடிக்க ஸாதனமும் உண்மையில் இல்லை என்று பொருள் இங்கு கூறப்பட்டது.

# अवधूतगीता

## அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

नहि पञ्चात्मको देहः विदेहो वर्तते नहि ।
आत्मैव केवलं सर्वं तुरीयञ्च त्रयं कथम् ॥ ४९ ॥

அவதாரிகை : முன்கூறிய விஷயத்தையே தெளிவாக கூறுகிறார்.

पञ्चात्मकः ஐந்து பூதங்களும் ஒன்றுசேர்ந்து அதன் சேர்க்கையினால் உண்டாகிய देहः உடல் என்னும் வஸ்து नहि இல்லவே இல்லை. தேஹமில்லை என்னும்போது विदेहः உடல் அற்ற நிலை என்பதும் नहि वर्तते இருக்க முடியாது. ஏனென்றால் सर्वं எல்லாமே केवल आत्मैव பரம்பொருளாகவுள்ள ஆத்மதத்வம் ஒன்று மட்டுமே தான் உண்மையாக இருக்கிறது च மேலும் (உடலுமில்லை, உடல் அற்ற நிலையுமில்லை என்று கூறும்போது) तुरीयं च நான்காவதாக உள்ளது என்பதும் त्रयं மூன்றாவதாகவுள்ளது என்பதும் कथं எவ்விதம் கூறுவது. (பொருந்தாதது தான்)

பொருள் : சரீரம் உண்டு என்று கொள்ளும்போது ஜாக்ரத் - ஸ்வப்னம் - ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளையும் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். இந்த மூன்று நிலைகளும் மாறி மாறி வந்து கொண்டேதான் இருக்கும். இவ்விதம் மூன்று அவஸ்தைகளை அனுபவிக்கும் ஒருவனுக்கு பிரஹ்ம நிலையை உணர்த்திக் கூற வேண்டுமானால், இந்த மூன்று அவஸ்தைகளுக்கும் மேலாக உள்ள நிலைதான் பிரஹ்மானுபவ நிலை என்று கூற வேண்டியதாகிறது. அப்போது பொய்யான மூன்று அவஸ்தைகள் தாண்டி உள்ள நிலையை "துரீயம்" நான்காவது என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன.

பிரஹ்ம நிலை எய்தினவனுக்கு, கீழ்ச் சொன்ன மூன்று அவஸ்தைகளுமே இல்லை என்ற உண்மை புலப்பட்டுவிடுவதால் 4ஆவது நிலை என்று கூற முடியாததாகிறது. அவனுடைய (ப்ரஹ்ம ஸ்வரூபமாக உள்ளவனுடைய) நிலையில் உள்ள அனுபவத்தை யோசிக்கும்போது, உடலுமில்லை, உடல் அற்ற நிலையும்

இல்லை. உடல் உள்ளவர்களுக்கு மட்டுமே புலப்படக்கூடிய மூன்று அவஸ்தைகளுமில்லை. இவை எல்லாமே இல்லை என்று ஏற்படும் போது "துரீயம்" என்ற நான்காவது ஸ்தானம் என்ற வழக்கு, ஜ்ஞானியின் அனுபவத்தில் எப்படி பொருத்தமாகும். பொருந்தாததுதான், என்ற விஷயத்தையே இந்த சுலோகத்தில் கூறியிருக்கிறார்.

न बद्धो नैव मुक्तोऽहं न चाहं ब्रह्मणः पृथक् ।
न कर्ता न च भोक्ताहं व्याप्यव्यापक वर्जितः ॥ ५० ॥

அவதாரிகை: முன் சுலோகத்தில் கூறியதின் தொடர்ச்சி.

न बद्धः अहं நான் பந்தத்தை அடைந்தவனுமல்ல नैव मुक्तः முக்தி நிலையை அடைந்தவனுமல்லன் न कर्ताहं நான் கர்த்தாவாகவும் இல்லை च மேலும் न भोक्ता போக்தாவுமல்ல व्याप्य व्यापक वर्जितः குறைந்த இடத்தை மட்டும் சூழ்ந்து உள்ளதை व्याप्यः என்பது கூறும், எல்லா இடத்திலும் சூழ்ந்து பரந்து நிற்பதை व्यापकः என்ற சொல் கூறும். व्याप्यः என்று ஒன்று வரும்போதுதான் व्यापकः என்ற சொல் பொருத்தமாகும். இங்கு பிரஹ்மத்தை தவிர்த்து வேறு ஒன்றுமே இல்லாததால் व्याप्य என்ற சொல்லோ व्यापक என்ற சொல்லோ எழவே முடியாது. அப்போது व्याप्य-व्यापक என்ற சொல்லுக்கு இடமில்லாமல் ஆகிறது. இதை உணர்த்தவேதான் व्याप्य – व्यापक – वर्जितः குறைந்த இடத்தில் (न्यूनदेशवर्ति) உள்ளது என்றோ, அதிகமான எல்லா இடத்திலும் உள்ளது (अधिकदेशवर्ति) என்றோ கூற முடியாமல் உள்ள தத்வம் உண்மைப்பொருள். अहं நான் ब्रह्मणः பிரஹ்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் पृथक् வேறுபட்டவன் न அல்ல 'च' என்பதால் நானும் பிரஹ்மமும் ஒன்றே என்கிறார்.

यथा जलं जलेन्यस्तं सलिलं भेदवर्जितम् ।
प्रकृतिं पुरुषं तद्वद भिन्नं प्रतिभातिमे ॥ ५१ ॥

அவதாரிகை: ஒரு ஜீவன் பந்த நிலையை விட்டகன்று முக்தி நிலையை அடைவானாகில் அவன் பிரஹ்மத்தை அடைகிறான். இரண்டறக் கலந்துவிடுகிறான் என்று உபநிஷத்து கூறுகிறது. இதற்கு உவமையையும் கூட உபநிஷத்து கூறியிருக்கிறது. அந்த உவமையைக் கூறி விளக்குகிறார்.

जलेष्वस्तं ஒரு ஜலத்தோடு சேர்க்கப்பட்ட जलं மற்றொரு ஜலமானது यथा எவ்வாறு भेदवर्जितं வேறுபாடற்ற (தனித்துக் காண முடியாத) सलिलं தண்ணீர் என்று மட்டும் காணப்படுகிறதோ तद्वत् அவ்வாறே प्रकृतिं காரணப்பொருளாகக் கூறப்படுகிற மூல பிரக்ருதியை पुरुषं புருஷன் எனப்படுகிற ப்ரஹ்மதத்வத்துடன் சேர்ந்த ஒரே புருஷன் என்பதாகவே अभिन्नं வேறுபாடு காண முடியாத ப்ரஹ்மதத்வமாகவேதான் मे எனக்கு प्रतिभाति தோன்றுகிறது. அதாவது ஸாங்க்ய சாஸ்திரத்தில் ப்ரக்ருதி என்றும், புருஷ என்றும் இரண்டு தத்வங்கள் கூறப்பட்டிருக்கிறது. இவை இரண்டுமே உண்மைப்பொருள் என்று கூறுகிறது.

ப்ரக்ருதியும், புருஷனும் சேர்ந்து உலக வ்யவஹாரத்தை செய்கிறார்கள். இந்த நிலை பந்த நிலை. ப்ரகிருதியையும், புருஷனையும் சேர முடியாமல் செய்வதுதான் முக்தி நிலை. இதற்கு வேண்டிய ஸாதனங்களை ஸாங்கிய சாஸ்த்ரம் கூறுகிறது. ஸாதனங்களை அனுஷ்டித்து ப்ரகிருதியை தனித்து நிற்கும்படியும் புருஷனையும் இவ்விதமே தனியாகஇருக்கும்படியும்செய்துவிட்டால் प्रकृति-पुरुष-विवेकः एव मोक्षः இதுவேதான் மோக்ஷம்-வேறில்லை என்பது ஸித்தாந்தம்.

இந்த ஸாங்கிய சாஸ்த்ரமும் துவைத சாஸ்த்ரம்தான். அத்வைத சாஸ்த்ரமல்ல. அத்வைதம் என்று பிரமித்து அந்த சாஸ்த்ர ஸித்தாந்தமேதான், உபநிஷத்துக்களில் கூறப்படுவது என்று எண்ணிவிட வேண்டாம் என்பதை ஸ்ரீ சங்கர பாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறது.

द्वैतिनो हि ते साङ्ख्याः – अद्वैतवद्भिर्भूताः என்பது பாஷ்யக்காரர்களின் வசனமாகும். அந்த ஸாங்கிய சாஸ்த்ரம் மாதிரி ப்ரக்ருதியையும் புருஷனையும் வேறாக நான் எண்ணவில்லை. ஞானியான எனக்கு अभिन्नं வேறற்றதாகவே, அதாவது ஒன்றாகவேதான் प्रतिभाति தோன்றுகிறது என்று கூறுகிறார். கடோபநிஷத்தில் ஜ்ஞானியின் நிலைக்கு உபமான வாக்யம் :—

यथोदके शुद्धे शुद्धं आसिक्तं तादृगेव भवति
एवं मुनेर्विजानतः आत्मा भवति गौतम। (कठ)

यदि नाम न मुक्तोऽसि न बद्धोऽसि कदाचन।
साकारं च निराकारं आत्मानं मन्यसे कथम् ॥ ५२ ॥

அவதாரிகை : இவ்விதம் பிரஹ்ம ஜ்ஞானம் பெற்றவனுக்கு தன்னைப்பற்றிய எண்ணம் எந்தவிதமாகவும் ஏற்படாது. ஏற்பட முடியாது என்கிறார்.

कदाचन எப்போதுமே न बद्धोसि பந்தத்தை நான் அடைந்தவனல்ல என்று यदि त्वम् எண்ணுவாயாகில் அப்போது न मुक्तोसि நீ முக்தியை அடைந்தவனாகவும் இல்லை. பந்தம் மோக்ஷம் இரண்டுமே உண்மையல்லவே! தோற்றம்தானே! உண்மை நிலையை அடைந்த உனக்கு தோற்றமாகவுள்ள பந்தம் மோக்ஷம் எப்படி ஏற்படும். பந்தம் மோக்ஷம் என்ற தோற்றம் அற்றவனுக்கு साकारं உருவத்துடன் கூடியது, निराकारं உருவம் அற்றது என்று आत्मानं ஆத்மாவைப்பற்றிய எண்ணம் தோன்றாது அதனால் आत्मानं பிரஹ்மாத்ம ஸ்வரூபத்தை, உருவத்துடன் கூடியது என்றோ உருவம் இல்லாதது என்றோ कथं मन्यसे எப்படி எண்ணுவாய். எண்ண முடியாததுதான்.

இங்கு कथं मन्यसे என்று கேள்வி கேட்பதாக கொள்ளாமல் ஆக்ஷேபணையாக சொல்வதாக ஏற்றுக்கொண்டு பார்த்தால் அர்த்தம் பொருத்தமாகும். எப்படி எண்ணுகிறாய்? எண்ணுவாய்? எண்ண முடியாததுதான் என்று பொருள்.

# अवधूतगीता

# அவதூத கீதை

## श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேச்வர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

जानामि ते परं रूपं प्रत्यक्षं गगनोपमम् ।
यथा परं हि रूपं यन्मरीचिजलसन्निभम् ॥ ५२ ॥

அவதாரிகை: ஆத்மாவினுடையதும் அனாத்மாவினுடையது மான ஸ்வரூபத்தை விளக்குகிறார்.

गगनोपमं ஆகாயம் போன்றதான ते உன்னுடைய परं रूपं உயர்ந்த ஸ்வரூபத்தை प्रत्यक्षं ப்ரத்யக்ஷ அனுபவத்தில் जानामि அறிகிறேன் यथा எவ்வாறு (अ) परं ஆத்மாவைவிட வேறாகவுள்ள यत् रूपं யாதொன்று தோன்றுகிறதோ அந்த मरीचिजलसन्निभम् கானலில் தோன்றுகின்ற ஜலம் போன்றதாக காண்கிறேனோ! அவ்வாறு அறிகிறேன்.

ஆத்மஸ்வரூபம் எங்கும் பரந்து ஆகாயம்போல் இருக்கின்றது. ஆகாயம் என்பது "இடவெளி" தவிர வேறில்லை. ஆகாயம் ப்ரத்யக்ஷமாக காணக்கூடியதல்ல என்று சாஸ்திரக்காரர்களின் மரபு. இந்த ஆகாயத்துக்கும் காரணமாக சாஸ்த்ரங்கள் ப்ரஹ்மதத்வத்தைப் பற்றி கூறுகின்றன. आत्मन आकाशः संभूतः என்பது வேத வாக்யம். ஆகாயமே ப்ரத்யக்ஷமாகாது. அதற்கும் காரணப்பொருளான ஆத்மதத்வம் ப்ரத்யக்ஷமல்ல என்று கூறவும் வேண்டுமோ! ஆனால் ஆகாயம் என்றதும் மனதுக்குள் ஒரு ஜ்ஞானம் உண்டாகிறது. அது அனுபவம். அதுபோன்று ஆத்மா என்றதும் ஒருவித ஜ்ஞானம் ஏற்படும். அதை மற்ற வஸ்துக்கள் போன்று ப்ரத்யக்ஷம் என்று கூற முடியாது. ஜ்ஞான ஸ்வரூபமே தான் அது. வேறு இல்லை என்று ஸித்தாந்தம். இதை நன்கு உணர்த்த வேண்டுவதற்காக கானலில் நீர்த்தோற்றம் எப்படி மித்யை என்று அனுபவத்தில் நன்கு ப்ரத்யக்ஷமாக தோன்றுகிறதோ இவ்விதம் ஆத்மா ஸத்யமானது என்று ஒரு ஸ்வரூபானுபவமாக அறிகிறேன் என்கிறார்.

न गुरुर्नोपदेशश्च नचोपाधिर्नमे क्रिया ।
विदेहं गगनं विद्धि विशुद्धोहं स्वभावतः ॥ ५४ ॥

அவதாரிகை: உயர்ந்ததான ஆத்மானுபவத்தைப் பொருத்து யோசித்துப் பார்த்தால் உபதேசமோ, விசேஷச் செயல்களோ ஒன்றும் உண்மையான ஸாதனமாகாது. என்றுமே மிகவும் தூய்மையானது. ஆத்மதத்வம் என்று கூறுகிருர்.

गुरुः न குருவுமில்லை उपदेशः च न அந்த குருவின் உபதேசமும் இல்லை उपाधिः च न உபாதியும் இல்லை मे क्रिया न எனக்கு (செய்ய வேண்டியதாக) க்ரியையும் இல்லை गगनं विदेहं ஆகாயமானது உடல் அற்றது (எந்தவித குணதோஷங்களும் ஸம்பந்திக்காதது) அவ்விதம் अहं நான் स्वभावतः இயற்கையிலேயே विशुद्धः மிகவும் தூய்மையானவன், மாசு அற்றவன் என்று विद्धि தெரிந்துகொள்

அஞ்ஞானிகளைப் பொருத்து சாஸ்த்ரங்களில்: ஸத்கர்மானுஷ்டானங்கள் செய்து. அதன்மூலம் ஆத்மாவிற்கு உபாதியான (முகத்துக்கு கண்ணாடி உபாதி அதேபோல் ஆத்மாவின் ப்ரதிபிம்பம் தோன்றும் இடமான, மனதை ஆத்மாவிற்கு உபாதி என்பார்கள்) மனதுக்கு தெளிவு ஏற்பட்டு, மனது அசையாமலும் (சலனமற்றதாகவும்) இருக்கும்போது ஸத்குருவின் உபதேசமும் ஏற்பட்டு, பிறகு புண்யசாலியானவனுக்கு மட்டுமே ஆத்மதத்வ ஜ்ஞானம் ஏற்படும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஜ்ஞானானந்த அனுபவம் ஏற்பட்டவனைப் பொருத்தோவென்ருல் குருவுமில்லை. உபதேசமும் இல்லை. ஆத்மாவிற்கு உபாதியாகின்ற மனதும் இல்லை, மனத்தூய்மைக்கு காரணமாகச் சொல்லப்பட்டிருக்கின்ற கர்மாக்களும் இல்லை. இயற்கையிலேயே மிகவும் தூய்மையான ஆத்மாவிற்கு சரீரமும் இல்லை. மேலே கூறிய அனைத்துமே பொருந்தாது என்று இந்த சுலோகத்தில் கூறப்பட்டது. இந்த மாதிரியான பேச்சுகள் உலகில் உலவிவருகின்றவர்களை அனுஸரித்து பார்த்தோம் ஆகில் மிகவும் பொருத்தமில்லை என்றே தோன்றும். ஆயினும் சாஸ்திரங்களில் ஜீவன் முக்தஸ்திதியில் உள்ளவர்களைப் பற்றிக் கூறும்பொழுது இவ்விதமேதான் பொருள்கள் இருக்கும். பல ஜீவன் முக்தர்கள் (உலகப்பற்று இல்லாதவர்களின் கூட்டத்தவர்கள்) பேசும்போது இவ்விதமான அஜாதவாதமே பெரும்பாலும் வேதாந்த பேச்சுக்கள் பேசும்போது பரிமாறிக் கொள்வார்கள். உலக வ்யவஹாரத்தில் பேசும்போது [illegible]ளுக்கு ஸ்ருஷ்டி வாதத்தையே நன்கு புரியும்படி கூறுவார்கள், இது இயல்பு.

विशुद्धोऽस्यशरीरोऽसि न ते चित्तं परात्परम् ।
अहंचात्मापरंतत्वं इति वक्तुं न लज्जसे ॥ ५५ ॥

அவதாரிகை: இவ்விதம் 'அஜாத' வாதம் பேசுபவர்களுக்கு மத்தியில், நான் என்றும், ஆத்மதத்வம் என்றும் வேறுபடுத்திப் பேசுதல் வெட்கமடையத்தக்கதாகும் என்று கூறுகிருர்.

विशुद्धोऽसि நீ மிகவும் தூய்மையானவன் अशरीरोऽसि சரீரமற்றவன் ते உன்பொருட்டு परात् பரமாத்மதத்வத்தைக் காட்டிலும் परं வேருக चित्तं மனது என்ற ஒன்றும் கூட न இல்லை (உண்மையில் கிடையாது) இவ்வாறு உண்மை இருக்கும்போது अहं நான் என்றும் परं तत्वं आत्मा च உயர்ந்த உண்மைப் பொருளாகவுள்ளது ஆத்மதத்வம் என்றும் वक्तुं பேசுவதற்கு (கூறுவதற்கு) कथ எவ்வாறு न लज्जसे ! வெட்கமடையாமல் இருக்கிருய் !

உலகில் தோன்றுகின்ற எல்லாமே ஆத்மாவைத் தவிற-வேறு இல்லை, மற்றவை யாவுமே கானல்நீர்போல் தோற்றம்தான். உண்மையல்ல என்று பேசுபவர்களின் மத்தியில் ஆத்மா என்றும், பரதத்வம் பரமாத்மாதான் வேறல்ல என்றும் பேசுவது பொருந்தாது, வெட்கமடையத்தக்கதான பேச்சுதான் என்கிருர்.

कथं रोदिषि हे चित्त ! ह्यात्मैव ह्यात्मना भव ।
पिब वत्स कलातीत मद्वैतं परमामृतम् ॥ ५६ ॥

அவதாரிகை: மனதையே அழைத்து அதற்கு நல்லுரை கூறுகிருர்.

हे चित्त ! ஓ மனமே ! कथं ஏன் (எதற்காக) रोदिषि அழுகிருய் வருந்துகிருய் आत्मैव हि நீயும் பரமாத்மாவாகவேதான் இருக்கிருய், வேறல்லவே ! आत्मना ஆத்ம ஸ்வரூபமாகவே भव இருப்பாயாக ! இவ்விதம் இருந்து கொண்டு कलातीतं கலைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டதும் परमामृतं எல்லா அமிருதங்களுக்கும் மேம்பட்டதுமான अद्वैतं அத்வைதாமிருதத்தை वत्स குழந்தாய் ! पिब பருகுவாயாக.

சந்திரனுக்கு 16 கலைகள் உண்டு. ஒவ்வொரு கலையும் அமிருதமாகும். ஒவ்வொரு தேவரும் (அக்னி, இந்திரன் முதலிய

வர்) ஒவ்வொரு கலாமிருதத்தை சாப்பிடுகிறார்கள் என்று புராணங்கள் கூறுகின்றன. அங்கு 16 கலைகள்தான் உண்டு. மேற்கொண்டு கிடையாது. இவ்விடமோ, கலைகள் என்ற கணக்கில் அடங்காததும் சந்திரகலையைக் காட்டிலும் மிகவும் உயர்ந்ததுமான அமிருதம் அத்வைதாமிருதம். சந்திரகலை அமிருதத்தை சாப்பிட்டவர்கள் மறுபடி 30 தினங்களுக்குப்பின் மறுபடி அமிருதபானத்தை எதிர்பார்ப்பார்கள். அத்வைதாமிருத பானம் செய்தவர்கள் மறுபடி அமிருதபானம் செய்ய வேண்டியதில்லை. அமிருத ஸ்வருபமாகவே ஆகிவிடுகிறார்கள். சந்திரகலாமிருதம் சாப்பிட்டவர்கள் திரும்பத் திரும்ப அமிருதத்தை பருக விரும்பிக்கொண்டே இருக்கிறார்கள். இவ்விடம் அத்வைதாமிருத பானம் செய்துவிட்டால் பிறகு விரும்புவதேயில்லை. இந்த காரணத்தைக் கொண்டுதான் இங்கு कलातीतम् என்று கூறப்பட்டிருக்கிறது. மேலும் ஜீவனுக்கு षोडशकलाः பதினாறு கலைகள் உண்டு. परमात्मा कलातीतः ஆத்மதத்வத்திற்கு கலைகள் இல்லை என்ற விஷயமும் தெரிவிக்கப்பட்டது (தொடரும்)

# अवधूतगीता

# அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

नैवबोधोनचाबोधो नबोधाबोधएवच।
यस्येदृशः सदाबोधः सबोधो नान्यथाभवेत् ॥ ५७ ॥

அவதாரிகை: உயர்ந்த தத்வஜ்ஞானம் எவ்விதமானது என்று கூறுகிறார்.

नैवबोधः போதருபமுமல்ல न च अबोधः போதருபமல்ல என்றுமில்லை न च बोधाबोध एव போதம் அபோதம் என்ற இரண்டும் சேர்ந்ததுமல்ல यस्य எவனுக்கு ईदृशः இப்படிப்பட்ட बोधः அறிவானது (ஜ்ஞானமானது) सदा எப்போதும் இருக்குமோ सः बोधः அதுவேதான் (தத்வஜ்ஞான) போதருபமாகும் अन्यथा வேறுவிதமாக न भवेत् இருக்காது.

बोधः என்றால் மனோவிருத்தி ரூபமான ஜ்ஞானம் என்று பொருள் மனதானது வெளிவஸ்துவை உணர்த்துவதற்காக, வ்ருத்தி-என்ற முறையில் சரீரத்தை விட்டு வெளிவந்து, ஒரு வஸ்துவை வியாபித்துக்கொண்டு அந்தப்பொருளை ஆத்மாவிற்கு தெரிவிக்கும் பொருட்டு ஏற்படும் நிலை. இதை बोधः என்று சொல்வது. இதற்கு மாறாக மனது வ்ருத்தியாக மாறாமல் இருப்பது अबोधः ஜ்ஞானம் இல்லாத நிலை எனப்படும். பரமாத்மாவை வியாபித்துக்கொண்டு ஜ்ஞானத்தை உண்டுபண்ணுவதற்கு வேண்டிய திறமை மனதுக்கு கிடையாது. மனது இயங்குவதற்கு ஆத்ம சக்திதான் காரணம். அந்த மனது ஆத்ம ஸ்வரூபத்தினிடம் செல்வதற்கு சக்தியற்றதாகும். ஆகவே, மனது சென்று வஸ்துவை பிரகாசமடையச் செய்யக்கூடிய இடத்தில்தான் 'போத:' என்றோ 'அபோத:' என்றோ கூறமுடியும். ஒரே பொருள் ஒரே ஸமயத்தில் இரண்டு உருவம் உள்ளதாக இருக்காது இருட்டு வெளிச்சம் இரண்டும் சேர்ந்ததாக எங்கும் வியவஹாரம் கிடையாது. இருட்டு என்றால் வெளிச்சம் இல்லை. வெளிச்சம் என்றால் இருட்டு இல்லை.

இரண்டும் சேர்ந்து ஒரு பொருளாக உள்ளநிலை கிடையாது. இவ்விதம் போதம் அபோதம் என்று இரு நிலையும் சேர்ந்ததாக தத்வ ஜ்ஞானம் இருக்காது. இதை விட்டு நான்காவது நிலை என்பது கிடையாது. ஆனால் ஆத்ம ஜ்ஞானம் என்று கூறப்படுகிற நிலை ஒன்று உண்டு. அதை மேற்கூறிய மூன்று விதமாக கூறமுடியாது. ஆனாலும் அது ப்ரகாசமானதால், வேறு விளக்கம் கூறமுடியாத நிலையில் போத: என்றே கூறவேண்டியதாகிறது. ஆனால் அது தனிப்பட்ட பெருமை கொண்ட அறிவுருபம். அந்த அறிவு ஏற்பட்டு விட்டால் எப்போதும் மாறாது, அழியாது, நிலைத்தே இருக்கும். மற்ற போதங்கள் மாறிக்கொண்டே இருக்கும்.

ज्ञानं न तर्कों न समाधियोगः न देश कालौ न गुरूपदेशः ।
स्वभावसंवित्तिरहं चतत्वं आकाशकल्पं सहजं ध्रुवञ्च ॥ ५८ ॥

அவதாரிகை : தத்வஜ்ஞானம் என்ற சிறந்த நிலையை தர்க்கம், ஸாங்கியம், யோகம் எனப்படுகின்ற சாஸ்திரங்களாகவும் காலம் தேசம் என்ற பொருள்களாகவும் கூட கூறமுடியாது என்கிறார்.

ज्ञानं தத்வஜ்ஞானம் (ப்ரஹ்ம ஜ்ஞானம் என்பது) न तर्कः தர்க்க சாஸ்திரம் முதலியவைகளால் ஊஹித்து அடையக்கூடியது மல்ல न समाधियोगः யோக சாஸ்திரத்தில் கூறப்பட்ட ஸமாதி, யோகம் முதலியவைகளுமல்ல देश कालौ न தேசம் காலம் எனப் படுபவைகளுமல்ல, புண்ய தேசத்தில் புண்ய காலத்தில் ஏற்படும் என்றும் கூறமுடியாது. न गुरूपदेशः குருவின் உபதேசம்தான் ஜ்ஞானம் என்றும் கூறமுடியாது. பின்னேவென்றால் स्वभावसंवित्तिः இயற்கையாகவே என்றும் உள்ள அறிவு ருபமானது (ஜ்ஞானம்) आकाशकल्पं ஆகாயம் போல் (தனக்கு இல்லாத இடமே இல்லை, எங்கும் பரந்து நிற்பது) எங்கும் பாய்ந்து நிற்க வல்லது सहजं தானாகவே உள்ளது ध्रुवंच அழிவற்றதுமாகும் अहं तत्वं च நானும் அதுவும் வெவ்வேறல்ல, ஒன்றே. உண்மைப்பொருளும் அதுவே. இவ்விதம் अहं என்ற ஆத்மப்பொருளும் ज्ञानं என்கிற ப்ரஹ்ம ஸ்வருபமும் ஒன்றேதான். அதுவே முக்காலத்திலுமுள்ளது அழியாப்பொருளுமாகும்.

न जातोऽहं मृतोवापि न मे कर्मशुभाशुभम् ।
विशुद्धं निर्गुणं ब्रह्म बन्धोमुक्तिः कथं मम ॥ ५९ ॥

அவதாரிகை: இது முதற்கொண்டு ப்ரஹ்ம ஜ்ஞானியான ஜீவன்முக்தன் தன்னுடைய அனுபவத்தைக் கூறுகிறான்.

न जातोऽहं நான் பிறந்தவனுமல்லன் अपिमृतोवा (न) மேலும் இறந்தவனுமல்ல मे எனக்கு कर्मशुभाशुभं சுபமான புண்ய கர்மாவோ அசுபமான பாபகர்மாவோ न கிடையாது. ஆனால் நான் विशुद्धं மிகவும் தூய்மையானதும் निर्गुणं குணஸம்பந்தம் அற்றதுமான ब्रह्म ப்ரஹ்மஸ்வரூபமாக உள்ளவன் मम மேற் கூறியபடி இருக்கிற எனக்கு बन्धः பந்தமும் मुक्तिः விடுதலையும் (முக்திநிலையும்) कथं எவ்விதமேற்படும்.

பிறந்தவனுக்கு மரணம் உண்டு. மரணம் இருப்பின் நிச்சய மாக பிறப்பும் உண்டு. எனக்கோ இவ்விரண்டுமில்லை. பிறப்பு என்று உண்டானால் நிச்சயமாகப் பந்தம் வந்துவிடுகிறது. பந்தம் என்பது கர்மாக்களின் சம்பந்தம். கர்மா என்பது शुभं अशुभं நல்லது கெட்டது, புண்யம் பாபம் என்று இருவகைப்பட்டது. கர்மசம்பந்தம் உண்டு என்று கொண்டால் மாசு படிந்துவிடும். மாசு படிந்ததை மிகத் தூய்மையானது என்று சொல்ல முடியாது. மாசு என்பது குணங்கள்தான். குணம் ஸத்வ ரஜஸ் தமஸ் எனப் படும். குணஸம்பந்தம் வந்தாலேயே ஸகுணமாகும். நிர்குணம் என்று கூறமுடியாது. இங்கு ப்ரஹ்மத்தை நிர்குணம் என்றும் மிகவும் தூய்மையானது என்றும் வேதங்கள் கூறுகின்றன. மேலும் பல இடங்களில் न कर्मणा वर्धते नो कनीयान् கர்மாக்களினால் வளர்ச் சியோ (வ்ருத்தியடைவதாகவோ, குறைவதாகவோ) குறைவோ ஆத்மாவிற்கு கிடையாது என்று வேதம் ஆத்மஸ்வரூபத்தை வர்ணிக்கிறது. குண கர்ம ஸம்பந்தமே பந்தம். அதினின்று விடு படுவதே மோக்ஷம் என்று கூறப்படுகிறது. கர்ம குண ஸம்பந்தமே இல்லாததால் பந்தமும் மோக்ஷமும் கிடையாது. இவ்விதம் பந்த மோக்ஷ ஸம்பந்தமே என்றும் இல்லாத ஆத்மாவைப்பற்றி நான் எவ்விதம் பந்தம் என்றும் மோக்ஷம் என்றும் கூறுவேன். இவ்விதம் கர்மஸம்பந்தம் இல்லாததால் பிறப்பு இல்லை, பிறப்பு இல்லாமை யால் இறப்பதுமில்லை. குணஸம்பந்தமில்லாததால் பந்தம் இல்லை, பந்தமில்லாததால் மோக்ஷம் இல்லை. இவ்விதம் நான் மிகத் தூய்மையானவன், எங்கும் பரந்து நிற்பவன், எவ்வித குண ஸம்பந்தமுமில்லாதவன், எனக்கு எந்தவித ஸம்பந்தமும் கிடை யாது. பந்தம் மோக்ஷம், பிறப்பு இறப்பு, நன்மை தீமை ஒன்றுமே எனக்கு இல்லை.

(தொடரும்)

# अवधूतगीता

# அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

नते च माताच पिताच बन्धुः नते च पत्नी न सुतश्च मित्रम् ।
न पक्षपातः न विपक्षपातः कथ हि सन्तप्तिरियं हि चित्ते ॥ ६३ ॥

ते உனக்கு माताच தாயாரும் न இல்லை (கிடையாது) पिताच தகப்பனாரும் न இல்லை बन्धुः உறவினரும் न இல்லை ते உனக்கு पत्नी च மனைவியும் न இல்லை सुतश्च பிள்ளையும் मित्रं தோழனும் (நண்பனும்) न இல்லை पक्षपातः ஒருபுரம் (ஒரு கக்ஷியில்) ஈடுபாடு என்கிற எண்ணமும் न கிடையாது विपक्षपातः எதிர் கக்ஷியில் சேர்க்கை (ஈடுபாடு) என்கிற கக்ஷி மாறி இருக்கும் எண்ணமும் न இல்லை एवं हि இவ்வாறு இருக்கும்போது चित्ते மனதில் इयं सन्तप्तिः இவ்வாறு தாப எண்ணங்கள் कथं हि எவ்வாறு ஏற்பட்டது?

மிக உயர்ந்த அனுபவம் ஏற்பட்டிருக்கும் ஸமயத்தில் குறுகிய மனத்தோற்றங்களுக்கு இடமேயில்லை. குறுகிய மன எண்ணங்கள் தோன்றும் வரையில் சிறந்த அனுபவம் ஏற்பட வழியில்லை. ஏற்பட்டிருக்க முடியாது. ஞானிக்கு மனஸ்தாபம் ஏற்பட வழி இல்லை என்பதை எதிர்மறையாக கூறி விளக்கியிருக்கிறார்.

दिवानक्तं नते चित्त उदयास्तमयौ नहि ।
विदेहस्य शरीरत्वं कल्पयन्ति कथं बुधाः ॥ ६४ ॥

चित्त ! ஓ மனமே ! ते உனக்கு दिवा பகல் என்று ஒன்றோ नक्तं இரவு என்று ஒன்றோ न கிடையாதே ! இவ்விதம் உண்மையிருக்க उदयास्तमयौ தோற்றம்—மறைவு என்ற இரண்டுமே नहि இல்லை, பொருந்தாது ! இவ்விதம் உண்மை இருக்க विदेहस्य தேஹ ஸம்பந்தமில்லாதவனுக்கு बुधाः வித்வான்கள் शरीरत्वं உடலுடன் கூடியிருக்கும் தன்மையை कथं எவ்வாறு कल्पयन्ति கற்பித்துக் கூறுகிறார்கள். மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது என்கிறார்.

*With the best compliments of :*



# EAST INDIA CERAMICS

**54, Virupakshipuram,**

**VELLORE - 632 056.**

Manufacturers of :-

Fireclay Sinks and Drain Boards.

# ஷண்முகானந்த பவன்

போர்டிங் & லாட்ஜிங்ஸ்

ரயில்வே பீடர் ரோடு, பழனி.



பஸ் ஸ்டாண்டுக்கும், கோவிலுக்கும் மிகவும் அருகில் உள்ளது. கார்நிறுத்தும் வசதி உள்ளது. எல்லா வசதிகளும் உள்ள விசால மான அறைகள், ஸம சீதோஷ்ண வசதியுள்ள அறைகளும் உள்ளது. அன்பான உபசரிப்பும் அறுசுவை உண்டியும் உண்டு. நவீன வசதி களுடன் கூடிய விஸ்தாரமான கல்யாண மண்டபமும் உண்டு.

உரிமையாளர் : K. ராமய்யர்

# अवधूतगीता

# அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

नते च माताच पिताच बन्धुः नते च पत्नी न सुतश्च मित्रम् ।
न पक्षपातः न विपक्षपातः कथं हि सन्तप्तिरियं हि चित्ते ॥ ६३ ॥

ते உனக்கு माताच தாயாரும் न இல்லை (கிடையாது) पिताच தகப்பனாரும் न இல்லை बन्धुः உறவினரும் न இல்லை ते உனக்கு पत्नी च மனைவியும் न இல்லை सुतश्च பிள்ளையும் मित्रं தோழனும் (நண்பனும்) न இல்லை पक्षपातः ஒருபுரம் (ஒரு கக்ஷியில்) ஈடுபாடு என்கிற எண்ணமும் न கிடையாது विपक्षपातः எதிர் கக்ஷியில் சேர்க்கை (ஈடுபாடு) என்கிற கக்ஷி மாறி இருக்கும் எண்ணமும் न இல்லை एवं हि இவ்வாறு இருக்கும்போது चित्ते மனதில் इयं सन्तप्तिः இவ்வாறு தாப எண்ணங்கள் कथं हि எவ்வாறு ஏற்பட்டது?

மிக உயர்ந்த அனுபவம் ஏற்பட்டிருக்கும் ஸமயத்தில் குறுகிய மனத்தோற்றங்களுக்கு இடமேயில்லை. குறுகிய மன எண்ணங்கள் தோன்றும் வரையில் சிறந்த அனுபவம் ஏற்பட வழியில்லை. ஏற்பட்டிருக்க முடியாது. ஞானிக்கு மனஸ்தாபம் ஏற்பட வழி இல்லை என்பதை எதிர்மறையாக கூறி விளக்கியிருக்கிறார்.

दिवानक्तं नते चित्त उदयास्तमयौ नहि ।
विदेहस्य शरीरत्वं कल्पयन्ति कथं बुधाः ॥ ६४ ॥

चित्त ! ஓ மனமே ! ते உனக்கு दिवा பகல் என்று ஒன்றோ नक्तं இரவு என்று ஒன்றோ न கிடையாதே ! இவ்விதம் உண்மையிருக்க उदयास्तमयौ தோற்றம்—மறைவு என்ற இரண்டுமே नहि இல்லை, பொருந்தாது ! இவ்விதம் உண்மை இருக்க विदेहस्य தேஹ ஸம்பந்தமில்லாதவனுக்கு बुधाः வித்வான்கள் शरीरत्वं உடலுடன் கூடியிருக்கும் தன்மையை कथं எவ்வாறு कल्पयन्ति கற்பித்துக் கூறுகிறார்கள், மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது என்கிறார்.

பகல் இரவு என்று கொண்டால், தோற்றம், மறைவு கட்டாயம் வந்துசேரும். கற்பனை செய்வது என்றால் உடனேயே "இல்லாதது" என்று சேர்ந்துவிடுகிறது. உண்மையானால் கற்பனையாகாது. கற்பனையென்றால் தோற்றமே என்று பொருள். இல்லாத வஸ்துவை, இல்லாத இடத்தில், இருப்பதாக எண்ணிக் கொள்வது என்பதுதான் கற்பனையாகும். विदेहस्य உண்மையில் உடலற்றவனுக்கு शरीरत्वं உடலுடன் கூடிய தன்மையை कथं बुधाः कल्पयन्ति எவ்வாறு கற்பிப்பார்கள். இது உண்மையல்ல, வீண் மனத்தோற்றம்தான் என்கிறார்.

नाविभक्तं विभक्तञ्च नहिदुःखं सुखादिच।
नहि सर्वमसर्वं च विद्धिचात्मानमव्ययम् ॥ ६५ ॥

अविभक्त வேறுபடாதது என்றும் विभक्तं வேறுபட்டது (பிளவுப்பட்டது) च என்றும் न கூறமுடியாது दुःखं துக்கரூபமானது (கஷ்டமாகவுள்ளது) என்றும் सुखादिच ஸுகரூபமாகவுள்ளது என்றும் नहि கூறமுடியாது सर्वं எல்லாமாகவும் உள்ளது असर्वंच எல்லாமாகவும் இல்லாதது என்றும் नहि, கூறவும் முடியாது आत्मानं ஆத்மஸ்வருபத்தை अव्ययं च எந்தவிதமான குறைவும் அற்றது என்றும் विद्धि தெரிந்துகொள்.

नाहं कर्ता न भोकाच नमे कर्मपुराधुना।
नमे देहो विदेहो वा निर्ममेति ममेति किम् ॥ ६६ ॥

அவதாரிகை: ஏற்கனவேயே கூறப்பட்டவைகள்தான், திரும்ப திரும்ப கூறப்படுகின்றன. ஆதலால் தனியாக அவதாரிகை கூறவேண்டியதாக அமையவில்லை.

अहं நான் न कर्ता செயல் புரியும் கர்தாவாக இல்லை भोक्ता च அனுபவிக்கின்றவனாகவும் இல்லை मे எனக்கு என்று कर्म நல்லது கெட்டது என்று சொல்லத்தக்கதாக கர்மாவும் पुरा முன்னொரு சமயத்திலோ अधुना தற்சமயத்திலோ न இல்லை मे எனக்கு देहः உடல் என்றோ विदेहोवा உடல் அற்ற நிலை என்றோ न கிடையாது (இல்லை) निर्मम इति என்னுடையது என்று கூறுவதற்காகவுள்ள ममकारः இல்லை என்றோ ममइति ममकारः உண்டு என்றோ किम् எவ்விதம் கூறமுடியும்?

உலகில் முதலில் உடல் சம்பந்தம் வந்து சேருகிறது. உடல் சம்பந்தம் வந்தவுடன் என்னுடையது என்ற மம்காரம் வருகிறது. மம என்று வந்ததும் நான் என்ற கர்த்ருபாவம் ஏற்படுகிறது. கர்த்தாவாக இருப்பவனுக்கு பலனுடைய (போகம்) அனுபவம் என்ற போக்த்ருத்வம் வருகிறது. மறுபடி மறுபடி இந்த வரிசை சுழன்று வருகிறது. இதினின்று விடுபடுவது முடியாது என்று தோன்றுகிறது. தனிப்பட்டதாகவுள்ள ஆத்ம தத்வஜ்ஞானம் வரும்வரை இவைகள் பிணைப்புள்ளவைகளாகவே தோன்றிக் கொண்டிருக்கும். தத்வஜ்ஞானம் என்ற ஒளி தோன்றியவுடன் மயக்கம் நீங்கி பிணைப்புகள் உண்மையானவைகள் அல்ல என்று நன்கு விளங்கும்.

இந்த செய்யுளில் கூறும்போது நல்ல பரிபக்வமடைந்த ஞானியினுடைய வியவஹாரத்தை ஒட்டி பேசியிருக்கிறார். உயர்ந்த ஞானநிலை வராத ஏனைய மக்களுக்கு இது வியப்பாகவேதான் தோன்றிக்கொண்டிருக்கும்.

न मे रागादिको दोषः दुःखं देहादिकं न मे ।
आत्मानं विद्धि मामेकं विशालं गगनोपमम् ॥ ६७ ॥

मे எனக்கு रागादिकः ஆசை முதலியனவாக உள்ள दोषः கெடுதலானது न கிடையாது देहादिकं உடம்பின் தோற்றம் முதலாகவுள்ள दुःखं கஷ்டமும் न मे எனக்குக்கிடையாது. विशालं எங்கும் பரவியுள்ள गगनोपमं ஆகாயம் போன்ற एकं ஒன்றே ஒன்றான आत्मानं ஆத்ம தத்வ ஸ்வரூபமாக मां என்னை विद्धि தெரிந்துகொள் என்று குரு கூறுகிறார். (தொடரும்)

## ஒரு கடிதம்

சத்குரு சரணங்களுக்கு அனேக கோடி நமஸ்காரங்கள். நலம். நானும் என் மனைவியும், என் தந்தை ஸ்ரீ S. V. ரெங்கனாதன் அவர்களின் ஆசீர்வாதத்தாலும் அனுமதியுடனும் ஆசிரமம் வந்து தங்களை தரிசித்து ஸங்கடஹர சதுர்த்தி பூஜையில் கலந்துகொண்டு மறுநாள் ஸத்திய நாராயண பூஜையும் செய்தது இன்று கோரிய பலன் அளித்திருக்கிறது.

இது என் மனைவி வித்யாவுக்கு கர்ப்பம் இரண்டாவது மாதம். எல்லாம் நல்லபடி முடிய எங்களை வாழ்த்திட ஆசீர்வதிக்கும்படி தாழ்மையான வேண்டுகோள். உண்மையான பிரார்த்தனைக்கு என்றும் பலன் உண்டு என்று அப்பா சேலத்திலிருந்து எழுதி இருக்கிறார்.

S. R. ரவி,
குவேம்புநகரா, மைசூர்.

# अवधूतगीता

## அவதூத கீதை

श्रीदत्तात्रेयविरचिता श्रीस्वामिकार्तिकेयसंवादरूपा ।

வேதாந்த வித்வான் ஸ்ரீ N. S. யஜ்ஞேசுவர சர்மா, அல்லூர்.

[தொடர்ச்சி]

अतीतानागतंकर्म वर्तमानं तथैवच ।
न करोमि न भुञ्जामि इति मे निश्चलामतिः ॥ ७२ ॥

அவதாரிகை: ஜீவர்களுக்கு கர்ம ஸம்பந்தம் உண்டு என்றும் அந்த கர்மாக்கள் மூன்றுவிதம் என்றும் அவைகள் ஸஞ்சிதம் - பிராரப்தம்- ஆகாமி என்று மூன்று வகைப்படும் என்றும் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இவ்விதமான கர்மாக்கள் ஞானியைப் பொருத்து கிடையாது என்றும் விவரிக்கிறார்.

अतीतानागतं அதீதம், அனுகதம் என்று சொல்லப்படுகின்ற கர்மாக்களும் तथैव இவ்விதமே वर्तमानं च நிகழ்காலத்தில் அனுபவிக்கப்படுகின்றதுமான மூன்றுவிதமான கர்மாக்களையும் न करोमि நான் செய்யவுமில்லை. न भुञ्जामि (கர்ம பலன்களை) நான் அனுபவிக்கவுமில்லை इति என்று मे எனக்கு निश्चितामतिः தீர்மானமாக அறிவு இருக்கிறது.

தத்வக்ஞானம் வரும்போது அஜ்ஞானம் விலகிவிடுகிறது. அக்ஞானத்தின் அடிப்படையில்தான் கர்மாக்கள் ஏற்படுகின்றன. அக்ஞானம் விலகும்போது அதனுடைய கார்யங்களான கர்மாக்களும் விலகிவிடுகின்றன என்பது சாஸ்த்ர ஸித்தாந்தம். இந்த சட்டப்படி ஞானம் அடைந்தவனுக்கு கர்மாக்களைப் பற்றிய எண்ணமே உதிக்க இடமில்லை. இந்த தீர்மானம் கொண்டுதான் இந்த ச்லோகத்தில் கர்மாக்களை ஆக்ஷேபித்து பேசுகிறார்.

शून्यागारे समरसपूतः तिष्ठन्नेकः सुखमवधूतः ।
चरतिहिनग्नस्त्यक्त्वा गर्वं विन्दतिकेवलमात्मनि सर्वम् ॥ ७३ ॥

அவதாரிகை: தத்வஜ்ஞானியினுடைய நிலையை அவனுடைய அனுபவரூபமாக வர்ணிக்கிறார்.

अवधूतः எல்லாவிதமான பந்தங்களையும் உதறியவனாகவுள்ள ஞானியானவன் शून्यागारे ஒன்றுமில்லாததான (ஸர்வசூன்யமான) ரூமுக்குள் समरसपूतः ப்ரஹ்மஸ்வரூபரஸமான ஆனந்தத்தினால் சுத்தனாகவும் गर्वं அஹங்காரரூபமான கர்வத்தை त्यक्त्वा விட்டொழித்து नग्नः வஸ்த்ரமற்றவனாகவும் एकः தனித்து இருப்பவனாகவும் तिष्ठन् இருந்துகொண்டு चरति உலவி வருகிறான். आत्मनि केवलं ஆத்மஸ்வரூபத்தில் மட்டும் सर्वं எல்லாவிதமான ஸந்தோஷத்தையும் विन्दति அடைகிறான்.

ஞானிக்கு எல்லாமே ஆத்மஸ்வரூபமாகவே தெரியும். வேறுபாடு உள்ள வஸ்துக்கள் ஒன்றுமே தெரியாது. தான் இருக்கும் இடமும், அனுபவிக்கின்ற ஸந்தோஷமும், நான் என்ற எண்ணமும் உடல், பொருள், ஆடை என்ற வேற்றுமை எண்ணமும்கூட எல்லாமே ஆத்மானுபவ ரஸரூபமாகவேதான் தோன்றும் வேறாகத் தெரியாது.

त्रितयतुरीयं नहि नहि यत्र विन्दतिकेवलमात्मनि तत्र ।
धर्मो धर्मौ नहि नहि यत्र बद्धोमुक्तः कथमिह तत्र ॥ ७४ ॥

அவதாரிகை: வேதாந்த சாஸ்த்ரத்தில் ஜாக்ரத் - ஸ்வப்னம் - ஸுஷுப்தி என்று மூன்று அவஸ்தைகளிலும் உள்ள ஆத்மாவைக் காட்டிலும் தத்வஜ்ஞானம் ஏற்படும் நிலையில் உள்ள ஆத்மாவை துரீயம் (நான்காவது) என்று சொல்லுகிறது. இந்த 4 நிலைகள் அஜ்ஞானம் உள்ளவனைப் பொருத்தே பொருந்தும். ஜ்ஞானியினுடைய நிலையில் ஒன்றேதான் தோன்றும். 3, 4 என்பதெல்லாம் தோன்றாது என்பதை விவரித்துக் கூறுகிறார்.

यत्र எந்த நிலையில் (ஆத்மஸ்வரூபத்தில்) त्रितय-तुरीयं மூன்றாவது நான்காவது என்ற பேதபுத்தியானது नहि नहि இல்லவே இல்லையோ, तत्र அங்கே (அந்த ஆத்மஸ்வரூபமான மோக்ஷநிலையில்) आत्मनि தன்னிடத்திலேயே केवलं ஆனந்த அனுபவரூபமான (ஏகரூபமான) ஸந்தோஷத்தை विन्दति அடைகிறான். यत्र எந்த ஆத்ம நிஷ்டையில் धर्माधर्मौ தர்மம் அதர்மம் என்ற புண்யபாபங்கள் नहि नहि இல்லவே இல்லையோ इह இவ்வுலகில் இந்த சரீரத்தில், तत्र बन्धः मुक्तः பந்தம், மோக்ஷம் என்பது कथम् எப்படி பொருந்தும்.

உயர்ந்த தத்வஜ்ஞானியினுடைய அனுபவத்தை விவரிக்கின்ற இந்த சுலோகத்தின் பொருள் உலகில் உள்ளவர்களுக்கு புரியாது. விபரீதமாக சொல்லியிருப்பதாகவும் தோன்றலாம். ஜ்ஞான நிஷ்டர்களுக்குத்தான் சரியென்று தோன்றும்.

विन्दति विन्दति नहिनहि मन्त्रं छन्दोलक्षणं नहिनहि तन्त्रम् ।
समरसमग्नो भावितपूतः प्रलपितमेतत्परमवधूतः ॥ ७५ ॥

அவதாரிகை: மந்திரங்கள், சாஸ்த்ரங்கள் எல்லாமே ஜ்ஞானியினுடைய பார்வையில் கிடையாது. அவனுடைய பேச்சும் உளறல் போலவே தோன்றலாம்.

मन्त्रं மந்திரங்களை नहि नहि विन्दति அவன் அடைவதில்லை, பெறுவதில்லை. தன்னுடைய நல்வழிக்காக நாடுவதில்லை. இவ்விதமே छन्दोलक्षणं வேதங்களின் உருவத்தில் இருக்கின்றதும், तन्त्रं வசனரூபமாகவும் விசாரங்கள் ரூபமாகவும் உள்ள சாஸ்த்ரங்களையும் नहि नहि विन्दति ஜ்ஞானி அடைவதில்லை. समरसमग्नः எல்லா இடத்திலும ஒரே ஆனந்தரஸமாயுள்ள தண்ணீருக்குள் மூழ்கியவனாகவும் भावितपूतः பரப்ரஹ்ம பாவனையினால் (மறுபடி மறுபடி அதையே எண்ணிக்கொண்டிருத்தலால்) पूतः தூய்மையானவனாகவும் अवधूतः எல்லாவிதமான பந்தங்களையும் விட்டவனாகி, (அவன் பேசுகின்ற) एतत्-प्रलपितं இந்தப் பேச்சு— உலகில் உள்ளவர்களைப்போல் அவனும் பேசமாட்டான்,

ஜ்ஞானியின் பேச்சு தனியாக இருக்கும், எந்தவிதமான சட்டங்களுக்கும் வரைமுறைகளுக்கும் பொருத்தமாக அமையாது. உளறல் போலவே இருக்கும். प्रलपितं என்று சொல்வதை கவனிக்கவேண்டும்.

सर्वशून्यमशून्यं च सत्यासत्यं नविद्यते ।
स्वभाव भावतः प्रोक्तं शास्त्रसंवित्तिपूर्वकम् ॥ ७६ ॥

அவதாரிகை: எழுபத்தைந்து சுலோகங்களினால் கூறிய ஸாதனங்களை, முதல் அத்யாயக் கடைசி சுலோகத்தினால் ஜ்ஞான நிஷ்டையில் பேசியவைகள், சாஸ்த்ர ஸம்மதமாக பேசியவை என்று முடிக்கிறார்.

सर्वशून्यं எல்லாப் பொருள்களுமே உண்மையில் சூன்யமானவைகள்தாம் கானல்நீர், கிளிஞ்சல் வெள்ளி என்று கூற

பவைகளைப்போல் உண்மைப் பொருள்களில்லை. अशून्य च அடிப்படையான ஆத்மாவிலேயே தோன்றுவதால் ஆத்மபாவனையில் பார்க்கும்போது சூன்யமில்லை. உண்மையே! सत्यासत्यं ஸத்யம் என்றும் அஸத்யம் என்றும் (உண்மைப்பொருள் அஃதல்லாதது என்றும்) नविद्यते கிடையாது. இவ்விதமாக शास्त्रसंवित्तिपूर्वकं ஜ்ஞான சாஸ்த்ரமாகிய அத்வைத சாஸ்த்ர ஸித்தாந்தமான அறிவு நிலையை ஏற்று (முன்னிட்டுக்கொண்டு) स्वभाव-भावतः இருக்கின்ற இயற்கையான வஸ்துவின் இயல்பை அனுசரித்து प्रोक्तं இவ்விதம் கூறப்பட்டிருக்கிறது - சொல்லப்பட்டிருக்கிறது.

इति श्रीदत्तात्रेयविरचितायामवधूतगीतायां
आत्मसंवित्युपदेशोनाम प्रथमोध्यायः ।

இவ்விதம் ஸ்ரீ தத்தாத்ரேயரால் அருளிச் செய்யப்பட்டதும், ஆத்மதத்வ ஜ்ஞான உபதேசரூபமாகவும் உள்ள அவதூத கீதையில் முதல்அத்யாயம் முற்றும். இந்த அத்யாயத்திற்கு ஆத்ம ஸம்வித்தியுபாயம். (ஆத்மஜ்ஞானம் ஏற்படுவதற்கான ஸாதனங்களை கூறும் அத்யாயம்) என்று பெயர்.

ॐ

PRANAMS TO
SRILASRI AVADHUTA
KRISHNANANDA BRAHMENDRA
SWAMIGAL OF SENDAMANGALAM.

PRANAMS TO ALL ATMAN.

*WITH COURTESY FROM :*

'A. JEEVATMAN'

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

## இரண்டாவது அத்யாயம்

வேதாந்தவித்வான் ப்ரும்மஸ்ரீ N. S. யக்ஞேஸ்வர சர்மா, அல்லூர்.

अवधूत उवाच

बालस्य वा विषयभोगरतस्य वापि
मूर्खस्य सेवक जनस्य गृहस्थितस्य ।
एतद्गुरोः किमपि नैवनचिन्तनीयम्
रत्नं कथं त्यजति कोऽप्यशुचौ प्रविष्टम् ॥ १ ॥

அவதூதர் சொல்கிறார் :

அவதாரிகை : தத்வஜ்ஞானம் வந்த ஸாதுக்கள் எப்படி இருக்கிறார்கள் என்று யோசிக்க வேண்டாம். ஞானம் பெற்றவர்கள் எப்படி இருப்பினும் அவர்கள் மிகவும் உயர்ந்தவர்தான் என்று கூறுகிறார்.

बालस्य वा இளம் வயதில் இருப்பவனோ अपिवाविषयभोगरतस्य விஷயங்களில் ஈடுபட்டு ரஸிப்பவனாகவோ मूर्खस्य மூடனாகவோ सेवकजनस्य வேலைக்காரக் கூட்டத்தில் சேர்ந்தவனாகவோ गृहस्थितस्य வீட்டில் (கிருஹஸ்தாச்ரமத்தில்) இருப்பவனாகவோ இருந்தாலும் गुरोः தத்வஜ்ஞானியான குருவைப் பற்றி एतत् இம்மாதிரியான விசேஷங்களைப்பற்றி किमपि ஒன்றையும்பற்றி न चिन्तनीयं ஆலோசிக்க வேண்டியதில்லை, எப்படியெனில் अशुचौ प्रविष्टं குப்பைகளுக்கு நடுவில் சேர்ந்திருந்தாலும் கூட रत्नं நவரத்தினத்தை कोपि எந்த ஒருவனும் कथं எவ்வாறு त्यजति விட்டுவிடுவான் नैव त्यजति தள்ளவேமாட்டான். ரத்னத்தை எடுத்துக்கொள்ள முயற்சி செய்து எடுத்துக் கொள்வானே தவிர தள்ளிவிடமாட்டான்.

இவ்விதமாக குருவின் நடத்தைகளை நாம் பரீக்ஷை செய்வதில் பயனில்லை. அவர்கள் உயர்ந்ததான பரம்பொருளை எய்தியவர்கள். உலகத்தாருடன் கூடி அவன் பலவிதமாகக்காணப்படுவான் ஆனாலும் அவனுடைய ஞானம் அசையாது. எவ்விதம் எனில், தலையில் 'கரகம்' வைத்துக்கொண்டு ஆடுபவன், தன்னுடைய தலையில் உள்ள கரகம், கீழே விழாமல் இருப்பதற்கு வேண்டிய ஒரு எண்ணத்துடன் கூடியவனாகவே நர்த்தனம் தாளம் எல்லாவற்றிற்கும் பொருத்தமாக ஆடுவான். ஆனால் கரகத்தை கீழே விழுந்துவிடும்படி ஆடமாட்டான். வெளிப்பார்வைக்கு பலவிதமாக தோன்றினாலும், அவன் மனம் கரகத்தைவிட்டு அசையாது.

नैवात्र काव्यगुणएव तु चिन्तनीयो
ग्राह्यः परं गुणवताखलु सार एव।
सिन्दूर चित्ररहिता भुवि रूपशून्या
पारं नकिं नयति नौरिह गन्तुकामान् ॥ २ ॥

அவதாரிகை: குருவிடம் சென்று தத்வத்தை உணரவேண்டும் என்று எண்ணம் கொண்டவன், குருவினுடைய பாண்டித்யம், கவிதை பேச்சு இவைகளை யோசிக்க வேண்டியதில்லை. தனக்கு உயர்ந்த ஸாரமான ஆத்ம ஞானத்தை அடையவே நோக்கம் கொண்டவனாக இருத்தல் வேண்டும்.

अत्र இவ்விடம் गुणवताखलु சிறந்த குணசாலியினால் सारः एव- परं மிக்வும் உயர்ந்ததும், மிகவும் ஸாரமாகியதுமான ஞானம் ஒன்றே ग्राह्यः கிரஹித்துக்கொள்ளத் தக்கதாகும் काव्य गुणएवतु அவனுக்கு உள்ள காவ்ய-நாடகாலங்கார திறமையைப் பற்றியே नैव चिन्तनीयः ஆலோசிக்க வேண்டியதில்லை. நமக்கு வேண்டிய முக்கிய அம்சத்தை விட்டு மற்றவைகளைப் பற்றி யோசிக்க வேண்டாம். யோசிப்பதில் பயனில்லை, எவ்வாறெனில் உவமையைக் கூறுகிறார். इह भुवि இந்த உலகில் सिन्दूर चित्ररहिता பலவிதமான கலர் மைகள் தீட்டி மிகவும் அலங்கரிக்கப்பட்டாமல் இருந்தாலும் रूपहीना பார்வைக்கு அழகான அமைப்புடன் கூடியதாக இல்லாவிடினும் नौः ஓடமானது (படகானது पारं அக்கரையை गन्तुकामान् அடைய விரும்புபவர்களை नकिं नयति அக்கரையை அடைவிப்பதில்லையா ?

திண்ணமாக தாண்ட வைக்கிறது. அக்கரைக்கு செல்ல விரும்புபவன் படகின் அலங்காரங்களையோ அழகையோ பார்ப்பதில்லை. அக்கரையைத் தாண்ட இதுவே சிறந்த கருவி. அதைக்கொண்டு தாண்ட வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் எப்படியிருப்பானோ அவ்விதம், சீடன் குருவிடம் இருத்தல் வேண்டுமேயன்றி, அவர் நன்றாகப் பேசுகிறாரா, ஹாஸ்யமாக பேசுவாரா, அழகாக வர்ணனை செய்யத் திறமை கொண்டவரா, சிறந்த அலங்காரத்துடன் சுத்தமாக இருக்கிறாரா, கண்யமாக உள்ளவரா என்றெல்லாம் பரீக்ஷை செய்வதில் பயனில்லை. அவருடைய உபதேசம் நமக்கு அறிவை (தத்வ ஞானத்தை) உண்டுபண்ண வேண்டும் என்றே இருக்க வேண்டும்.

प्रयत्नेन विनायेन निश्चलेन चलाचलम्।
ग्रस्तं स्वभावतः शान्तं चैतन्यं गगनोपमम् ॥ ३ ॥

அவதாரிகை: எந்த ஒரு பரம்பொருளானது தான் அசைவற்றதாகவும் இயற்கையாகவே சாந்தமாகவும் (அமைதியாகவும்) உள்ளதோ அதற்குள் தான் [illegible] சராசரங்களான உலகம் உள்ளடங்கி இருக்கிறது.

प्रयत्नेनविना எந்தவிதமான செயலும் இல்லாததும் निश्चलेन சலனமற்றதுமான எந்த ஒரு येन பரம்பொருளால் चराचरं ஸ்தாவர ஜங்கமமான (உயிரினங்கள் அசையாப் பொருள்களான ஜடப்பொருள்கள்) எல்லாமே ग्रस्तं விழுங்கப்பட்டிருக்கிறதோ (தனக்குள் அடங்கியவைகளாக இருக்கின்றனவோ) அப்படிப்பட்ட चैतन्यं ஞானப்பிழம்பாகவுள்ள பரதத்வமானது स्वभावतः இயற்கையிலேயே शान्तं மிகவும் சாந்தமாகவும் गगनोपमं ஆகாசத்துக்கு துல்யமாகவும் இருக்கிறது.

ஆகாயமானது எங்கும் பரந்ததாகவும் நிரம்பி நிற்பதாகவும் அசைவற்றதாகவும் இருக்கிறது. அந்த ஆகாயத்துக்குள்ளேதான் பூமி, மலை, தண்ணீர், மரம், செடிகொடிகள், மேகம், மின்னல், இடியாவும் உள்ளன. ஆகாயமானது இடைவெளி கொடுத்தாற்போல (மற்ற வஸ்துக்கள் ஜீவர்கள் உலோகங்கள் யாவற்றையும் தனக்குள் கொண்டிருக்கிறது). இவ்விதமே பரம்பொருளும்கூட தோன்றுகின்ற ஸகலப்பொருள்களையும் தன்னுள் வைத்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. உண்மையில் பார்த்தால் பரதத்வம் தவிர வேறு ஒன்று உண்மையில் இல்லையே!

(தொடரும்)

# "தத்வமஸி"

## (ஒப்பற்ற ஒரு சொல்லால் விளையும் இன்பம்)

(S. V. ரங்கனாதன், சேலம்)

சாந்தோக்ய உபநிஷத்தில் ஸ்வேதகேது என்கிற தன் மகனுக்கு உத்தாலகர் ப்ரஹ்மஞானம் போதிக்கின்றார்.

குழந்தாய் ஒரு பாத்திரத்தில் சிறிது ஜலம் கொண்டுவா.
பையன் கொண்டுவந்தான்.
கொஞ்சம் உப்புக் கொண்டுவா.
கொண்டுவந்தான்.
உப்பைத் தண்ணீரில் போடு.
போட்டான்.
நாளைக் காலையில் என்னை வந்துபார்.
மறுநாள் ஸ்வேதகேது குருவிடம் வந்து வணங்கி நின்றான்.
குழந்தாய், நீ நேற்று ஜலத்தில் போட்ட உப்பை எடு.
ஸ்வாமி! உப்பைக் காணோமே. கரைந்துவிட்டது.
அந்த ஜலத்தை சுவைத்துப் பார்.
சுவைத்தான்.
எப்படி இருக்கிறது?
உப்பாக இருக்கிறது.

குழந்தாய்! உப்பு உன் கண்ணுக்குத் தெரியாமல் ஜலத்தில் கரைந்து இருக்கிறதல்லவா, அதுபோல்தான் ப்ரஹ்மம் நமது உள்ளத்திலும் நாம் காணும் ஸகல வஸ்துக்களிலும் அனுபோல் மறைந்திருக்கிறது.

இந்தக் காக்ஷியை தாயுமான ஸ்வாமிகள் பார்க்கிறார். "பராபரக்கண்ணி" உருவாகிறது.

"அப்பும் உப்பும் போன்ற ஐக்கிய பராநந்தர் தமக்கு
ஒப்புவமை சொல்லவும் வாயுண்டோ பராபரமே"

ப்ரஹ்மம் என்பது ஒரு அனுபவம்; உணர்வு. (Intuition) அதை விண்டு விவரிக்க முடியாது: "சொல்லவும் வாயுண்டோ" என்று கேட்கிறார் தாயுமானவர்.

"I hear and behold God in every object, yet understand God not in the least."

(Walt Witman in "Song of Myself")

'ஒவ்வொரு பொருளிலும் கடவுளை தான் காண்கின்றேன், கேட்கின்றேன், இருப்பினும் இம்மியளவுகூட இறைவனை அறிந்து சொல்லமுடியவில்லை.'

''அறிவிற்கு அப்பாற்பட்டது ப்ரஹ்மம் என்பதை அறிந்து கொண்டவன்தான் உண்மையில் ப்ரஹ்மத்தை அறிந்துகொண்டவன். ப்ரஹ்மத்தை அறிந்துகொண்டதாக எண்ணுபவன் உண்மையில் அறியாதவன். ப்ரஹ்மம் நம் அறிவைக் கடந்து நிற்பது என்பதை ஞானிகள் அறிவர்.'' (கேனோபநிஷத்து)

''அறிவுக்குள் அறிவாய் நின்று அறிவினை இயக்குவதே ப்ரஹ்மம்தான். எனவே அறிவைக்கொண்டு ப்ரஹ்மத்தை அறிய முடியாது. (ப்ருஹதாரண்யகம்)

ஒருவன் மூட்டை மூட்டையாகப் பஞ்சைசேர்த்துவைத்தான். பல மூட்டைகளை Godown-ல் அடுக்கினான். அவன் வ்யாபாரியுமல்ல. தாயுமானவருக்கு ஆச்சர்யம். அவனை மானஸீகமாகக் கேட்கிறார்.

''அப்பா! இவ்வளவு பஞ்சு மூட்டை எதற்கு? நீ என்ன பண்ணப்போறே?

நான் நூல் நூற்று பெரிய ஏணி செய்யப்போகிறேன்.

பெரிய நூல் ஏணியா எதற்கு?

நூலேணி வழியாக ஆகாய மண்டலம் போய் ஆண்டவனைப் பார்க்க.

[நூல், என்றால் கயிறு திரிக்கும் நூலாகவும் கொள்ளலாம், புஸ்தக அடுக்குகளாகவும் கொள்ளலாம்]

தாயுமானவர் இவர்களைப் பார்த்து சிரிக்கிறார்.

''நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவி நன்னூற்போதம் பராபரமே''

இந்த முட்டாள்தனத்திற்கு அறியாமை, அக்ஞானம் என்று பெயர்.

மனிதர்களிடம் உள்ள ஒரு வேண்டாத குணம் தன் விருப்பப் படியே இயங்குவதுதான். ''அவனன்றி ஓரணுவும் அசையாது'' என்பதை நம்பவே கூடாது என்ற பகுத்தறிவு கோஷ்டி எல்லா நாட்டிலும் உண்டு.

மனிதனுக்கு புத்தியிருக்கிறது. சக்தி இருக்கிறது. சுதந்திரம் இருக்கிறது. செயல்படுகிறான். சாதனைகள் படைக்கிறான். இது பகுத்தறிவு கோஷ்டி வாதம்.

இதற்கு நாம் பதில் கூறினால் அவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

ஜெர்மானிய தத்வஞானி ஷாப்பனர் இதற்கு பதிலளிக்கிறார்.

"A man can purely do what he wills to do, but he cannot determine what he wills" (Schopanhauer)

(மனிதன் எதை விரும்புகிறானோ அதைத்தான் செய்கிறான்; ஆனால் எதை விரும்பவேண்டும் என்பதை அவனால் தீர்மானம் செய்யமுடியாது.) தாயுமானவர் கதறுகின்றார்.

"செய்யும் செய்கையும் சிந்திக்கும் சிந்தையும்
ஐய நின்னது என்று எண்ணும் அறிவின்றி
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யிலே சுழன்றேன் என்ன புன்மையே."

மாபெரும் விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டின் கூறுகிறார்.

"I do not believe we can have any freedom at all in the philosophical sense, for we are not only under external compulsion but also by inner necessity."

(Albert Einstein in "I believe")

(மெய்ஞானக் கண்கொண்டு பார்த்தால் நமக்கு சுதந்திரம் எதுவுமே இருப்பதில்லை. புறநிலைக் கட்டாயங்களுக்கும் அகநிலை அவசியங்களுக்கும் உட்பட்டே நாம் செயல்படுகிறோம்.)

"என்செயலாவது யாதொன்றுமில்லை இனிதெய்வமே
உன்செயலே என்று உணரப்பெற்றேன்"

இது பட்டினத்தார் வாக்கு.

சுருக்கமாக முடிக்கவேண்டுமானால் —

மனிதனுக்கு உள்ளே ஒளிரும் ஞானம் ஒரு மௌனம். அண்டத்தின் அழகை அனைத்தையும் அளாவி நிற்கும் அழிவில்லாத ஒன்றை. அந்த அத்வைத வஸ்துவை "ஒரே சொல்லில் கூறினால் தான் பூரிப்பு எய்தமுடியும்.

அது ஒரு சொல்லே; அது தரும் பூரிப்பு ஆனந்தம். இதுவும் அடியேன் வார்த்தையல்ல. தாயுமானவர் வாக்கு காட்டுகிறது.

"என்னையும் தன்னையும் வேறு ... உள்ளத்து
எண்ணாதவண்ணம் இரண்டற நிற்கச்
சொன்னதுமோ ஒருசொல்லே - அந்தச்
சொல்லால் விளைந்த சுகத்தை என்சொல்வேன்"

(ஆனந்தக் களிப்பு)

மறுபடியும் ஆதி க்ரந்தத்திற்கே வரலாம்.

சாந்தோக்ய உபநிஷத்தில் உத்தாலகர் ஸ்வேதகேதுவுக்கு கூறுவதுதான் இது.

"மகனே! அந்த ஆத்மா நீதான், உலகமெலாம் நிறைந்த உண்மையான ப்ரஹ்மம்தான் உன் ஆத்மா. அதுவே நீ. நித்தியமான சத்தியமான ப்ரஹ்மம்தான் உன் ஆத்மா. ஆதலால் அதுவே நீ. "தத்வமஸி"

இந்த ஒரு சொல் இன்பமளிக்கும் சத்குரு சரணங்களைத் தொழுது வணங்குவோமாக.

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

## இரண்டாவது அத்யாயம்

வேதாந்தவித்வான் ப்ரும்மஸ்ரீ N. S. யக்ஞேஸ்வர சர்மா, அல்லூர்.

अयत्नाच्चालयेद्यस्तु एकमेव चराचरम्।
सर्वगं तत्कथं भिन्नमद्वैतं वर्तते मम ॥ ४ ॥

अयत्नात् எந்தவிதமான செயலுமில்லாமல் यस्तु எந்த ஒரு பரம்பொருளானது चराचरं உலகம் யாவற்றையும் चालयेत् அசையும்படி செய்கிறதோ एकमेवाद्वैतं இரண்டாகக் காண முடியாத ஒரே ஒரு பரப்ரஹ்ம தத்வமானது सर्वगं எங்கும் பரவிப் பாய்ந்து ஊடுருவி நிற்கின்றதோ तत् அந்த பரம்பொருளானது कथं எப்படி मम எனக்கு भिन्नं வேறுபட்டதாகவும் பலவாக இருப்பதாகவும் वर्तते இருக்க முடியும். எனக்கோ एकमेवाद्वितीयं என்ற தத்வ ஜ்ஞானம் ஏற்பட்டிருக்கிறது. நான் எப்படி வெவ்வேருக உலகம் இருப்பதாகக் காண்பேன். एकं-एव-अद्वितीयं என்ற 3 பதங்களுக்கும் सजातीय-विजातीय-स्वगत-भेदरहितं என்று பொருள். இதை நன்கு கூறுவதற்காகவே மூன்று பதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸஜாதீயபேதம் என்ருல், "மரம்" என்ருல் ஒரே ஜாதியில்லை. புளியமரம், மாமரம், தென்னைமரம் என்று வெவ்வேறு மரங்கள் உள்ளன. அதேபோல் பரம்பொருளுக்கு, தன்வகையைச் சேர்ந்த வேறு ஒன்றும் கிடையாது.

விஜாதீயபேதம்: மரம் என்ருல் மரத்தில் சேராத கல், மண், நீர் என்றெல்லாம் பொருள் இருக்கிறது. இம்மாதிரி பரம்பொருளுக்கு வேருக, மாருக உள்ள பொருள்களுமில்லை.

ஸ்வகதபேதம்: மரம் என்ருல், மரம்வேறு, கிளைவேறு-இவ்விதம் இலைவேறு, புஷ்பங்கள் வேறு, காய்கள் மரத்தைக் காட்டிலும் வேறு, பழங்கள் வேருக உள்ளன. இவைகளுக்கு ஸ்வகதபேதம் என்பார்கள். இவ்விதம் பரம்பொருளுக்கு, தன் இனத்தால் வேற்றுமையோ, தன்னை வேருகவுள்ள இனத்தால் வேற்றுமையோ, தனக்கு

உள்ளாக வேற்றுமையோ கிடையாது. இதை தெளிவாக விளக்க வேண்டியேதான் एकं एव-अद्वितीयं-ब्रह्म என்ற வாக்கியம் அமைந்து இருக்கிறது.

वृक्षादिभिः सजातीयः, विजातीयः शिलादिभिः, पत्रपुष्पादिभिः भेदः स्वगतोभेद उच्यते என்று வித்யாரண்ய ஸ்வாமி விளக்கம் கூறுகிறார். இவ்விதம் மூன்று விதமான வேறுபாட்டையும் பெறாத பரதத்வத்தை எவ்விதம் நான் என் அனுபவத்தில் வேறுபட்டதாகக் கூறுவேன் என்கிறார்.

अहमेव परं यस्मात् सारासारतरं शिवम् ।
गमागमविनिर्मुक्तं निर्विकल्पं निराकुलम् ॥ ५ ॥

அவதாரிகை : எனக்கு பேத ஜ்ஞானம் எப்படித் தோன்றும், தோன்றாது என்பதை 2, 3 சுலோகங்களில் நன்கு விவரித்துக் கூறுகிறார்.

यस्मात् யாது காரணத்தினால் सारासार तरं ஸாரம், அஸாரம் (உண்மை - பொய்) என்றதைக் காட்டிலும் வேறுபட்டதும் गमागम विनिर्मुक्तं செல்லுதல் திரும்பிவருதல் என்ற செயலற்றதும் निर्विकल्पं இவ்விதமானது அல்லது அவ்விதமானது என்று பேச முடியாததும் निराकुलं ஒருவிதமான கலக்கமற்றதுமான परं शिवं உயர்ந்ததான, மங்களமான பரப்ரஹ்ம ஸ்வரூபமாக अहमेव நானேதான் இருக்கிறேனே! அதனால் வேற்றுமை உள்ளதாக "தத்வம்" எப்படி எனக்குத் தோன்றும்.

கயிற்றில் தோன்றும் பாம்பு அஸாரம்; உண்மையானதல்ல. பாம்பாக தோன்றுவதற்குக் காரணமாகவுள்ள "கயிறு" ஸாரம்; உண்மைப்பொருள் என்று உலக வழக்கு. ப்ரஹ்ம தத்வம் இவ்விரண்டையும் விட்டு மிகவும் உண்மையான பொருள். அதனாலேயே அங்கு सरासार तर. இரண்டிற்கும் அப்பாற்பட்டது, தாண்டி எஞ்சி நிற்பது என்று பொருள் கூறப்பட்டது. गमागम विनिर्मुक्तं என்றதால் ஒருவன் எங்கு, தான் இல்லையோ அங்கு செல்லுவான். முன் இருந்த இடத்திற்கே திரும்பி வருவான். இவ்விடத்திலோ பர தத்வம் எங்கும் நிரம்பி இடைவெளி இல்லாமல் இருக்கிறது. ஆகையினால் எவ்விதத்திலும் (அசைய முடியாதது), அசைவற்றது என்பதைக் காட்டவே இந்த பதம் (சொல்) அமைந்திருக்கிறது. விகல்பம் என்ற சொல்லிற்கு கருப்பு, சிவப்பு, பெரியது, சிறியது என்று எதிர்ப் பதங்களால் சொல்

வதற்கு விகல்பிக்கப்படுகிறது என்பார்கள். இவ்விதமும் சொல்ல முடியாத பொருள் நிர்விகல்பம் எனப்படும். ஆகுலம் என்ற சொல்லுக்கு "கலக்கம்" என்று பொருள். ப்ரஹ்ம தத்வம் என்றுமே தெளிவானது.. அதில் கலக்கம் உண்டாக வழியில்லை. இதைக் கூறுவதற்காகவே (அஜ்ஞான மூலமான கலக்கமற்றது) நிராகுலம் என்று கூறப்பட்டது. கலக்கம் ஏற்பட்டால் தெளிய வேண்டும். கலக்கமும் இல்லை, கலக்கம் உண்டாக வழியுமில்லை.

सर्वावयव निर्मुक्तं तदहं त्रिदशार्चितम्।
सम्पूर्णत्वान्न गृह्णामि विभागं त्रिदशादिकम्॥ ६॥

மேலும் सर्वावयव निर्मुक्त எல்லாவிதமான உருப்புகளும் இந்த தத்வத்திற்கு கிடையாது, எல்லாவற்றுக்கும் மேற்பட்டது. கை, கால் கண், காது என்றவைகளுக்கு அவயவம் என்று பெயர். अपाणिपादः என்ற உபநிஷத் வாக்யம் ப்ரஹ்மத்துக்கு அவயவங்கள் இல்லை என்பதை நன்கு விளக்கிக் கூறுகிறது. त्रिदशार्चितं தேவர்களாலும் பூஜிக்கப்பட்டது தத்வம். त्रिदशाः என்ற சொல்லிற்கு மூன்று நிலை உள்ளவர்கள் என்று பொருள். பால்யம், யௌவனம், கௌமாரம் என்ற மூன்று நிலைகள் தான் தேவர்களுக்கு உண்டு. (நமக்கு போல் வார்த்தக்யம் என்ற மூப்புநிலை அவர்களுக்கு ஏற்படாது) ஆகையினால் அவர்கள் என்றுமே நல்ல தேஹ வலிமையுடன் (முறுக்குடன்) இருப்பவர்கள். அவர்களும்கூட தன்னை ஆட்கொண்டு நடத்துகிற ப்ரஹ்ம தத்வத்தை பூஜைசெய்து வேண்டுகிருர்கள். அதனுல் பரமாத்மதத்வமானது त्रिदशार्चितं என்று கூறப்பட்டது. तत् இவ்விதமான உண்மைப்பொருளாகவே अहं நான் இருக்கிறேன், ஆகையினுல் सम्पूर्णत्वात् எங்கும் நிரம்பி வேறு கலக்கம் அற்றதாகவும், விகல்பம் அற்றதாகவுமுள்ள பூர்ணதத்வமாக நான் இருப்பதால் त्रिदशादिकं विभागं தேவர்கள், மனிதர்கள், விலங்குகள் என்றெல்லாமாக உள்ள (வேற்றுமை) பேதத்தை न गृह्णामि நான் எடுத்துக்கொள்ளமாட்டேன் என் புத்தியில் தோன்ருது. எனக்கு, அவயவங்கள் இல்லாததாலும் வேறுபட்ட உண்மை வஸ்துக்கள் இல்லாததாலும், பேதபுத்தி எனக்கு தோன்ருது. தோன்ற வேண்டியதாக உள்ள உலகப் பொருள்கள் உண்மையானவையல்ல. என்றும், தோற்றம் தவிர வேறில்லை என்ற விஷயம் நிச்சயமாக எனக்கு புரிந்துவிட்டதாலும் எவ்விதமான பேத ஜ்ஞானமும் எனக்கு இல்லை, ஏற்படாது.

(தொடரும்)

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

## இரண்டாவது அத்யாயம்

வேதாந்தவித்வான் ப்ரும்மஸ்ரீ N. S. யக்ஞேஸ்வர சர்மா, அல்லூர்.

गगनोपमं तु यत्प्रोक्तं तदेव गगनोपमम् ।
चैतन्यं दोषहीनञ्च सर्वज्ञं पूर्णमेव च ॥ १२ ॥

यत् எந்த பரம்பொருள் गगनोपमं ஆகாயத்துக்கு ஒப்பானது என்று प्रोक्तं கூறப்பட்டதோ तदेवतु அந்தப் பரம்பொருளேதான் गगनोपमं ஆகாயத்துக்கு ஒப்பானது. ஆகாயம் என்று ஒருபொருள் தனிப்பட்டு இருப்பதாகக் கொண்டு அதற்கு ஒப்பானது என்று சொல்லவில்லை. ஆகாயம் என்பதும் பரம்பொருள்தான். ஆகையினால் ஆகாயமான தத்வம் பரமாத்மாவைவிட வேருக இல்லை. உண்மையான பரம்பொருளுக்கு ஆகாயம் ஒப்பானதாக கூறப்பட்டிருக்கிறது. चैतन्यञ्च அறிவுச்சுடரான சைதன்யமும் दोषहीनं எவ்விதமான தோஷமும் இல்லாததாகும். மேலும் सर्वज्ञं எல்லாவற்றையும்அறிந்த ஞானரூபமாகவுள்ள தத்வமாகும் पूर्णमेवच எங்கும் நிரம்பியுள்ள வஸ்துவாகவும் உள்ளது.

இந்த செய்யுள் மூலம் பரதத்வம் ஒன்றுதான். அதற்கு ஒப்பான பொருளோ உயர்ந்த பொருளோ கிடையாது. அந்த தத்வம் ஜ்ஞான ஸ்வரூபமானது. அந்த ஜ்ஞான ஸ்வரூபம் இல்லாத இடமும் இல்லை எங்கும் நிரம்பியுள்ளது என்றும் கூறப்பட்டிருக்கிறது.

पृथिव्यां चरितं नैव मारुतेन च वाहितम् ।
वारिणपिहितं नैव तेजोमध्येव्यवस्थितम् ॥ १३ ॥

எந்த பரப்ரஹ்மம் எங்கும் நிரம்பியிருக்கிறதோ அந்த தத்வம் पृथिव्यां பூமியில் चरितं பூமிக்குள்ள உட்புகுந்து இல்லாவிடில் செயல் नैव காணமுடியாதது. பூமிக்கென்று தனித்த ஒரு கார்யம் இல்லையென்றே கூற வேண்டும். இவ்விதமே मारुते வாயுவில் (காற்றுக்கு) नच वाहितं வீசும் தன்மை இருக்க முடியாது. வாயுவும் அசைவற்றதாகவேதான் இருக்க முடியும் वारिणा தண்ணீரினுல்

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

## இரண்டாவது அத்யாயம்

வேதாந்தவித்வான் ப்ரும்மஸ்ரீ N. S. யக்ஞேஸ்வர சர்மா, அல்லூர்.

गगनोपमं तु यत्प्रोक्तं तदेव गगनोपमम्।
चैतन्यं दोषहीनञ्च सर्वज्ञं पूर्णमेव च ॥ १२ ॥

யத் எந்த பரம்பொருள் गगनोपमं ஆகாயத்துக்கு ஒப்பானது என்று प्रोक्तं கூறப்பட்டதோ तदेवतु அந்தப் பரம்பொருளேதான் गगनोपमं ஆகாயத்துக்கு ஒப்பானது. ஆகாயம் என்று ஒருபொருள் தனிப்பட்டு இருப்பதாகக் கொண்டு அதற்கு ஒப்பானது என்று சொல்லவில்லை. ஆகாயம் என்பதும் பரம்பொருள்தான். ஆகையினால் ஆகாயமான தத்வம் பரமாத்மாவைவிட வேறாக இல்லை. உண்மை யான பரம்பொருளுக்கு ஆகாயும் ஒப்பானதாக கூறப்பட்டிருக்கிறது. चैतन्यञ्च அறிவுச்சுடரான சைதன்யமும் दोषहीनं எவ்விதமான தோஷமும் இல்லாததாகும். மேலும் सर्वज्ञं எல்லாவற்றையும்அறிந்த ஞானரூபமாகவுள்ள தத்வமாகும் पूर्णमेवच எங்கும் நிரம்பியுள்ள வஸ்துவாகவும் உள்ளது.

இந்த செய்யுள் மூலம் பரதத்வம் ஒன்றுதான். அதற்கு ஒப்பான பொருளோ உயர்ந்த பொருளோ கிடையாது. அந்த தத்வம் ஜ்ஞான ஸ்வரூபமானது. அந்த ஜ்ஞான ஸ்வரூபம் இல்லாத இடமும் இல்லை எங்கும் நிரம்பியுள்ளது என்றும் கூறப்பட்டிருக்கிறது.

पृथिव्यां चरितं नैव मारुतेन च वाहितम्।
वारिणपिहितं नैव तेजोमध्ये व्यवस्थितम् ॥ १३ ॥

எந்த பரப்ரஹ்மம் எங்கும் நிரம்பியிருக்கிறதோ அந்த தத்வம் पृथिव्यां பூமியில் चरितं பூமிக்குள்ள உட்புகுந்து இல்லாவிடில் பூமிக்கென்று தனித்த ஒரு கார்யம் செயல் नैव காணமுடியாதது. இவ்விதமே मारुते வாயுவில் இல்லையென்றே கூற வேண்டும். வாயுவும் (காற்றுக்கு) नच वाहितं வீசும் தன்மை இருக்க முடியாது. வாயுவும் अचलं அசைவற்றதாகவேதான் இருக்க முடியும் वारिणा தண்ணீரினால்

पिहितं மூடப்பட்டதாக नैव ஒரு பொருளும் இருக்காது तेजोमध्ये தேஜஸ்ஸுக்கு நடுவில் व्यवस्थितं நிலைபெற்று இருக்கக்கூடிய வஸ்து பரமாத்மாவாகும்.

பரமாத்ம ஸம்பந்தமில்லாவிடில், பூமி அசையாது, ஜலம் ஓடாது, காற்றும் வீசாது, நெருப்பு சுடாது. இவ்விதமாக எல்லா வஸ்துக்களிடையிலும் ஊடுருவிப்பாய்ந்து நின்று கொண்டு, பரமாத்மாவே தான் பூமியில் செடி கொடிகள் தோன்றும்படியும், ஜலத்தில் ஓடும் சக்தியையும் நனைக்கும் தன்மையையும், காற்றில் வீசும் தொழிலையும் உலர வைக்கும் சக்தியையும், நெருப்பில் வெளிச்சம் சூடு இவைகளையும் கொடுத்துக்கொண்டும் இருக்கின்றது. பரம்பொருள் இல்லையேல் ஒரு வஸ்துவும் உலகில் இல்லை.

आकाशं तेन संव्याप्तं नतद्व्याप्तं च केनचित् ।
सवाह्याभ्यन्तरं तिष्ठत्य वच्छिन्नं निरन्तरम् ॥ १४ ॥

तेन அந்த பரமாத்மாவினால்தான் आकाशं ஆகாயமானது संव्याप्तं நன்கு வியாபித்ததாக இருக்கிறது तत् அந்த ஆத்மதத்வம் केनचित् எந்த ஒரு வஸ்துவினாலும் नव्याप्तं சூழப்பட்டு இல்லை निरन्तरं இடைவெளியே இல்லாத பரமாத்மஸ்வரூபம்தான் अवच्छिन्नं சிறிதாக்கப்பட்டதாக (துண்டிக்கப்பட்டதாக) सवाह्याभ्यन्तरं உள்ளும் புறமும் என்று இரண்டோடு கூடியுள்ளது என்று கூறும்படி तिष्ठति இருக்கிறது.

பரமாத்மா, தான் ஒன்றினாலும் வியாபிக்கப்படாமல், தான் எல்லாப் பொருளுக்கும் உட்புகுந்து வியாபித்துக்கொண்டு பெரியது, சிறியது, உட்புறம், வெளிப்புறம் என்று பலவிதமாக வரையறுத்து பேசும்படியாக எல்லாம் இருக்கிறது.

குறிப்பு: இந்த 4, 5 செய்யுட்களினால் கூறப்படும் அர்த்தமானது ஜ்ஞானிகளிடையே பேசப்படும் விஷயமாகியதால் உலகத்தவருக்கு பொருத்தமற்றதாகவேதான் தோன்றும். இதுவேதான் ஜ்ஞானிகளுடைய இயல்பாகும்.

सूक्ष्मत्वात् तदद्दश्यत्वात् निर्गुणत्वाच्च योगिभिः ।
आलम्बनादि यत्प्रोक्तं क्रमादालम्बनं भवेत् ॥ १५ ॥

तत् அந்த பரதத்வமானது सूक्ष्मत्वात् மிகவும் நுட்பமாக இருப்பதாலும் अदृश्यत्वात् காணமுடியாமல் இருப்பதாலும் निर्गुणत्वाच्च

எந்தவித்மான குணஸம்பந்தமில்லாமல் இருப்பதாலும் योगिभिः ஜ்ஞான யோகிகளினுல் आलम्बनादि பிடிப்பு முதலியவைகள் (பரமாத் மாவை 'உபாஸிப்பதற்கு, ப்ரதீகம் ஓங்காரம், விஷ்ணுவிற்கு சாள க்ராமம் முதலியன போன்ற ஸாதனங்கள்) यत् யாதொன்று प्रोक्त கூறப்பட்டிருக்கிறதோ அவைகள் क्रमात् வரிசையாக அஞ்ஞானி களிலிருந்து துடங்கி आलम्बन உபாஸனத்துக்கு ஸாதனமாகும்.

உண்மையாகப் பார்த்தால் உயர்ந்த ஜ்ஞான நிலையில் எவ்வித ஸம்புந்தமும் இல்லாத பரமாத்மாவிற்கு ஸாதனம் என்ற ஒன்று எவ் விதத்திலும் பொருத்தமானதாக கூறமுடியாது. सूक्ष्म என்ற சொல் லுக்கு ஆகாயம் பொருந்தும். எவ்விதமான அசுத்தமும் ஆகாயத்தில் ஒட்டாது. புலனுல் அறிய முடியாதது என்று கூறலாம். இவ்விதம் अदृश्य என்ற சொல்லுக்கு ஜ்ஞான இந்திரியங்களான கண், காது, மூக்கு இவைகளால் அறிய முடியாதது என்று பொருள். निर्गुण எந்தவித்மான குணமும் (ஸத்வரஜஸ்தமஸ், சிவப்பு கருப்பு) இல்லாதது என்று பொருள்.

सतताभ्यासयुक्तस्तु निरालम्बो यदा भवेत् ।
तल्लयाल्लीयतेनान्तर्गुणदोषविवर्जितः ॥ १६ ॥

सतताभ्यासयुक्तस्तु இடைவிடாமல் ஜ்ஞானுப்பியாஸத்தில் ஈடு பட்டவன் यदा எப்பொழுது निरालम्बः உபாஸனத்துக்கான பிடிப்பை விட்டவனுக ஆகின்ருனே (ப்ரதீகம் இல்லாமல் மனது பரப்ரஹ்மத்தில் லயிக்கின்றதோ) அப்போது तल्लयात् பிடிப்பு மறைவதால் गुणदोष-विवर्जितः குணம் தோஷம் அற்றவனுகி अन्तः न लीयते அவன் மறைந்துவிடுவதில்லை. ப்ரஹ்மத்துடன் ஒன்றிவிடுகிருன் போல!

உபாஸனத்தில் பேதமுண்டு: உபாஸிப்பவன், உபாஸனம், உபாஸ்யம் என்று மூன்று வகை வேற்றுமை இருக்கும். இந்த நிலைக்கு த்ரிபுடி உள்ள நிலை என்று பெயர். இதற்கும் மேல் நிலையில் த்ரிபுடியே இருக்காது. அதாவது நான் என்றும் ப்ரஹ்மம் என்றும் உபாஸனம் என்றும் தோன்ருது. இந்த நிலையில் மனம் பரமாத் மாவுடன் ஒன்ருகக் கலந்துவிடுகிறது. இந்த உயர்ந்த நிலையைத்தான் तल्लयात् என்று கூறி குணதோஷமில்லாத அந்தராத்மா மறைவ தில்லை என்று (अन्तः नलीयते என்று) கூறியிருக்கிருர்.

(தொடரும்)

உ

**Phone :** Shop : 22211, 22345
Resi : 22055



# White complex

**திருமணம் மற்றும் அனைத்து வைபவங்களுக்கும்
பட்டு, மில், கைத்தறி மற்றும் அனைத்து
ஜவுளிகளும் நியாயமான விலையில் வாங்க
விஜயம் செய்யுங்கள்**

## ஒயிட் ஹால் (Regd.)

**கரூர்.**

**கூட்டுறவு பட்டு சொசைட்டிகளின் பட்டு சேலைகளை
சொசைட்டி விலைக்கே வாங்கிட சிறந்த இடம்**

## "ஒயிட் காம்ப்ளக்ஸ்"

**கரூர்.**

கும்பகோணம் :
**பேரறிஞர் அண்ணா பட்டு சொசைட்டி**

திருப்புவனம் :
**திருவள்ளுவர் பட்டு சொசைட்டி**

தஞ்சாவூர் :
**தஞ்சாவூர் பட்டு சொசைட்டி**

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

## இரண்டாவது அத்யாயம்

வேதாந்தவித்வான் ப்ரும்மஸ்ரீ N. S. யக்ஞேஸ்வர சர்மா, அல்லூர்.

**विषविश्वस्य रौद्रस्य मोहमूर्छा प्रदस्य च ।**
**एकमेव विनाशायह्यमोघं सहजामृतम् ॥ १७ ॥**

அவதாரிகை : உலகில் விஷத்தை விட கொடிய வஸ்து கிடையாது. அதைப் போக்கடிக்க அமிருதம் உயர்ந்த ஸாதனம். அமிருத பானம் செய்தவனிடம், விஷத்தின் வேகம் ஒன்றும் செய்ய முடியாது. ஆலகால விஷம் மிகவும் பயங்கரமானது. அந்த விஷம், அமிருதமயமான (ஜ்ஞான ஸ்வரூபமான) பரமேசுவரரை ஒன்றும் செய்யவில்லை. அதேபோல் இங்கும் காண்க.

**रौद्रस्य** மிகக் கொடியதும் **मोहमूर्छा प्रदस्य** அறியாமை என்னும் மூர்ச்சையை கொடுப்பதுமாகிய **विषविश्वस्य** உலக ரூபமான விஷத்திற்கு **विनाशाय** அழிவை உண்டுபண்ணுவதற்கு **अमोघं** நிச்சயமாக பலனைக் கொடுக்கக்கூடிய (வீணாகாததான) ஸாதனப்பொருள் யாதென்றால் **सहजामृत** தன்னுடையதான ஜ்ஞானமிருதம் **एकमेव** ஒன்றேதான் வல்லமை கொண்டதாகும்.

உலகத் தோற்றம் என்பது விஷம் போன்றதாகும். விஷத் துக்குத் தன்மை என்னவென்றால், மயக்கத்தைக் கொடுக்கும். உடலை மறக்கச் செய்யும். (சுரணையே இல்லாத நிலைக்கு மூர்ச்சை என்று பெயர்) மோகம் என்பது வேண்டாத வஸ்துவில் ஏற்படக்கூடிய ஆசைக்கு பெயராகும். விஷம் உடம்பில் பாய்ந்தால் உடல் நெருப்பில் இட்டது போல் வறண்டு காய்ந்துவிடும். இந்த விஷத்தைவிட கொடியது வேறு இல்லை. அமிருதம் ஒன்றுதான் இந்த விஷத்தை அடியோடு அழிக்கவல்லதாகும். இங்கு உலகத் தோற்றம் விஷம் போலவும், ஆத்ம ஜ்ஞானத்தை அமிருதமாகவும் அமைத்து, தத்வ ஜ்ஞானம் ஒன்றுதான், அஜ்ஞானம், அஜ்ஞான கார்யமாகிய உலகத் தோற்றம் இவைகளைப் போக்கடிக்கும் திறமை கொண்டது என்கிறார்.

**मायामयं निराकारं साकारं इन्द्रियगोचरम् ।**
**भावाभाव विनिर्मुक्तं अन्तरालं तदुच्यते ॥ १८ ॥**

அவதாரிகை: முன் சுலோகத்தில் கூறிய அமிருதம் என்பது எது போன்றது என்பதை விளக்க வேண்டி கூறுகிருர்:

निराकारं உருவமற்ற வஸ்துவானது भावगम्यं மனதில் தோன்றுகின்ற எண்ணத்திஞல் அறியத்தகுந்ததாகும் साकारं உருவத்துடன் கூடிய பொருள் दृष्टिगोचरं கண்ணுல் பார்க்கும் வஸ்துவாகும் यत् அந்த அமிருதமோ என்ருல் भावाभाव विनिर्मुक्तं भावः என்ருல் தோன்றக்கூடிய (கண்ணுக்குப் புலப்படக்கூடிய) பொருள் अभावः என்ருல் கண்ணுக்குப் புலப்படாததான (இல்லாத) பொருளுக்குப் பெயர். भावाभाव தோன்றும் பொருள், தோன்ருப் பொருள் இவ்விரண்டைக்காட்டிலும் विनिर्मुक्तं வேறுபட்டதாக உள்ளதுதான் தத்வம். உண்மையான இதனை अन्तरालं மேற்கண்ட இரண்டிலும் சேராமல் நடுவில் உள்ளது என்று उच्यते கூறப்படுகின்றது. ஸத் என்ருல் இருக்கும் வஸ்து. இதை भावः என்று கொள்ளலாம். அஸத் என்ருல் இல்லாத வஸ்து. மலடி மகன், முயற் கொம்பு இவைகள் அஸத் வஸ்துக்கள். இவைகளை अभावः இல்லாதவை என்று கொள்ளலாம்.

அமிருதமயமான ஆத்ம வஸ்துவானது இந்த இரண்டிலும் சேராமல் தனித்த வஸ்துவாக இருக்கிறது என்பதையே अन्तरालं என்று சொல்லப்பட்டிருக்கிறது. சாஸ்திரத்தில், ஸத் என்பது அழியாத வஸ்து என்றும், அஸத் என்பது தோன்ருப்பொருள் என்றும் கூறப் பட்டிருக்கிறது. सत् चेत् न बाध्येत, असच्चेत् न प्रतीयेत, बाध्यते प्रतीयते च = अतः तद्विलक्षणं என்று கூறியிருப்பதே இதன் விளக்கமாகும். இவ்விதம் உள்ள முறையைக்கொண்டு பார்த்தால் அமிருதருபமான ஆத்மாவினிடம் अन्तरालं நடுநிலையில் உள்ளது. இரண்டு புறத்திலும் சேராமல் தனியாக நடுநிலையில் உள்ளது என்பது பொருந்தும்.

बाह्यभावं भवेद्विश्वं अन्तः प्रकृतिरुच्यते ।
अन्तरादन्तरं ज्ञेयं नारिकेर फलांबुवत् ॥ १९ ॥

அவதாரிகை: ஜ்ஞேயமான பரப்ரஹ்ம வஸ்துவை எதைப் போல் கொள்ளலாம் என்பதை விளக்கமாகக் கூறுகிருர்.

विश्वं உலகமானது बाह्यभावं வெளி வஸ்துவில் சேர்ந்தது என்று भवेत् கொள்ளலாம் प्रकृतिः காரணப்பொருளான மாயை, அவித்யை, ப்ரகிருதி என்று சொல்லப்படும் வஸ்துவை अन्तः

உள்ளடங்கி இருக்கிற வஸ்து என்று उच्यते கூறப்படுகிறது ज्ञेयं அறிய வேண்டிய பொருளானது नारिकेलफलांबुवत् தேங்காய்க்குள் இருக்கும் தண்ணீரைப் போல (இளநீரைப்போல்) अन्तरादन्तरं உள்ளுக்கும் உள்ளே இருக்கிற வஸ்துவாகக் கொள்ள வேண்டும்.

தேங்காய்க்குமேல் மட்டை நார் இருக்கிறது. அதற்குள் தேங்காயின் பருப்பு இருக்கிறது. அதற்குள் இளநீர் இருக்கிறது. இவ்விதமாக ஜடமான உலகம் தேங்காய் மட்டை போல் வெளியில் இருக்கிறது. காரணப் பொருளான மாயை பருப்புபோல் உட்புகுந்து இருக்கிறது. அதற்கும் உள்ளாக (காரணப் பொருளுக்கும் ஆதாரமாக) ஜ்ஞான ஸ்வரூபமான ஆனந்த மயமான ஜோதிஸ்வரூபம் இளநீரை போல் அடங்கியிருக்கிறது.

भ्रान्तिज्ञानं स्थितं बाह्ये सम्यग्ज्ञानं च मध्यगम् ।
मध्यान्मध्यतरं ज्ञेयं नालिकेरफलांबुवत् ॥ २० ॥

அவதாரிகை: தத்வஜ்ஞானம் மிகவும் துல்யமாக ஸூக்ஷ்மமாக உள்ளது என்று சொல்லுகிறார்.

भ्रान्तिज्ञानं கிளிஞ்சலை வெள்ளியாகவும், கயிற்றை பாம்பாகவும், கானலை நீராகவும் காண்கிற ஜ்ஞானமானது ப்ராந்திக்ஞானம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதமான भ्रान्तिज्ञानं बाह्येस्थितं வெளிப்படையாக இருக்கிறது. வெளியில் காண்பதெல்லாம் தோற்றமே! அவைகளைப் பொருத்து வரக்கூடிய ज्ञानं எல்லாமே மயக்கம்போன்றது தான். அதனால் भ्रान्तिज्ञानं வெளிப்படையாகவுள்ளது. सम्यग्ज्ञानं च நல்லதான நுண்ணறிவானது मध्यगं நடுவில் இருக்கிறது ज्ञेयं நாம் அடைய வேண்டியதாகவுள்ள தத்வஜ்ஞானம் नालिकेरफलांबुवत् தென்னம் பழத்தினுள் உள்ள இளநீரைப் போன்று मध्यान्मध्यतरं நடுவில் உள்ள ஸம்யக்ஞானத்துக்கும் உள்ளடங்கியதாக இருக்கிறது இவ்விதமாக ஜ்ஞானம் வெளிப்படையாக உள்ளது, உள்ளடங்கி இருப்பது, அதனுட்புகுந்து ஸூக்ஷ்மமாக உள்ளது என்று மூன்று வகையாகப் பிரித்துப் பார்க்கும்படி அமைந்திருக்கிறது. இதனை ஆலோசனை செய்து புரிந்துகொள்ள வேண்டும்.

உ

ஸ்ரீ ரஸ்து சுபமஸ்து. ஸ்ரீ வெங்கடேச ப்ரசன்ன:

"த்ரிதளம் த்ரிகுணாகாரம், த்ரிநேத்ரஞ்ச த்ரியாயுஷம்
த்ரிஜன்ம பாபஸம்ஹாரம், ஏகபில்வம் சிவார்ப்பணம்"

"மாகக்ருஷ்ண சதுர்தஸ்யாம், காசீ க்ஷேத்ர நிவாஸநம்
அகோரபாப ஸம்ஹாரம், ஏகபில்வம் சிவார்ப்பணம்"

ஜகத்குரு ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசியுடனும் சேந்த மங்கலம் ஸ்ரீலஸ்ரீ கிருஷ்ணாநந்த ப்ரம்ஹேந்த்ர சரஸ்வதி ஸ்வாமிகள் ஆசியுடனும் 16—2—87-ல் மஹா சிவராத்ரி சமயம் காசி வாஸம் செய்து ஸ்ரீ விஸ்வநாதரை தரிசனம் செய்யும்படியான 16 நாட்கள் கொண்ட யாத்திரை சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் இருந்து சகல வசதி களுடனும் கூடிய "நகரும் மாளிகை" என வழங்கும் C. T. S. ரயில் பெட்டியில் புறப்படுகிறது.

இந்த யாத்திரையில் பம்பாய், இடார்ஸி (நர்மதா), அலஹாபாத், அயோத்யா, ஸ்ரீ காசி, கயா, பூரி, விஜய வாடா முதலிய க்ஷேத்திரங்கள் - தீர்த்த விசேஷங்கள்.

3 காபி, காலை டிபன், இரண்டு வேளை போஜனம் இரவு நேரங்களில் பலகாரம், ரயில் சார்ஜுகள், ஒருபை உள்பட நபர் 1-க்கு ரூபாய் 1,700/-.

ஊர் சுற்றிப் பார்க்கும் செலவுகள் தனி.

மேலும் விவரங்களுக்கு :

ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்,
21, அய்யாப்பிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
டெலிபோன் : 841957

N. B : 31—12—86க்குள் ஒரு மொத்தமாக பணம் செலுத்துவோருக்கு ரூபாய் 200 வீதம் கழிவு உண்டு.

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

(தொடர்ச்சி)

## இரண்டாவது அத்யாயம்

வேதாந்தவித்வான் ப்ரும்மஸ்ரீ N. S. யக்ஞேஸ்வர சர்மா, அல்லூர்.

सहजमजमचिन्त्यं यस्तु पश्येत् स्वरूपं
घटति यदि यथेष्टं लिप्यते नैवदोषैः।
सकृदपि तदभावात्कर्म किंचिन्नकुर्यात्
तदपि नच विबद्धः संयमीवा तपस्वी ॥ ३० ॥

அவதாரிகை : தத்வஜ்ஞானம் அடைந்தவர்களுடைய பெருமை பின்வரும் சுலோகங்களினால் நன்கு விவரித்துக் கூறப்படுகிறது.

यस्तु எந்த ஒருவன் सहजं தன்னுடன் கூடியதும் अजं பிறப்பு அற்றதும் अचिन्त्यं மனதினால் எண்ணிப்பார்க்க முடியாததுமான स्वरूपं தன்னுடைய உண்மையான நிலையை पश्येत् நேரிடக்காண் பானே அவன் यथेष्टं தன்னுடைய இஷ்டப்படி घटते यदि ஏதாவது கார்யத்தை செய்வானாகிலும் दोषैः அந்த கார்யங்களுடைய தீங்கு களோடு नैव लिप्यते சம்பந்தப்படமாட்டான் तदभावात् புண்யபாப சம்பந்தமில்லாததால் किंचित्कर्म ஏதாவது ஒரு கார்யத்தையும் सकृदपि ஒரு தடவைகூட (எப்போதுமே கூட) नैवकुर्यात् செய்யமாட்டான் तदपि இவ்விதம் கார்யம் செய்யாமையால் विबद्धः விசேஷமான பந்தம் அடைந்தவனாக न च ஆகவும் மாட்டான் सः அவன் संयमीवा तपस्वी மனதை அடக்கியவனாகவும், சிறந்த தவம் செய்பவனாகவும் இருக் கலாம். இவ்விடத்தில் ஆத்மஸ்வரூபம் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது.

सहजं என்ற பதத்தினால் எல்லோருடனும் ஒன்றியுள்ளது, தனிப்பட்டதல்ல என்றும் अजं என்ற சொல்லினால் பிறப்பற்றது என்றும் अचिन्त्यं என்பதால் மனதினால் எண்ணிப்பார்க்கவும் முடியாதது என்றும் கூறப்பட்டிருக்கிறது. வெல்லத்திற்கு தித்திப்பும் புளிக்கு புளிப்பும், வேம்பிற்கு கசப்பும் உடன் பிறந்தது. மாற்ற முடியாதது. அதேபோல் எல்லோருடனும் ஒன்றியதுதான் सहजं. எந்த ஒரு பொருள் தோன்றுவதற்கு முன் இல்லாமலிருந்து பிறகு தோன்றுகிறதோ அந்தப் பொருளை பிறந்தது என்று கூறுவது

வழக்கம். இந்த ஆத்ம தத்வமானது न जायते+इति-अजं பிறப்பு இல்லாதது. அதனுல் अजं எனப்படுகிறது. பிறகு अचिन्त्यं (नचिन्तयितुं क्षमं) எண்ணிப்பார்க்கவும் முடியாதது என்பது. " நான் யானையை எண்ணிப்பார்க்கிறேன் " என்று கூறும்போது நான் வேறு யானை வேறு, எண்ணம் வேறு என்று பாகுபாடுகள் வருகின்றன. ஆத்மா விஷயத்தில் இவ்வித பாகுபாடுகள் இல்லை, எல்லாமே ஒன்று தான். அதனுல் எண்ணிப்பார்க்கவும் முடியாதது என்று கூறப்பட்டிருக்கிறது. இவ்விதமான ஆத்மதத்வ ஜ்ஞானம் வந்துவிட்டால் பிறகு எந்தவிதமான கார்யத்தையும் செய்யும் இயல்பு ஏற்படாது. ஒருவேளை செய்ய நேரிட்டு செய்தாலும், நல்ல கார்யத்தால் உண்டாகின்ற புண்யமோ, கெட்ட கார்யததால் உண்டாகின்ற பாபமோ ஜ்ஞானிக்கு ஏற்படாது. உலகில் உள்ள சாதாரண மனிதர்கள் செய்ய வேண்டிய கார்யத்தை செய்யாமல் விட்டுவிட்டால், அவர்களுக்கு பந்தம் (பாப-புண்ய-சம்பந்தம்-பந்தம்) ஏற்படுகிறது. அவர்களை बद्धः பந்தமடைந்தவாகள் विबद्धः நன்கு பந்தப்பட்டவர்கள் என் பார்கள். ஜ்ஞானி விஷயத்தில் இந்த விதமான பந்தம், விடுதலை என்ற பேச்சுக்களுக்கு இடமேயில்லை. संयमी என்ற சொல்லிற்கு மனதை அடக்கியவன் என்பது பொருள். [संयक्+यमः+अस्येति-संयमी, तपः अस्यास्तीति-तपस्वी] இந்த இரண்டு வார்த்தைகளையும் கொண்டு ஜ்ஞானிகளையே இங்கு கூறப்பட்டிருக்கிறது. முக்கிய கருத்து ஜ்ஞானிகளுக்கு பந்தம் கிடையாது என்பதாகும்.

निरामयं निष्प्रतिमं निराकृतिं
निराश्रयं निर्वपुषं निराशिषम् ।
निर्द्वन्द्वनिर्मोहमलुप्तशक्तिकं
तमीशमात्मानमुपैतिशाश्वतम् ॥ २१ ॥

அவதாரிகை : மேற்கூறிய (ஸம்யமி என்றும் தபஸ்வி என்றும் கூறப்பட்ட) ஜ்ஞான யோகியானவர் ஈசுவரனுகிவிடுகிருர். ஈசனும் ஜ்ஞானியும் ஒன்றுதான், வேற்றுமை இல்லை என்பதை தெளிவாக்கு கிருர்.

निरामयं எந்தவிதமான ரோகமுமற்றவரும் निष्प्रतिमं உவமையற்றவரும் निराकृतिं உருவமற்றவரும் निराश्रयं எந்தவிதமான பிடிப்பும் இல்லாதவரும் निर्वपुषं உடல் அற்றவரும் निराशिषं எந்த விதமான வேண்டுகோளும் இல்லாதவரும் निर्द्वन्द्वं லாபம் நஷ்டம், விருப்பு வெறுப்பு, ஸுகம் துக்கம் என்று கூறப்படுகிற இரண்டற்ற

வரும் निर्मोह: மயக்கமற்றவரும் अलुप्तशक्तिक: எப்போதும் குன்றாத சக்தி (ஆற்றல்) யுடையவருமாகிற शाश्वत என்றுமே அழியாமல் உள்ள तमीशमात्मानं ஈசனாகிய ஆத்மதத்வப் பொருளான அவரோடு उपैति ஒன்றாகிவிடுகிறான் तमात्मानमुपैति ஈசன், ஜீவன், ஆத்மா என்ற சொற்களுக்கு எல்லாம் அவன் ஒருவனே தான் பொருள் என்ற நிலையை அடைகிறான். எந்த ஒரே பொருள் உண்மைப் பொருளோ அதுவாக ஆகிவிடுகிறான் என்பது.

आमय: என்ற சொல்லிற்கு வியாதி என்று பொருள். ஆத்மா निरामय: வியாதியற்றவர், உடல் என்று இருந்தால் வியாதியுண்டு நிச்சயம். இந்த ஆத்மா निर्वपु: உடலற்றவர். உடல் உள்ளவர்கள் எல்லோருமே, உருவமுடையவர்களாவார்கள். உடல் இல்லாததால் आत्मा-निराकृति: என்று கூறப்படுகிறார். உருவம் என்று இருந்தால் "இதைப்போன்றது அதைப்போன்றது" என்று கூறமுடியும். உருவமற்றவராதலால் निष्प्रतिम: உபமானமற்றவர். (प्रतिमा உபமானம்) உடல் இல்லாமையால் निराश्रय: பிடிப்பற்றவர். உடல் இருந்தால் உடலுக்கு ஆதாரமாக, தாங்கலாக, பிடிப்பாக சுவர், பலகை, தூண் போன்றவைகள் தேவையான வஸ்துக்களாகும். அல்லது உடல் ஜீவனத்திற்கு வாழ்க்கை நடத்த, பணம், பிறர் உதவி என்ற आश्रय பலம் தேவைப்படும். உடல் இல்லாததால் निराश्रय: எந்தவிதமான பிடிப்பு, பற்றுதல் அற்றவர் ஆத்மா. மேலும் சரீரம் இருந்தால் பிரார்த்தனைகள், வேண்டுகோள்கள் आशिष: ஆசீர்வாதங்கள் தேவையாகும். இங்கே ஆத்மா निर्वपु: அதனால் निराशी: பிரார்த்தனைகள் வேண்டுகோள்கள் இல்லாதவர். மேலும் निर्द्वन्द्व: குளிர்ச்சி—சூடு, லாபம்-நஷ்டம், சுகம்-துக்கம், பிரியம்-த்வேஷம் என்ற இரட்டைப் பொருள்களை "த்வந்த்வம்" என்று கூறுவார்கள்.

சரீரமில்லாவிடில் இரட்டைப் பொருள்களின் தோற்றமே ஏற்படாது. அத்துடன் मोह: மயக்கம், பிரமம், இல்லாததை இருப்பதாகக் காணல் என்று அர்த்தம். இவையாவுமே உடல் சம்பந்தத்தை ஒட்டியே தோற்றமுடையவைகளாகும். உடல் இல்லாவிடில் द्वन्द्व मोह: இவைகளுக்கு சம்பந்தமே கிடையாது. இங்கு ஆத்மா निर्वपु: ஆதலால் निर्द्वन्द्व निर्मोह என்று கூறப்படுகிறார். தவிர சக்தி என்பது ஒருவனுடைய திறமை (செயல்) க்கு பெயர். சக்தி-வேறு சக்தியுடையவன் வேறு என்று கூறுவதைவிட இரண்டும் ஒன்றுதான் என்று சாஸ்த்ர வியவஹாரத்தில் உள்ளது. இங்கு अलुप्तशक्तिक என்று

அழியாத சக்தியுடையவர் என்று கூறியுள்ளது. மனிதனிடம் சக்தி கூடியிருக்கும் சில சமயம் சக்தி குன்றிவிடும் என்பது உலகத்தின் அனுபவம். இந்த வழக்கையொட்டி அழியாத, குன்றாத சக்தியுடையவர் என்று கூறப்பட்டது. शाश्वद्ध्वः-शाश्वतः என்று அழியாப் பொருளான ஆத்மாவுக்கு शाश्वतः என்பது பொருத்தம். இவ்விதம் வியாதி சம்பந்தம் (அக்ஞானம்-வியாதி) அற்றவரும், உவமையற்றவரும் உருவமற்றவரும் வேண்டுகோள் விடுக்காதவரும் உடலற்றவரும் இரண்டிரண்டான பொருளோடு சம்பந்தமில்லாதவரும் மயக்கமில்லாதவரும் என்றுமே குன்றாத-மாறுதலடையாத சக்தி வாய்ந்தவரும் எப்போதுமே அழியாமல் உள்ளவருமான ஈசனாகி ஆத்மாவாகி ஒன்றாகவேயுள்ள ஸ்வரூபத்தை ஜ்ஞானிகள் அடைகிறார்கள். तमीशमात्मानमुपैति மேற்கூறிய ஸ்வரூபமான ஆத்மதத்வத்துடன் सम्यमी ஜ்ஞானநிஷ்டன் ஒன்றிவிடுகிறான் என்ற விவரம் இங்கு கூறப்பட்டது.

(தொடரும்)

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

(தொடர்ச்சி)

## இரண்டாவது அத்யாயம்

यस्य स्वरूपात् सचराचरं जगत्
उत्पद्यते तिष्ठति लीयतेऽपिवा ।
पयोविकारादिव फेन बुद्बुदाः
तमीशमात्मानमुपैति शाश्वतम् ॥ ३४ ॥

(அவதாரிகை) உத்பத்தி-ஸ்திதி-லயம் என்ற மூன்றுவிதமான காரணமாகவும் எந்த பரம்பொருள் ஒன்றே தோன்றுகிறதோ அந்த ஸ்வரூபத்தையே ஜ்ஞானி அடைகிறான் என்று கூறுகிறார்.

सचराचरं அசையும் பொருள் — அசையாப் பொருள் இவ்விரண்டுடன் கூடிய जगत् உலகமானது यस्य எந்த பரம்பொருளின் स्वरूपात् உண்மையான ஸ்வரூபத்திலிருந்து उत्पद्यते உண்டாகிறதோ-தோன்றுகிறதோ तिष्ठति அதிலேயே நிற்கின்றதோ अपिवा மேலும் लीयते மறைகின்றதோ, காரணப் பொருளில் மறைந்துவிடுகின்றதோ. எவ்விதமெனில் पयोविकारात् தண்ணீரிலுடைய பாலினுடைய திரிபிலிருந்து यथा எவ்வாறு फेन-बुद्बुदाः நுரை, குமிழிகள் என்ற பொருள்கள் தோன்றி அஃதினிலேயே மறைகின்றதோ, இவ்விதம் உலகிற்குக் காரணப் பொருளாக உள்ள பரம்பொருள் யாதொன்றுண்டோ அதையே तमीशमात्मानं ஈசுவரனாகவும், ஆத்மாவாகவும் शाश्वतं என்றும் நித்யமாகவுள்ள அந்த ஸ்வரூபத்தையே उपैति ஜ்ஞானியானவன் அடைகிறான்.

यतोवा इमानि भूतानि जायन्ते, येन जातानि जीवन्ति यत्प्रयन्त्यभि संविशन्ति इति । என்று உபநிஷத் கூறுகிறது.

இந்த உபநிஷத்தில் உலகத்துக்குக் காரணப் பொருள் ப்ரஹ்மம் ஒன்றே என்று கூறப்பட்டிருக்கிறது. இந்த உபநிஷத் வாக்யத்தை மனதில் நினைத்துக்கொண்டு அதே அர்த்தம்கொண்ட வேறு வாக்கியங்களைக் கொண்டு காரணப் பொருளைச் சுட்டிக் காட்டி அதனையே யோகி அடைகிறான் என்று புரிய வைக்கிறார்.

இவ்விடத்தில் ஜலத்திலிருந்தே-பாலிலிருந்தே, நுரை குமிழிகள் தோன்றி பாலுடன் சேர்ந்தே நின்றுகொண்டு மறையும்போது பாலினுட் புகுந்துவிடுவது எவ்விதமோ, அவ்விதமே உலகம் அனைத்துக்கும், தோற்றம், நிலைப்பு, மறைவு उत्पत्ति-स्थिति-लय என்ற மூன்று நிலைகளும் பிரஹ்மத்தினிடமிருந்துதான் ஏற்படுகின்றன என்பதை விளக்கிக் கூறினார்.

नासानिरोधो न च दृष्टिरासनं
 बोधोप्यबोधोपि न यत्र भासते।
नाडीप्रचारोपि न यत्र किञ्चित्
 तमीशमात्मानमुपैति शाश्वतम् ॥ ३५ ॥

(அவதாரிகை) தத்வஜ்ஞானி அடையும் ஸ்வருபத்தில், ஸாதனங்கள் தோன்றுவதில்லை. அடைந்த பின் ஸாதனங்களுக்கும் ஸ்வருபத்துக்கும் ஸம்பந்தமேயில்லை என்பதை விளக்குகிறார்.

यत्र எந்த பரம்பொருளில் नासानिरोधः மூக்கில் பிராணனை அடக்குவது என்ற பிராணாயாமம் दृष्टिः आसनं न च பார்வையை திருப்பி உள் நோக்காகச் செலுத்துவது என்ற நியமம், அசையாமல் அமர்ந்து நிமிர்ந்து உட்காருவது என்ற ஆஸன நியமம் न च இல்லையோ बोधः अपि ஜ்ஞானம் என்ற போத நிலையும் अबोधः अपि ஜ்ஞானமின்மை அஜ்ஞானம் என்ற அபோத நிலையும் கூட यत्र எந்த இடத்தில் (பரம்பொருளிடம்) न भासते தோன்றுவது கிடையாதோ नाडीप्रचारोपि இடை, பிங்கலை என்ற இரண்டு நாடிகளில் மூச்சுக் காற்றை நிற்கச் செய்து पूरक कुम्भक என்ற பிராணாயாமத்தின் உட்பிரிவுகளும் கூட यत्र எந்த இடத்தில் किञ्चित् न ஒன்றுமே கிடையாதோ तमीशमात्मानमुपैति शाश्वतम् அவ்விதமாகவுள்ள ஈசுவராத்ம ஸ்வருபத்தில் அழிவற்றவனாகி இணைந்து நிற்கிறான்.

இந்த 35 வது சுலோகத்தில் யோக சாஸ்திரங்களில் கூறுகின்ற ஸாதனங்களும் பிரஹ்ம ஸ்வருபத்தில் இருக்கவில்லை, ஸ்வருபம் மட்டும் சுத்தமாக இருக்கும் என்பதை விளக்கியுள்ளார், யோக சாஸ்திரங்களில் प्राणायामः மூச்சுக் காற்றை அடக்குதல் प्रत्याहारः விஷயங்களினின்று புலன்களைத் திருப்பி உட்புறமாக செலுத்துவது, ध्यान धारणा ஒரே விஷயத்தை தியானம் செய்தல் அதையே அசையாமல் மனதில் நிறுத்துதல் सविकल्प-निर्विकल्प

समाधिः ஸவிகல்ப ஸமாதி - நிர்விகல்ப ஸமாதி என்ற வேற்றுமைகள் இன்னும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. சுருக்கமாக இவைகள் ஸ்வரூபத்தில் உள்ளவைகள் அல்ல. தூரத்தில் நிற்கின்றவைகள்தான் என்று கூறப்பட்டது.

नानात्वमेकत्वमुभत्वमन्यता अणुत्वदीर्घत्वं महत्व शून्यता ।
मानत्वमेयत्व समत्व वर्जितं तमीशमात्मानमुपैति शाश्वतम् ॥३६॥

(அவதாரிகை) பரமாத்ம தத்வத்தின்கண், எண்ணிக்கை அளவு, த்ரிபுடி என்ற பேதங்களும் சம்பந்தப்படுவதில்லை என்று கூறுகிறார்.

नानात्वं அநேகமாயிருக்கும் தன்மை एकत्वं ஒன்றாக இருக்கும் தன்மை उभत्वं இரண்டுமாக இருக்கும் தன்மை अन्यता வேறாக இருக்கும் தன்மை अणुत्वं மிகவும் துல்யமாக ஸூக்ஷ்மமாயிருத்தல் दीर्घत्वं மிகவும் நீளமாக இருத்தல் महत्वं மிகவும் பெரியதாக (வியாபகமாக) இருக்கும் தன்மை शून्यता இந்த விசேஷங்கள் ஒன்றுமேயில்லாமல் சூன்யமாயிருத்தல் என்பது போன்றவைகளும் मानत्वं मेयत्वं समत्वं அளவுடன் கூடியது, அளவுக்கு உட்பட்டு இருத்தல், அளவுக்குள் அகப்படாமல் சமமாக இருத்தல் என்ற (माता मेयं मानं என்ற த்ரிபுடி-மூன்று விதமான பிரிவு உள்ளவை) மூன்றுவிதமான பேச்சுக்களுக்கும் वर्जितं அப்பாற்பட்டதான யாதொரு தத்வமிருக்கிறதோ तमीशमात्मानमुपैति शाश्वतं இவ்விதமான ஆத்ம தத்வத்தையே ஜ்ஞானி அடைகிறான்.

உலகில் உள்ள அளவுகளால் அளக்க முடியாதது தத்வம். அதுவே சாசுவதமானது. அதுவே அழியாத உண்மைப் பொருள். அதையே தத்வ ஜ்ஞானி அடைகிறான் என்று கூறப்பட்டது.

सुसम्यमीवा यदिवा न सम्यमी
सुसंग्रहीवा यदिवा न संग्रही ।
निष्कर्मकोवा यदिवासकर्मकः
तमीशमात्मानमुपैति शाश्वतम् ॥ ३७ ॥

(அவதாரிகை) இதுவரையில் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் கூறப்பட்டது. இந்த சுலோகத்தில் தத்வஜ்ஞானியைப் பற்றி கூறப்படுகிறது.

தத்வஜ்ஞானமடைந்தவன் सुसंयमी वा நன்கு சிறந்து மன அமைதி பெற்றவனே ! यदि वा அல்லது न संयमी மன அமைதி அடையாதவனே ! सुसंग्रही वा நன்கு சேமிப்பு உள்ளவனே ! यदि वा அல்லது न संग्रही சேமிப்புகள் அற்றவனே ! निष्कर्मको वा கர்மாக்களை அனுஷ்டானம் செய்யாதவனே ! यदि वा அல்லது सकर्मकः கர்மாக்களை விடாமல் நன்கு செய்தவனே ! எவராகிலும் தத்வஜ்ஞானம் பெற்றவன் तमीशमात्मानमुपैति शाश्वतं நித்யமான ஈசுவரனும் ஆத்மாவுமாகிற பரம்பொருளை அடைகிருன், இரண்டறக் கலக்கிருன்.

பரம்பொருளை அடைய, பரம்பொருளாகவாகி ஒன்றுபட்டு, ஒன்றியிருக்க, பூர்வகர்மாக்களை நிரம்ப செய்திருத்தலும் செய்யாமல் இருத்தலும், சேமிப்புகளை நிரம்ப சேமித்து வைத்து இருத்தலோ அல்லது சேமிப்புகள் இல்லாமலிருத்தலோ, நன்கு மன அமைதி பெற்றிருத்தல் அல்லது மன அமைதியின்மை இவைகள் காரணமாகவாகாது. உயர்ந்த ஜ்ஞானம் ஏற்படுவது ஒன்று தான் காரணமாகும். ஆகையினுல் தத்வக்ஞானம் பெற்று விட்டால் அவன் பிரஹ்ம ஸ்வரூபத்தை அடைவான்.

# अवधूतगीता

## द्वितीयोऽध्यायः

# அவதூத கீதை

(தொடர்ச்சி)

## இரண்டாவது அத்யாயம்

मनो न बुद्धिर्न शरीरमिन्द्रियं तन्मात्रभूतानि न भूत पञ्चकम् ।
अहंकृतिश्चापि वियत् स्वरूपकं तमीशमात्मानमुपैति शाश्वतम् ॥

அவதாரிகை: தத்வஜ்ஞானி அடையக்கூடிய ஸ்வருப விளக்கம்.

मनः बुद्धिः மனதோ புத்தியோ (எந்த தத்வத்திற்கு) न இல்லையோ शरीरं इन्द्रियं உடலோ புலன்களோ न எந்த உண்மைப் பொருளுக்கில்லையோ तन्मात्रभूतानि தன்மாத்ரைகள் என்று சொல்லப்படுகின்ற பூத ஸூக்ஷ்மங்களோ भूतपञ्चकं மண் ஜலம் நெருப்பு காற்று ஆகாயம் என்ற பஞ்சபூதங்களும் न இல்லையோ अपि अहंकृतिः அஹங்காரம் என்று கூறப்படுகின்ற பொருளும் च இல்லையோ तमीशमात्मानं அப்படியாகவுள்ள தன் ஸ்வருபமான ஆத்மாவை शाश्वतं மிகவும் பழமையான தத்துவத்தை उपैति அடைகிருன் तत् वियत् स्वरूपकं அது ஆகாயம் போன்றது.

பரமாத்மாவிற்கு மனது புத்தி அஹங்காரம் பூத ஸூக்ஷ்மங்கள் பஞ்ச பூதங்கள் என்ற பொருள்களுடன் ஸம்பந்தம் கிடையாது. அஃது ஆகாயம் போன்றது என்றும், அதையே ஜ்ஞானி அடைகிருன் என்று கூறுகிருர். ஆகாயம் ஒன்றோடும் ஒட்டாது. ஆகாயமே இவ்விதமானது. ஆகாயத்துக்கும் காரணமாகிய தத்வஸ்வருபம் எதனுடனும் ஒட்டாதது என்று கூறவும் வேண்டுமோ! என்று கூறுகிருர்.

विधौ निरोधे परमात्मतां गते
न योगिनः चेतसि भेदवर्जिते ।
शौचं नवाऽशौचमलिङ्गभावना
सर्वं विधेयं यदिवा निषिध्यते ॥ ३९ ॥

विधौ சாஸ்த்ரங்களில் செய்ய வேண்டும் என்று கூறுகின்ற விதி முறைகளும் निरोधे செய்யக் கூடாது என்று தடுக்கப்பட்ட நிஷேதங்களும் கூட परमात्मतां பரமாத்ம தத்வமாகவே गते

ஆகிவிட்ட போது भेदवर्जिते எந்தவிதமான பேதங்களும் (வேற்றுமைகளும்) இல்லாததான योगिनः ஜ்ஞான யோகியுடைய चेतसि மனதில் शौचं சுத்தம் என்பதோ अशौचं சுத்தியில்லை என்பதோ न இல்லை, கிடையாது, ஏற்பட இடமில்லை यद्वा அல்லது सर्वं विधेयं செய்ய வேண்டியதாக கூறப்பட்ட எல்லாமே निषिध्यते தடுக்கப்படுகின்றது. अलिङ्ग भावना எந்தவிதமான பாவனையும் இல்லாத நிலையாகும். இதுவே ஜ்ஞானியின் உயர்ந்த நிலை என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இதனையே வேறு ஒரு இடத்தில் —

निस्त्रैगुण्येपथिविचरता कोविधिः कोनिषेधः

என்று கூறப்படுகிறது. எந்தவிதமான குண ஸம்பந்தமும் இல்லை என்ற வழியில் இருக்கின்ற ஜ்ஞானிக்கு விதி நிஷேதங்கள் ஏது, என்று ஆக்ஷேபிக்கிறது. இந்த சுலோகமும் அதனையே கூறுகிறது.

मनोवचोयत्र नशक्तमीरितुं नूनं कथं तत्र गुरूपदेशता।
इमां कथामुक्तवतोगुरोस्तद्युक्तस्य तत्वं हि समं प्रकाशते ॥ ५० ॥

அவதாரிகை: ஆத்மஜ்ஞான உபாயம் என்று பெயருள்ள இரண்டாம் அத்யாயம் முடிகிறது.

यत्र எந்த தத்வ விஷயத்தை பொருத்து मनः वचः மனஸ், வாக்கு என்ற புலன்கள் ईरितुं எடுத்து விரிவாகக் கூறுவதற்கு नशक्तं திறமையற்றதாக இருக்கின்றனவோ तत्र அந்த தத்வ விளக்கம் பற்றி गुरूपदेशता குருவின் உபதேசம் என்ற நிலை नूनं நிச்சயமாக कथं எவ்விதம் பொருத்தமாகும் इमां कथां இந்த ஒரு விஷயத்தை उक्तवतः எடுத்து உரைத்து புரியும்படி செய்தவரான युक्तस्य யோகியாகவுள்ள गुरोः குருவிற்கும் तत् तत्वं அந்த உண்மைப் பொருளானது समं प्रकाशते हि ஒரே நிலையாக எவ்வித வேற்றுமையும் இல்லை என்று நிர்விசேஷமாக அல்லவா விளங்குகிறது என்று இரண்டாம் அத்யாயத்தை முடிக்கிறார்.

குண ஸம்பந்தம் வரும்போது ஏற்றம்-தாழ்வு, பெரியது-சின்னது, வெளிச்சம்-இருட்டு, புலனுக்கு விளங்கும் விளங்காது, கூறமுடியும் கூறமுடியாது என்றெல்லாம் வேற்றுமைகள் தோன்றும் ப்ரஹ்மமோ குண ஸம்பந்தமற்றது. அதனால்தான் समं निर्विशेष என்று கூறி, எவ்விதமாகவும் உபதேசிக்க முடியாதது என்று கூறுகிறார். இவ்விதம் இரண்டாம் அத்யாயம் முடிவுற்றது.

# अवधूतगीता

## तृतीयोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

(தொடர்ச்சி)

## மூன்றுவது அத்யாயம்

**अवधूत उवाच — அவதூதர் கூறுகிறுர் :**

गुण विगुण विभागो वर्तते नैव किञ्चित्
रति विरति विहीनं निर्मलं निष्प्रपञ्चम्।
गुण विगुण विहीनं व्यापकं विश्वरूपम्
कथमहमिह वन्दे व्योमरूपं शिवं वै ॥ १ ॥

அவதாரிகை : பரப்ரஹ்மதத்வமாக ஜ்ஞானி ஆகிவிடுகிறுன். பிறகு அவனைத்தவிர்த்து உண்மையான பொருள் எதுவும் இல்லை. இவ்விதம் இருக்கும்போது எவ்விதம் நமஸ்காரம் செய்யமுடியும். நமஸ்காரம் என்றுல் இருவர் வேண்டும். தத்வம் ஒன்றேதான். ஜ்ஞானியும் பிரஹ்மமே—வேறில்லை. எவ்விதம் நமஸ்கரித்தல் பொருந்தும்.

गुण विगुण विभागः ஸகுணம் நிர்குணம் என்ற பிரிவும் किंचित् ஒன்றுமே नैव वर्तते இல்லை रति विरति विहीनं ஸந்தோஷம் துக்கம் ஆனந்தம் அஃதின்மை என்ற பிரிவு அற்றதும் निर्मलं எந்தவிதமான அழுக்கு அற்றதும் निष्प्रपञ्चं உலகத்தின் சம்பந்தம் இல்லாததும் गुण विगुण विहीनं நல்லகுணம் கெட்டகுணம் என்ற (சொல்லின்) சம்பந்தமுமற்றதும் व्यापकं எங்கும் ஊடுருவிப் பாய்ந்து நிற்பதும் विश्वरूपं விச்வருபம் என்ற உலக ருபமாக வுள்ளதும் व्योमरूपं ஆகாய ருபம்போல் பரந்து நிற்பதுமான शिवं वै மங்கள ருபமான (சிவதத்வ ருபமாகவுள்ள) தத்வத்தை कथमहं எப்படி நான் इह वन्दे நமஸ்காரம் செய்வேன். என்னுடைய தோள் மேல் நான் எப்படி நடக்க முடியாதோ, அவ்விதம் சிவ ஸ்வருபமாக இருக்கிற நான் எப்படி சிவனை வணங்குவேன்.

என்னைவிட சிவதத்வம் என்ற வஸ்து, உண்மைப்பொருள் வேருக, இருந்தால் நான் வணங்குவேன். வணக்கம், வணங்கு பவன் வணங்கப்படுபவன் என்ற வேற்றுமை இருந்தால் நமஸ் காரம் என்பது பொருந்தும். இவ்விதமான த்ரிபுடி என்ற சம்பந்தம் இல்லாதபடியால் நான் வணங்குகிறேன் என்று சொல்வது பொருந்தாது.

श्वेतादि वर्ण रहितो नियतं शिवश्च
कार्यं हि कारणमिदं हि परं शिवश्च।
एवं विकल्प रहितोऽहमहं शिवश्च
स्वात्मानमात्मनि सुमित्र! कथं नमामि ॥ २ ॥

शिवश्च பரசிவதத்வமானது श्वेतादि वर्णरहितः வெள்ளை முதலிய கலர் சம்பந்தமில்லாதது என்பது नियतं நிச்சயமானது, என்றும் மாறவே மாருது इदं हि கண்ணுக்குப் புலனுகின்ற कार्यंहि கார்யப்பொருளானவைகளும் कारणं हि காரணப் பொருள்களும் கூட परं மிகவும் உயர்ந்த உத்தமமான शिवश्च சிவதத்வமேதான் सुमित्र! சிறந்த நண்பனே! आत्मनि தன் ஸ்வரூபமாகிய உண்மைப் பொருளில் உள்ளடங்கியிருக்கிற आत्मानं சிவதத்வமான பரம் பொருளை कथं எவ்வாறு नमामि வணங்குவேன், முடியுமா? இந்த சுலோகத்தில் 'शिवः' என்ற சப்தத்தினுல் நிர்குணமான ஸச்சிதானந்த ரூபமான, தேச கால வஸ்து பரிச்சேதம் இல்லாத பரம்பொருளையே கூறுவதாகும்.

ஏனெனில் பரமேச்வரன் என்ற ஸகுணமூர்த்திக்கு வர்ண சம்பந்தம் குணசம்பந்தம் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற தொழில் சம்பந்தம் கோபதாப சம்பந்தம் இவைகள் இருப்பதாக புராணகாவ்யங்கள் மூலம் தெரிகிறது. இந்த சுலோகத்தில் மேற்படி சம்பந்தங்கள் ஒன்றுமே இல்லாத சிவதத்வம் கூறப் படுகிறது. ஆகையினுல் இங்கு ப்ரஹ்மதத்வமே சிவ சப்தத்தினுல் சொல்லப்பட்டிருக்கிறது.

பத்மாவையும் ராமநாதனேயும் 'கண்டி'யிலேயே விடுதி வரைக் கொண்டு விட்டுவிட்டனர் அந்த நல்லவர்கள் ! நாங்களும் தட்டுத்தடுமாறிக் கடைவீதியைத் தாண்டிக் கோவிலின் மிக அருகிலிருந்த அவ்விடுதியை அடைந்தோம். அதிகமான குளிரினுல் பத்மா அழத் தொடங்கிவிட்டாள். உடம்பு "ஜில்"லிட்டுவிடவே நாங்களும் பயந்து ஆளுக்கொரு பக்கமாகத் தேய்த்துவிட்டுக் குழந்தை உடலில் சூடேற்றினேம். சூடாகப் பால் கொடுத்துக் குடிக்கச் செய்தோம். குழந்தை சுமாராகத் தேறி அழுகையை நிறுத்தினுள். இந்த அமர்க்களத்தில் சுமார் 3 மணி நேரம் போய் விடவே கோவிலுக்குச் செல்ல நேரம் ஆகிவிட்டது. சுமார் 7 மணிக்குக் கோவிலே அடைத்துவிடுவதாகச் சொன்னுர்கள். அதன் பிறகு விசேஷ தரிசனத்துக்கு முன்கூட்டியே பணம் கட்டி ரசீது பெற்றிருக்கவேண்டும். என்னசெய்வதென்று தெரியாத நிலேயில் அவசர அவசரமாக கோவிலுக்குச் சென்ருேம். நல்ல வேளே கேதாரநாதர், எங்களே ஏமாற்றவில்லே. கோவில் திறந்து தானிருந்தது.

பிறவிப் பிணிதீர்க்கும் அப்பழமையான கோவில் கோபுரத்தைத் தரிசிக்கிருேம். சிவபெருமான் உறையும் இடங்களில் பூலோகத்தில் திருக்கேதாரத்துக்கு நிகர் வேருெரு இடமுமில்லே என வியாசபகவானுல் புகழப்பெற்ற இக்கோவில் கோபுரம் வெள்ளிப்பனிமலேத் தொடர்கள் பின்னணியாக விளங்க மிகப் புராதனமாகக் காட்சியளிக்கிறது. இந்த விமான கோபுரம் கருங்கல்லால் ஆனது. சிற்ப வேலேப்பாடு ஏதுமில்லே. கம்பீரத்துக்கும் குறைவில்லே. இதை முதன் முதலில் பாண்டவர்கள் கட்டினதாகவும் பிறகு பலபேர்கள் மாற்றியமைத்துப் புனருத்தாரணம் செய்ததாகவும் கருதப்படுகிறது.

உற்ருர், உறவினர்கள், நண்பர்கள், குரு முதலியவர்களேக் கொன்று குவித்துப் பாரத யுத்தத்தில் வெற்றிவாகை சூடிய பாண்டவர்கள் தங்கள் பாபச்சுமையைப் போக்கிக்கொள்ளத் திருக்கேதாரம் வந்து தவமிருந்து ஆன்மீக வாழ்வு நடத்தினுர்கள். சிவபெருமான் அவர்களுக்குக் காட்சி இங்கே தந்ததாகவும், இங்குள்ள "சுவர்க்காரோகிணி" சிகரத்தின் வழியாகத்தான் அவர்கள் தங்கள் சுவர்க்க யாத்திரையைத் தொடங்கினதாகவும் நம்பப்படுகிறது. விமான கோபுரத்தின் பின்னணியாகத் தோன்றும் இரு மலேகள் சிவலிங்கத்தின் ஆவுடையார் என்றும், கோவிலே லிங்கமாகவும் பாவித்து, சிவசக்தி ஐக்யமான இடமாக இது கருதப்பட்டு வருகிறது. மலேயிலிருந்து ஓடிவரும் அருவிகளேப் பால் கங்கா, தேன் கங்கா, ஸ்வர்ண கங்கா, சரஸ்வதி என்று அழைக்கிருர்கள்.



(தொடரும்)

# अवधूतगीता

## तृतीयोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்ருவது அத்யாயம்

(தொடர்ச்சி)

निर्मूलमूलरहितोहि सदोदितोहं
निर्धूमधूमरहितोहि सदोदितोहम् ।
निर्दीपदीपरहितोहि सदोदितोहं
ज्ञानामृतं समरसं गगनोपमोहम् ॥ ३ ॥

அவதாரிகை: இந்த அத்யாயம் முடிய ப்ரஹ்மஜ்ஞானத்தை அடைந்தவன், தன்னுடைய நிலையை வர்ணிக்கிறதாக இருக்கிறது. எல்லா சுலோகத்தின் முடிவும் ஒரே மாதிரி அமைகிறது. ஆகாயம் போன்ற ஒரே ரூபமான அமிருத ரஸமான ஜ்ஞான ரூபமாகவுள்ள நான் எதை எப்படிச் சொல்லுவேன் என்பதுதான் கடைசி வரையில் உள்ள சுலோகங்களின் கடைசி வார்த்தை. அநேகமாக எல்லா சுலோகங்களுக்கும் இதுவே முன்னுரை.

अहं நான் निर्मूलमूलरहितः எவ்வித காரணமும் இல்லாதவன் सदोदितः हि எப்போதும் (மறையாமல்) பிரகாசித்துக்கொண்டே இருப்பவனல்லவா! अहं நான் सदोदितः हि எப்போதுமே பிரகாசித்துக்கொண்டிருப்பவன் निर्धूमधूमरहितः எவ்விதமான புகையினுலும் நான் மறைவற்றவன் धूमः என்ருல் புகை என்பதுடன் மறைக்கும் சக்தி வாய்ந்த அஜ்ஞானம் என்றும் பொருள். सदोदितोहं எப்போதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற நான் निर्दीपदीपरहितोहि விளக்கு இல்லையே! விளக்கு இருக்கிறது! என்ற சொல்லுக்கு பொருளாகாதவனன்ருே! समरसं எங்கும் பரவி ஒரே மாதிரியுள்ளதும் गगनोपमः ஆகாயம் போன்றது

மான ज्ञानामृतं ஜ்ஞான ஸ்வரூபமாகவுள்ள அமிர்தமான ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே अहं நான் இருக்கிறேன்.

निष्कामकाममिह नाम कथं वदामि
निःसङ्गसङ्गमिह नाम कथं वदामि।
निःसारसाररहितं च कथं वदामि
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ ४ ॥

इह இந்த நிலையில் உள்ள நான் निष्कामकामं எவ்விதப் பற்றுமில்லாதவன் பற்றுடையவன் என்றோ कथं नाम எவ்விதம் वदामि சொல்லுவேன் इह இங்கே निःसङ्गसङ्गं ஒன்றுடனும் ஒட்டாதது ஒட்டியிருப்பது என்று कथं எவ்விதம் वदामिनाम கூறுவேன் निःसारसाररहितं च எவ்விதமான திடப்பொருள் சம்பந்தமும் இல்லாதது என்றுதான் कथं எவ்விதம் वदामि கூறுவேன். பின்னே வென்றால் ज्ञानामृतं समरसं गगनोपमोऽहं ஆகாயம் போல் எங்கும் பரவியும் ஒரே மாதிரியாகவுமுள்ள அழிவற்ற ஜ்ஞான ஸ்வரூபமான பிரஹ்மதத்வமாகவே திகழ்கின்றேன்.

अद्वैतरूपमखिलं हि कथं वदामि
द्वैतस्वरूपमखिलं हि कथं वदामि।
नित्यंत्वनित्यमखिलं हि कथं वदामि
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ ५ ॥

अखिलं हि உலகில் எல்லாமே अद्वैतरूपं இரண்டாவது இல்லாத ஒரே வஸ்துவான பரமாத்ம ரூபமாகவே இருப்பதால் कथं वदामि எவ்விதம் சொல்லுவேன் (பேசுதல் என்றாலே இரண்டாகிவிடுமே) अखिलं द्वैतस्वरूपं உலகில் தோன்றுகின்ற எல்லாவிதமான த்வைத வஸ்துக்களை (உண்மையில் இல்லாமையால்) कथं हि वदामि எவ்விதம் கூறுவேன் नित्यं तु अनित्यं நித்யமானவை என்றோ அநித்யமானவை என்றோ अखिलं हि எல்லாவற்றையும் कथं எப்படி वदामि கூறுவேன். எங்கும் பரந்து ஊடுருவிப் பாய்ந்து திகழ்கின்ற அறிவு ரூபமான ப்ரஹ்மமாகவே நிற்கின்றேன்.

स्थूलं हि नो नहि कृशं न गतागतं हि
अद्यन्तमध्यरहितं न परापरं हि।
सत्यं वदामि खलु वै परमार्थ तत्वं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ६॥

स्थूलं हि नो பருமனுகவுள்ளதும் அல்ல कृशं हि न மெலிந்து உள்ளதுமல்ல गतागतं हि न செல்லுகின்றதுமல்ல, வருகிறதுமல்ல अद्यन्तमध्यरहितं न ஆரம்பம், நடுவு, முடிவு என்றதைச் சேர்ந்தது மல்ல. இவ்விதம் எந்தவிதமான சம்பந்தமுமற்ற परापरं हि பரப்ரஹ்மத்தை परमार्थं तत्वं உண்மைப்பொருளான सत्यं என்றுமே நிலேத்து நிற்கின்றதாக खलु அல்லவோ! वदामि சொல்லுகிறேன். நான் எங்கும் பரவி நின்று ஒரே ஸாரமாக வுள்ள அழிவற்ற ஞான தத்வமாகவே அழிவற்றுத் திகழ் கின்றேன்.

संविद्धि सर्वकरणानि नभो निभानि
संविद्धि सर्वं विषयांश्च नभो निभांश्च।
संविद्धिचैकममलं नहि बन्धमुक्तं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ७॥

सर्वं करणानि எல்லா உறுப்புக்களேயும் (கண் காது நாக்கு மூக்கு த்வக் என்ற 5 ஞானேந்திரியங்கள், வாக் பாணி பாத பாயு உபஸ்தம் என்ற 5 கர்மேந்திரியங்கள் ஆக 10 உறுப்புகளேயும்) नभोनिभानि ஆகாயத்துக்குச் சமமாக (ஒன்றுடனும் உண்மையில் பற்றற்றதாகவே) संविद्धि நன்ருக எண்ணுவாயாக सर्वं विषयांश्च எல்லா விஷயங்களேயும் (சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம் என்ற 5 விஷயங்களேயும் கூட) नभोनिभांश्च ஆகாயத்தைப் போலவே संविद्धि நன்ருக எண்ணிப்பார் एकममलं எந்தவிதமான குற்றத் துடனும் சேராததாகவும் ஒன்ருகவும் न च बन्धमुक्तं பந்தமடை யாததும் அதனுல் முக்தியும் அடையாததான ப்ரஹ்மதத்வம் ஒன்றையே संविद्धि நன்ருகத் தெரிந்துகொள் गगनोपमः ஆகாயத்தைப் போலுள்ள समरसं ஒரே ஆனந்தரூபமான ज्ञानामृतं அறிவுருபமான அமிர்த ஸ்வரூபமாகவே अहं நான் இருக் கிறேன்.

(தொடரும்)

# अवधूतगीता

## तृतीयोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்ருவது அத்தியாயம்

(தொடர்ச்சி)

दुर्बोधबोधगहनो न भवामि तात
  दुर्लक्ष्यलक्ष्यगहनो न भवामि तात।
आसन्नरूपगहनो न भवामि तात
  ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ८॥

दुर्बोध - बोध - गहनः துர்போதம் என்ருல் அறியமுடியாதது என்று பொருள். போத என்ருல் அறியமுடிவது என்று அர்த்தம். இந்த இரண்டுவிதமான சிரமமும் तात குழந்தாய் न भवामि இல்லாதவனுக இருக்கிறேன். ஒரே (உண்மையான) பொருளில் இரண்டுவிதமான பாகுபாடுகள் ஏற்பட முடியாது என்பதையே இந்த செய்யுள் மூலம் விளக்கிக் கூறப்படுகிறது. लक्ष्यं காண முடிவது दुर्लक्ष्यं காணமுடியாதது என்ற गहनः சிரமமானது तात குழந்தாய் न भवामि இல்லாதவனுக இருக்கிறேன் आसन्नरूपगहनः மிகவும் சமீபத்தில் உள்ளது என்று கூறும் சிரமமும் न भवामि இல்லாதவனுக இருக்கிறேன் ज्ञानामृतंसमरसं गगनोपमोऽहम् இவ் விதம் அமிர்தரஸமான ஜ்ஞானமயமாக இருக்கிறேன்.

निष्कर्मं कर्मदहनोज्वलनो भवामि
  निर्दुःख दुःखदहनोज्वलनो भवामि।
निर्देह देह दहनोज्वलनो भवामि
  ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ९॥

निष्कर्म-कर्म-दहनः நித்ய காம்ய பிராரப்தம் என்ற கர்மாக்கள் உண்டு, ஷை கர்மாக்கள் இல்லை என்ற இரண்டையும் எரித்து சம்பலாக்குகின்ற ज्वलनः भवामि கொழுந்துவிட்டு எரிகின்ற

அக்னியாக இருக்கின்றேன் निर्दुःखदुःख दहनः துக்கமுண்டு துக்கமில்லை என்ற வேற்றுமைகளையும் எரிக்கின்ற ज्वलनः भवामि ஜ்வலிக்கின்ற நெருப்பாக இருக்கின்றேன் निर्देह-देह-दहनः உடல் இல்லை உடல் உண்டு என்ற நிலைகளையும் எரித்துவிடுகின்ற ज्वलनः भवामि கொழுந்துத் தீயாக இருக்கின்றேன் अहं நான் गगनोपमः ஆகாயத்துக்கு ஒப்பானவன் समरसं பிரம்மானந்த ரூபமான ஒரே ரஸமாகவுள்ள ज्ञानामृतं என்றும் மறையாத ஜ்ஞான ஸ்வரூபி தான்.

निष्पाप पापदहनोहि हुताशनोऽहं
निर्धर्म धर्मदहनोहि हुताशनोऽहम्।
निर्बन्ध बन्धदहनोहि हुताशनोऽहं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १० ॥

अहं நான் निष्पाप - पाप - दहनः பாவமின்மை பாவமுண்டு என்ற நிலையையும் பொசுக்கக்கூடிய हुताशनः हि நெருப்பாகவல்லவோ இருக்கிறேன் निर्धर्म - धर्म - दहनः புண்யமில்லை புண்யமுண்டு என்ற இரு நிலையையும் பொசுக்குகின்ற हुताशनः हि अहं கடும் தீயாகவல்லவோ நான் இருக்கிறேன் निर्बन्ध - बन्ध - दहनः பந்தமுண்டு பந்தமில்லை என்ற இரண்டையும் எரிக்கின்ற हुताशनः हि अहं காட்டுத் தீயாகவல்லவோ நான் இருக்கிறேன் अहं நான் ज्ञानामृतं ஞானமயமான அமிருதமாகவும் समरसं ஒரே ஆனந்த ரூபமாகவும் உள்ள गगनोपमः ஆகாயத்துக்கு துல்யமான பிரம்ம ஸ்வரூபமாகவே இருக்கிறேன்.

निर्भाव भावसहितो न भवामि वत्स
निर्योग योगरहितो न भवामि वत्स।
निश्चित्त चित्तरहितो न भवामि वत्स
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ ११ ॥

वत्स ஏ குழந்தாய் भावः என்றால் இருக்கை निर्भावः என்றால் இருத்தலின்மை என்ற இரு நிலையும் रहितः இல்லாதவனாக न भवामि நான் இருக்கவில்லை वत्स குழந்தாய் योगः மனதை அடக்குதல் யோகம் निर्योगः மனதின் அடக்கமின்மை என்ற இரண்டு நிலையும் रहितः இல்லாதவனாக न भवामि நான் இருக்க

வில்லை निश्चित्तः என்றால் மனது இல்லாமை चित्तं மனதுள்ள நிலை என்ற இரண்டு நிலையும் रहितः இல்லாதவனாக न भवामि நான் இருக்கவில்லை. மனதையே அழித்தவன் என்றும் न भवामि நான் இருக்கவில்லை वत्स ஏ குழந்தாய் समरसं ஒரே சுவையாகவுள்ள (ஆனந்தமயமாகவுள்ள) गगनोपमः ஆகாயம் போன்று ज्ञानामृतं என்றும் அழிவற்ற ஜ்ஞான ஸ்வரூபமாகவே अहं நான் விளங்கிக் கொண்டிருக்கிறேன்.

निर्भावः भावरहितः योगरहितः निर्योगः चित्तरहितः निश्चित्तः என்ற பதங்கள் ஒன்றுக்கொன்று ஒரே அர்த்தம் உள்ளவை போல் அமைந்திருக்கின்றன. இவ்விதம் கூறுவதற்கு பொருள்கொள்ள வேண்டுமே என்றால், கல்லுக்கு-மனது இல்லை-யோகம் இல்லை என்றவிடத்தில் निर् என்ற உபஸர்க்கம் சேரும். (பைத்தியத்துக்கு) பைத்தியம் பிடித்தவனுக்கு மனது இல்லை-யோகம் இல்லை என்று கூறவேண்டிய இடத்தில் रहितः என்ற பதம் பொருந்தும்.

निर्मोहमोहपदवीति नमे विकल्पः
निःशोकशोकपदवीति नमे विकल्पः।
निर्लोभलोभपदवीति नमे विकल्पः
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १२ ॥

உலகில் காண்பதுபோல் शोकपदवी துக்கம் உள்ள நிலை निःशोकपदवी துக்கமே இல்லாத நிலை என்ற विकल्पः ஒன்றுக்கு ஒன்று மாறாகவுள்ள எண்ணம் नमे எனக்கு இல்லை मोहः என்றால் மயக்கம் निर्मोहः என்றால் மயக்கமின்மை என்ற पदवी நிலைகளும் नमे எனக்கு இல்லை लोभः பேராசை निर्लोभः பேராசையின்மை என்ற विकल्पपदवी மாறாகவுள்ள எண்ணமும் नमे எனக்கு கிடையாது. அழிவற்ற ஆனந்தரூபமாகவுள்ள எங்கும் பரவிநிற்கின்ற ஒரே ஸ்வரூபமாக இருக்கின்ற ஸச்சிதானந்த ரூபமாகவே இருக்கின்றேன்.

संसारसन्तति लता नचमे कदाचित्
सन्तोष सन्तति सुखे नचमे कदाचित्।
अज्ञान बन्धनमिदं नचमे कदाचित्
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १३ ॥

**कदाचित्** ஒருபொழுதும் கூட **मे** எனக்கு **संसार संतति लता** பிறப்பு - இறப்பு என்ற ஸம்ஸாரமாகின்ற கொடியானது **नच** எனக்கு கிடையாது **मे** எனக்கு **कदाचित्** எப்போதுமே **सन्तोष सन्तति सुखे** ஸந்தோஷ வரிசை, ஸுகம் என்ற இரண்டும் கூட **नच** இருக்கவில்லை, கிடையாது. **इदं** கண்கூடாக தோன்றுகின்ற **अज्ञान बन्धनं च** அறிவின்மையால் ஏற்படுகின்ற கட்டுப்பாடு என்ற பந்தநிலை கூட **नमे** எனக்கு கிடையாது **ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्** ஜ்ஞானம்ருதம் என்ற எங்கும் பரவியுள்ள ஆகாயம் போன்ற ஆனந்த ஸ்வருபமாக திகழ்கின்றேன்.

**संसार संतति रजो नच मेविकारः**
**सन्ताप संतति तमो नच मेविकारः ।**
**सत्वं स्वधर्मजनकं नच मेविकारः**
**ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १४ ॥**

**संसार संतति रजः** ஸம்ஸார வரிசை என்ற ரஜோ குணத்தின் **विकारः** திரிபானது **मे न** எனக்கு இல்லை **सन्ताप संतति तमः** ஸந்தாபம் என்ற தமோ குணத்தின் **विकारः** மாறுபாடானது **मे न** எனக்கு இல்லை **स्वधर्मं जनकं** நித்ய-நைமித்திக கர்மாக்களை உண்டு பண்ணுகின்ற **सत्वं विकारः** ஸத்வகுணத்தின் திரிபும் **मे न** எனக்கு இல்லை. இவ்விதம் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் விகார்மாகின்ற ஸுகம், துக்கம், சோம்பல் - அறிவின்மை முதலிய குணசம்பந்தமும் எனக்கு கிடையாது. **ज्ञानामृतं** அழிவற்ற ஜ்ஞான் ஸ்வருபமாகவுள்ளதும் **समरसं** ஒரே ரஸமானதும் (**रस** என்ற பதத்திற்கு ஆனந்தம் என்று பொருள்) **गगनोपमः** ஆகாயம் போன்று எங்கும் பரவியுள்ளதுமான ஸ்வருபானந்த ரூபமாகவே **अहमस्मि** நான் இருக்கிறேன்.

(தொடரும்)

---

# अवधूतगीता

## तृतीयोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்றுவது அத்தியாயம்

(தொடர்ச்சி).

सन्तापदुःखजनको न विधिः कदाचित्
सन्तापयोगजनितं न मनः कदाचित्।
यस्मादहंकृतिरियं न च मे कदाचित्
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १५ ॥

**सन्तापदुःखजनकः** பலவிதமான தாபங்களையும் துக்கத்தையும் கொடுக்கக்கூடியதான **विधिः** விதிமுறைகள் (இதைச்செய் இதைச் செய்யாதே என்று கூறக்கூடிய விதிகள்) **मे** எனக்கு **कदाचित्** ஒரு போதும் **न** கிடையாது. ஜ்ஞானிக்கு விதி-நிஷேதங்கள் இல்லை என்பதை வேறொரு இடத்தில்,

**निस्त्रैगुण्ये पथि विचरतां को विधिः को निषेधः**

என்று சொல்லியிருக்கிறது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குண ஸம்பந்தமுமில்லாத ஆத்ம நிஷ்டையில் இருப்பவனுக்கு வேதங்களில் கூறப்பட்டிருக்கிற விதி-நிஷேதங்கள் ஏது கிடையவே கிடையாது. அவன் எங்கும் பரந்துள்ள ஒரே ஆத்மாவாக ஆகி விட்டான் என்பதால் விதி நிஷேதம் இல்லை. **सन्तापयोगजनितं** வஸ்துக்களுடன் சேருவதால் ஏற்படக்கூடிய துக்கத்தினுல் தாபம் அடைகின்ற **मनः** மனது என்ற அந்தக்கரணமும் **कदाचित्** ஒரு போதும் **न** எனக்குக் கிடையாது **यस्मात्** யாது காரணத்தினுல் **इयं** கண்கூடாகத் தெரிகின்ற **अहंकृतिः** அஹங்கார - மமகாரங் களும் **मे** எனக்கு **कदाचित्** ஒருபோதும் **न** கிடையாதோ, அதனுல் விதிநிஷேதமோ-தாபத்ரயங்களோ துக்கங்களோ எனக்கு எப்போதுமே ஏற்படாது. அப்படிப்பட்ட **ज्ञानामृतं** அழிவற்ற அறிவு ஸ்வரூபமாகவுள்ளதும் (ஜ்ஞானம் - அறிவு) **समरसं** மாற்றுச்

சுவையே இல்லாமல் ஒரே ஆனந்த ரஸமாகவுள்ளதும் गगनोपमः ஆகாயத்தை உவமையாகக் கூறி விளக்கக் கூடியதுமாகவுள்ள ஜ்ஞானப்பிழம்பாகவே अहं நான் இருக்கிறேன். இவ்விதமாக உலக சம்பந்தம் சிறிதளவுகூட இல்லாதவனாக இருக்கிறேன் என்று பொருள்கொள்ள வேண்டும்.

निष्कम्पकम्पनिधनं न विकल्पकल्पं
स्वप्न प्रबोधनिधनं नहिताहितं हि।
निःसार सार निधनं न चराचरं हि
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १६ ॥

निष्कम्प அசைவற்றது कम्प அசைவுள்ளது என்று சொல்லும் பேச்சுக்கு निधनं முடிவாகவுள்ள பரமாத்மாவிடம் विकल्पकल्पं பலவிதமான வேற்றுமைகளுடன் கூடியுள்ள உலக கற்பனையும் न சம்பந்தப்படுவதில்லை स्वप्न प्रबोधनिधनं ஸ்வப்னம் என்றும் விழிப்பு என்றும் சொல்லப்படுகிற இரண்டு அவஸ்தைகளிலேயே முடியக் கூடிய हितं நல்லது ஸந்தோஷமோ अहितं துக்கமோ न எனக்கு இல்லை निःसार எந்தவிதமான (சக்தி-திறமை) பலமுமற்று (தனக் கென்று தனித்து உருவமற்று) இருக்கிறது चराचरं हि அசையும் பொருள் அசையாப் பொருள் என்ற சம்பந்தமும் न எனக்கு கிடையாதே! இவ்விதமாக ஆகாயம்போன்று எங்கும் பரவி ஒரே சுவையாகவுள்ள, ஆனந்த ரஸம் என்ற ஒரே ஜ்ஞானப்பிழம்பாகவே அல்லவா நான் இருக்கின்றேன்.

नोवेद्य वेदकमिदं न च हेतु वक्यं
वाचामगोचरमिदं न मनो न बुद्धिः।
एवं कथं हि भवतः कथयामि तत्वं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १७ ॥

इदं என்னால் அனுபவிக்கப்படுகின்ற ப்ரஹ்மதத்வமானது नो वेद्यं ஜ்ஞானத்திற்கு விஷயமாகவாகாது (உலகில் அறிவுக்கு விஷய மாக எந்தபொருள் ஆகுமோ அதுவே லோகதுக்கத்தை உண்டு பண்ணும்) नोवेदकं இந்த தத்வத்தை விளக்கக்கூடிய ப்ரமாணங் களும் ஒன்றும் கிடையாது इदं இந்த ஸ்வரூபமானது वाचां வார்த்தைகளுக்கு अगोचरं புலனாகாது. இந்த தத்வத்திற்கு नोमनः

மனதும் கிடையாது न बुद्धिः புத்தியும் இல்லை. அதனால் हेतु तत्त्वं காரணத்தைக்கொண்டு மனதினால் ஊஹிக்கவும் முடியாது एवं இவ்வாறு இருக்கும்போது तत्त्वं हि உண்மைப் பொருளை भवतः உங்களுக்கு कथं எவ்வாறு कथयामि கூறுவேன். வார்த்தைகளால் உங்களைப் புரிந்துகொள்ளச் செய்ய முடியாதல்லவா! இவ்விதம் எங்கும் பரந்து வானம்போல் உள்ள ஆனந்த ரஸமாகவுள்ள பரமாத்ம ஸ்வரூபமாகவேதான் நான் இருக்கின்றேன் என்று கூறுகிறார்.

निर्भिन्नभिन्नरहितं परमार्थ तत्त्वं
अन्तर्बहिर्नहि कथं परमार्थं तत्त्वम् ।
प्राक्संभवं न चरितं नहिवस्तु किञ्चित्
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ १८ ॥

परमार्थतत्त्वं இவ்விதமாக மிகவும் உண்மையான ப்ரஹ்ம தத்வமானதும் निर्भिन्न-भिन्न-रहितं பிளவுபட்டது, பிளவுபடாதது என்ற பாகுபாடு அற்றது. இவ்விதமே कथं எவ்விதத்திலும் अन्तः बहिः न உள்ளே என்றும் வெளியே என்றும் கூறமுடியாததாகும் प्राक्संभवं முன்னே ஏற்பட்டது, முன் ஜன்மத்தில் செய்யப்பட்ட चरितं கதை என்று கூட किञ्चित् எந்த ஒருவிதமான वस्तु உண்மையும் नहि கிடையாதே! ஆகையினால் ज्ञानामृतं समरसं गगनोपमः अहं, நான் என்றுமே எங்கும் பரவி, ஆகாயம் போன்று, எந்த ஒரு வஸ்துவின் சம்பந்தமும் இல்லாத, ஆனந்த ரஸமான ஜ்ஞானரூபமாகவே திகழ்கின்றேன் என்ற பொருள் ரொம்ப பொருத்தமாகின்றது.

(தொடரும்)

# Philosophy of the Ayurveda

The 'yellow leaves' concerning the Ayurveda are both voluminous and luminous. Ayurveda which, in essence, means a total knowledge of the life sustaining processes, assumed its noble stature with a philosophical foundation of its own.

The holistic doctrine of five 'elements' provided a viable base for a coherent interpretation of the multi-dimensional processes in both the organic and the inorganic world-the physiological processes within, the nurturing elements, the relationship of the human body with its environment, the nature of the motive forces, the human psyche, etc. The universality of the Ayurveda encompasses the health and diseases not only of man but also of the plants and animals. More importantly; its approach concerning man has certain philosophical features.

When the Ayurvedic knowledge was being codified, there were religio-philosophical formulations specially of the 'Samkhya' the '**Vaisheshika**', and the '**Nyaya**'. The evolutionary sequence of the '**Samkhya**' exposition enumerated a well-knit relation among the primordial Nature and man, intellect, the ego, mind, the five cognitive and the five connative organs, the 'pancabhutas' and their subtle states.

The 'Nyaya' and the 'Vaisheshika' projected a sequence of several categories of reals like substance, qualities action as well as certain others of epistemic significance. The influence of the 'Samkhya' thought-structure on Ayurveda is indeed pronounced and that of the 'Nyaya' and 'Vaisheshika' is considerable.

The Ayurveda classic, 'Susrutha Samhita', gives a clear exposition of the way in which the five elements constitute the human body from its very conception. The doctrine of five 'elements' enabled the Ayurveda to attempt at a broad classification of all substances of the world

# अवधूतगीता
## तृतीयोध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்றாவது அத்தியாயம்

(தொடர்ச்சி)

रागादि दोष रहितं त्वहमेव तत्वं
दैवादि दोषरहितं त्वहमेव तत्वम्।
संसार शोक रहितं त्वहमेव तत्वं
ज्ञानामृतं समरसं गगनोपमोहम्॥ १९॥

வேதாந்த சாஸ்திரத்தில் பிரஹ்ம தத்வத்தைப் பற்றி சொல்லும்போது ராகம், துவேஷம், அதிர்ஷ்டம், பூர்வஜன்மா, அந்தகர்ம வினைகள் — சோகம், மோஹம் முதலிய தோஷங்கள் தத்வ ஸ்வரூபமான பரமாத்மாவிற்கு கிடையாது என்றும் ஒரே மாதிரி எங்கும் நிரம்பி நிற்கின்ற அறிவு மயமான ஜ்ஞான ஸ்வரூபமே பரமாத்ம தத்வம் என்று கூறப்பட்டிருக்கிறது. ஞானியும் பரமாத்மாவும் ஒன்றே என்ற நிலை மிகவும் உயர்ந்த தத்வ ஜ்ஞான நிலையாகும். தற்சமயம் ஜ்ஞானி — தானும் — பரமாத்மாவும் ஒன்றே என்ற எண்ணத்தில், பரமாத்மாவிடம் எந்த தோஷங்கள் இல்லை எனக் கூறப்பட்டதோ அவைகள் தன்னிடமும் இல்லை என்பதை ஜ்ஞான நிஷ்டையிலிருந்து கூறுகிறார்.

रागादि दोष रहितं तत्वं तु अहमेव।

ராகம், துவேஷம் முதலிய தோஷங்களின் சம்பந்தம் இல்லாத பரமாத்ம தத்வம் (தத்வம் = உண்மைப்பொருள்) நான்தான், என்னைத் தவிர வேறாக பரமாத்மா என்பவர் ஒருவர் தனித்து இல்லை என்றும் — இவ்விதமே

दैवादि दोष रहितं तत्वं तु - अहमेव
संसार शोक रहितं तत्वं तु अहमेव

என்று சொல்லி दैवं என்ற சொல்லிற்கு ஜன்மாந்திர அதிர்ஷ்டம் என்று பொருள் — பிரஹ்ம நிலையில் இதுவும் ஒரு தோஷம்தான்.

இவ்விதம் ஸம்ஸார வாழ்க்கையிலும் சோகம், மோஹம் என்ற தோஷங்கள் உள்ளன. இவை யாவும் எனக்கு கிடையாது. ஏனென்றால் நான் உண்மைப் பொருளாகவுள்ளதும், எங்கும் நிரம்பியதும், வேற்றுமை ஏதும் இல்லாததுமான ஒரே ரஸஸ்வ ரூபமாகவுள்ள ஜ்ஞானாம்ருத ஸ்வரூபமாகவே இருக்கின்றேன் அல்லவா! என்று கூறுகிறார்.

स्थानत्रयं यदि च नेति कथं तुरीयं
कालत्रयं यदि च नेति कथं दिशश्च।
शान्तं पदं हि परमं परमार्थतत्त्वं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २० ॥

ஜாக்ரத் - ஸ்வப்னம் - ஸுஷுப்தி என்ற (ஜீவர்களுடைய) மூன்று அவஸ்தைகளை ஒட்டிப் பேசும்போது தத்வ நிலையை நான்காவதாக துரீயம் என்று பேசுவதுண்டு. இவ்விதம் சென்ற காலம், நிகழ் காலம், வருங்காலம் (எதிர் காலம்) என்ற மூன்று காலங்களை ஏற்றுக்கொண்டால் தேசங்களையும் கிழக்கு, மேற்கு என்று ஏற்றுக்கொள்ளவேண்டி வரும். जन्यानां कालोपाधिः உண்டாகின்ற வஸ்துக்களை காலம் வரையறுத்துக் கூறும் मूर्तानां दिगुपाधिः உருவமுள்ள வஸ்துக்களை தேசம் வரையறுத்துக் கூறும் என்பது வழக்கு. परमार्थतत्त्वं, परमं-पदं-शान्तं-हि! உண்மைப் பொருளாகவுள்ள பரமாத்மா, காலம் தேசம் வஸ்து என்று மூன்று பரிச்சேதம் அற்றவர், எங்கும் நிரம்பி எக்காலத்திலும் எல்லா இடத்திலும் இருப்பவர் அன்றோ! ஆகையினால் स्थानत्रयं यदि नचेति அவஸ்தைகள் மூன்றுமில்லை என்று கூறும்போது कथं எவ்விதம் तुरीयं நான்காவது நிலை என்று கூறமுடியும் कालत्रयं यदिच न முக்காலம் என்பது இல்லாதபோது எவ்விதம் தேச ஸம்பந்தமுண்டு, இவ்விதம் ஜ்ஞான ஸ்வரூபமாக எங்கும் நிரம்பி ஒரே ரஸமாகவுள்ள பரமாத்ம தத்வமாகவே நான் இருக்கிறேன், பரமாத்மாவும் நானும் ஒன்றேதான்.

दीर्घो लघुः पुनरितीह नमे विभागः
विस्तार सङ्कटमितीह नमे विभागः।
कोणं हि वर्तुलमितीह नमे विभागः
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २१ ॥

பிரஹ்ம தத்வத்தைப் பற்றி உபநிஷத்துக்கள் கூறும்போது நீளம் - குட்டை-பெரியது - சிறியது-உருண்டை - சதுரம் என்ற அளவுகளும் கிடையாது என்று கூறுகின்றன. அதையும் விளக்கு கிறார்.

दीर्घः மிகவும் நீண்டது पुनः மேலும் लघुः மெல்லியது इति என்ற विभागः பிரிவுப்பேச்சானது इहहि இந்த ஜ்ஞான நிலையில் नमे என்னைப் பொறுத்தவரையில் கிடையாதல்லவா-இவ்விதமே विस्तार-सङ्कटमिति விஸ்தாரமானது(வெகு நீண்டது அகலமானது) என்றும், மிகவும் குறுகலானது (அகலம் நீளம் அற்றது) என்றே கூறப்படக்கூடிய विभागः பிரிவுப் பேச்சும் नमे எனக்குக் கிடையாது. இவ்விதமே कोण முக்கோணம் ஷட்கோணம் என்ற உருவமாகவோ वर्तुलं इति உருண்டையானது வட்டவடிவமானது என்றே கூறப்படுகின்ற विभागः பிரிவும் नमे எனக்கு இல்லையாதலால் ज्ञानामृतं समरसं गगनोपमः अहं அமிருதமயமானதும் ஜ்ஞானப்பிழம்பானதும் ஒரே ரஸமானதும் ஆகாயம் போன்று எங்கும் பரவியுள்ளதுமான பரமாத்ம ஸ்வரூபமாகவே நான் திகழ்கின்றேன். எனக்கும் பரமாத்மாவுக்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை, பரமாத்மாவும் நானும் ஒன்றே என்கிறார்.

माता पितादि तनयादि नमे कदाचित्
जातं मृतं नचमनः नचमे कदाचित्।
निर्व्याकुलं स्थिरमिदं परमार्थ तत्वं
ज्ञानामृतं समरसं गगनोपमोहम्॥२२॥

मे எனக்கு मातापितादि தாயார் தகப்பனார் என்றது போன்றதும் तनयादि பிள்ளை பெண் என்பது போன்றதுமான ஜீவ ஸம்பந்தமான வியவகாரங்களும் கூட कदाचित् ஒருபோதும்கூட न இல்லை, கிடையாது. जातं பிறப்பு मृतं இறப்பு मनः च மனது என்பதும் मे என்க்கு कदाचित् ஒருபோதும் கூட न கிடையாது-இவ்விதம் परमार्थतत्वं உண்மைப்பொருளாகவுள்ள தத்வமானது निर्व्याकुलं (आकुलं கலக்கமானது व्याकुलं ரொம்பரொம்ப கலக்கமானது) எந்தவிதமான கலக்கமும் அற்று स्थिरं என்றும் எப்போதும்கூட மாறாமல் ஒரேமாதிரியாகவுள்ளதாக इदं இந்தப் பரம்பொருள் இருக்கிறது. அவ்விதமான என் ஸ்வரூபமாகவே இருக்கிற ஆத்ம தத்வமேதான் நான். நானே தான் பரமாத்மாவாக இருக்கிறேன். இவ்விதமான ज्ञानामृतं समरसं गगनोपमः अहं ஜ்ஞான ரூபமாகவும் ஒரே ரஸமாகவும் ஆகாயம் போன்று வியாபகமான பரம்பொருளாகவே நான் இருக்கிறேன் என்று ஜ்ஞான நிஷ்டையில் உள்ளபடி கூறுகிறார்.

(தொடரும்)

# ஆறுமுகம்

சரவணன் கொண்டது ஆறுமுகம் — அவன்
தண்ணெழிலுக் கிணையாருமுகம்?

சரவணப் பொய்கையில் மலர்ந்த முகம் — இந்தத்
தரணியைக் காத்திட வந்த முகம்
அருள் ஒளி வீசிடும் அன்புமுகம் — எங்கள்
அழகிய வயலூர் வள்ளல் முகம்! (சரவணன்)

ஞான மொழிதனைப் பேசும் முகம் — அருள்
ஞானபண்டிதன் குழந்தை முகம்!
நானெனும் அகந்தையை அடக்கும்முகம் — அது
நான்முகனைச் சிறை கொண்ட முகம்! (சரவணன்)

எரிதழல் போலே இலங்கும் முகம் — தன்னை
எதிர்த்திட்ட சூரனைக் கொன்ற முகம்
விரிகதிர் போலே விளங்கும் முகம் — அது
வேலுடைய வயலூர் குமரன் முகம்! (சரவணன்)

கோதையர் இருவரைக் கொஞ்சும் முகம் — அருட்
கோமகன் தணிகையில் வேலன் முகம்!
மேதினி தனையே ஈர்க்கும் முகம் — புகழ்
மேன்மை மிகும் முருகையன் முகம்! (சரவணன்)

பன்னிரு விழிகளைக் கொண்ட முகம் — நம்
பைந்தமிழ்க் கடவுளின் இனிய முகம்!
என்னித யந்தனில் நிலைத்த முகம் — அது
ஈடு இணையிலா ஆறுமுகம். (சரவணன்)

நன்றி: கந்தன் பாமாலை. (வேதாராகவன், கரூர்.)

---

# குருநாதரின் வாக்கு
(K. கோபாலன், சென்னை)

பணம் மறைகின்றது. அழகு வாடுகின்றது. வாழ்க்கைப் பறக்கிறது. ஆற்றல் போகின்றது. ஆனால் இறைவன் நிரந்தரமாய் நம்மிடம் உள்ளான். அன்பு நிரந்தரமாக உள்ளது.

மானிடப் பிறப்பு ஒரு சிறந்த வாய்ப்பு. உலக இன்பங்களை தேடுகின்றீர்களா? இறைவனே இன்பங்களின் ஊற்று,

# अवधूतगीता

## तृतीयोध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்ருவது அத்தியாயம்

(தொடர்ச்சி)

शुद्धं विशुद्धमविचारमनन्तरूपं
निर्लेपलेपमविचार मनन्तरूपम् ।
निष्खण्डखण्डमविचारमनन्तरूपं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २३ ॥

अनन्तरूपं முடிவு காணமுடியாமல் எங்கும் பூர்ணமாக நிரம்பி யுள்ள உருவமான பிரஹ்ம தத்வத்தைப்பற்றி शुद्धं विशुद्धं தூய்மையானது, தூய்மை இல்லாதது (சுத்தமானது, அசுத்த மானது) என்ற விசாரத்துக்கு இடமில்லை. அப்பாற்பட்டது. விசாரிக்க முடியாதது, விசாரம் என்ற செயல் எந்த பிரஹ்மத்தில் செல்லாதோ அப்பேற்பட்டது; தத்வஸ்வரூபம். மேலும் निर्लेप लेपमविचारं லேபம் என்ருல் ஒட்டிக்கொள்ளும் தன்மையுள்ளது. निर्लेपं என்ருல் ஒட்டிக்கொள்ளாதது என்று அர்த்தம். இவ்விதம் लेपं निर्लेपं என்ற இரண்டு விதமான விசாரம் எங்கு செல்லாதோ (உட்புகுந்து பேசாதோ) அப்படிப்பட்ட अनन्तरूपं எங்கும் பரவி யுள்ளதாக "தத்வம்" அமைந்துள்ளது; निष्खण्ड-खण्ड-मविचारं अनन्तरूपं - खण्डं என்ருல் துண்டிக்கப்பட்டது (ஒரு பங்கு என்று சொல்வது) निष्खण्ड என்ருல் துண்டிக்கப்படாதது என்று பொருள். இவ்விதம் இருவிதமான பேச்சு எங்கே இல்லையோ அப்படிப்பட்ட பரமாத்மா எங்கும் நிரம்பியிருக்கிருர், ஆகாயம் போன்று உள்ள அவரும் நானும் ஒன்றேதான், வேறு இல்லை என்று கூறுகிருர்.

ब्रह्मादयः सुरगणाः कथमत्र सन्ति
स्वर्गादयो वसतयः कथमत्र सन्ति ।
यद्येकरूपममलं परमार्थतत्त्वं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २४॥

अत्र இங்கு (இவ்விதமான தத்வஜ்ஞான நிலையில்) ब्रह्मादयः பிரஹ்மா முதலிய सुरगणाः தேவர் குழாங்கள் कुत्र எவ்விதம் सन्ति இருப்பார்கள் - இருக்கமுடியும் - எல்லாம் ஒன்றே என்ற நிலையல்லவா? மேலும் स्वर्गादयः वसतयः ஸ்வர்க்கம் வைகுண்டம் ஸத்யலோகம் முதலிய வாஸஸ்தானங்கள் எவ்வாறு இந்த நிலையில் பொருத்தமாக இருக்கமுடியும்? परमार्थं तत्त्वं உண்மைப் பொருளானது अमलं எந்தவிதமான மாசு அற்றதும் एकरूपं ஒரே மாதிரியாகவுள்ளதுமாக यदि இருக்கும்பொழுது, எவ்விதம் பிரஹ்மாதி தேவர்களோ, அவர்களுடைய இருப்பிடமான லோகங்களையோ கூறுவது-விஸ்தரிப்பதற்கு வழியில்லையே. இவ்விதமான ज्ञानामृतं அறிவு ரூபமானதும் समरसं அதிகம், குறைவு என்று வேறுபாடு காணமுடியாததும் गगनोपमः ஆகாயத்தையே உவமானமாகச் சொல்லக்கூடியதுமான பரமாத்ம ஸ்வரூபமாகவே अहं நான் எப்போதும் திகழ்கின்றேன், என்று தன் நிலையைப்பற்றி பலவாறாகக் கூறி விளங்கச்செய்கிறார்.

निर्नेति नेति विमलो हि कथं वदामि
निःशेषशेष विमलो हि कथं वदामि।
निर्लिङ्ग लिङ्ग विमलो हि कथं वदामि
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २५ ॥

अहं நான் ज्ञानामृतः ஜ்ஞானமாகின்ற அமிர்தமயமாகவே இருக்கின்றேன் गगनोपमः உவமையில் ஆகாயம் போன்று பரவியிருப்பவன் समरसः ஒரே சுவையாக உள்ளவன், ஏற்றம் தாழ்வு இல்லை என்று ஏற்படும் நிலையில் नेति என்றோ निर्नेतिः அவ்விதம் இல்லை என்றோ शेषः மீதமானவன் निःशेषः மீதமாகாதவன் என்றோ लिङ्ग அடையாளமுள்ளவன் निर्लिङ्गः அடையாளம் (காரணம்) இல்லாதவன் என்றோ कथं वदामि எவ்வாறு கூறுவேன், புரியவில்லையே என்கிறார்.

निष्कर्मं कर्म परमं सततं करोमि
निःसङ्ग सङ्ग रहितं परमं विनोदम्।
निर्देह देह रहितं सततं विनोदम्
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २६ ॥

निष्कर्मकर्मपरम उண்மையாகப் பார்ப்போமாகில், கர்ம சம்பந்தமில்லை என்றும், கர்மாவுடனேயே எப்போதும் சேர்ந்து உள்ளது என்றும் கூறமுடியாதது பரமார்த்தப் பொருளாகும். ஆனாலும் सततं எப்போதுமே करोमि ஏதோ ஒன்றைச் செய்து கொண்டேயிருக்கிறேன் என்றுதான் தோன்றுகிறது. இன்னும் வேடிக்கையாகத் தோன்றும்! परम् பரதத்வமானது निःसङ्ग-सङ्ग रहितं எந்தப் பொருளுடனும்கூட சேராதது என்பதும் மிகுந்த ஆச்சர்யம். இதைவிட ஆச்சர்யம் பாருங்கள் निर्देह देह रहितं உடல் அற்றது என்றோ, உடல் உள்ளது என்றோ இருவிதமாகவும் சொல்லமுடியாமல் அன்றோ தத்வப்பொருள் உள்ளது. ஆகவே உண்மைப் பொருளாகவுள்ள பரமாத்மா எங்கும் நிரம்பி பூர்ணமாக இருந்துகொண்டு ஆகாயம்போல் வியாப்தமாகவும் இருக்கிறார். அவரும் நானும் ஒன்றுதான். எங்களுள் எந்தவிதமான பேதமும் இல்லை. அறிவுச்சுடர் ரூபமாக இருக்கின்ற எனக்கு எந்த விதமான மாறுதலும் கிடையாது என்று தன் ஜ்ஞான நிஷ்டையை ஸ்துதிக்கிறார்.

# भावनोपनिषद् (Bhavanopanishad)

## Eighth Part

(Vinayaka Sharma, Kengeri)

7. त्वगादि सप्त धातु रोम सम्युक्तः।

The Saptha dathus are chyle or vitality (रस), blood (रक्त), flesh (मांस), fat (मेदस्), bone (अस्थि), marrow (मज्जन्) and semen (शुक्ल). Adding skin (त्वक्) and hair (रोम) these become nine and these dathus in the body are conceived as Sree Entram (श्रीयन्त्र) and they are equated to the nine gems of the Island of Navarathna. The Nine Gems and their corresponding body elements are :

| | | | |
|---|---|---|---|
| 1. | Vitality | (रस) | Padmaragam |
| 2. | Blood | (रक्त) | Manikyam |
| 3. | Flesh | (मांस) | Pushparagam |
| 4. | Fat | (मेदस्) | Gomedakam |
| 5. | Bone | (अस्थि) | Vajram |
| 6. | Marrow | (मज्जन्) | Marakatam |
| 7. | Semen | (शुक्ल) | Mouthikam |
| 8. | Skin | (त्वक्) | Viduryam |
| 9. | Hair | (रोम) | Neelam |

As per Ayurveda, in the human body there are seven kalas (कला) seven principles (आशय), seven Dhatus (धातु), seven Dhathu Mala (धातु-मल), seven Upadathu (उपधातु), and seven skin (त्वचा) all together forty-two. These alongwith Jeeva (जीव) become 43 on the basis of which the body exists. In Sree Chakra after leaving the first triangle (त्रिकोण)

# अवधूतगीता

## तृतीयोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்றுவது அத்தியாயம்

(தொடர்ச்சி)

मायाप्रपञ्चरचना नच मे विकारः
कौटिल्यदम्भरचना नच मे विकारः।
सत्यानृतेति रचना नच मे विकारः
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २७ ॥

**मायाप्रपञ्चरचना** மாயையினுல் ஏற்பட்ட உலகத் தோற்றம் என்ற **विकारः** மாறுபாடும் **न च मे** எனக்கு இல்லை. **कौटिल्य-दम्भरचना** கோணலாகவே இருக்கிற, டம்பம் என்று தோன்று கின்ற தோற்றமும் **नच मे विकारः** (மாறுபாடும்) எனக்கு இல்லை **सत्यानृतेति रचना विकारः च नमे** ஸத்யம் என்றும் பொய் என்றும் தோன்றுகின்ற மாறுபாடும் எனக்கு இல்லை. **समरसं** உள்ளும் புறமும் ஒரே மாதிரியாகவுள்ள ஆனந்த ரூபமாகவுள்ள **ज्ञानामृतं** அமிருதரூபமான ஜ்ஞானஸ்வரூபியாக **गगनोपमः अहं** ஆகாயம் போல் எங்கும் பரவியுள்ளவனுகவே நான் இருக்கின்றேன்.

உலகம் என்பது மாயையாகவே தோன்றுகின்றது என்பது சிறந்த தத்வஜ்ஞானியின் அனுபவமாகும். அதற்கு தக்க, நிலை வரும்போதுதான், மற்றவர்களுக்கும் அனுபவம் தோன்றும். அதுவரை சொல்லுவது புரியாமலே இருக்கும். டம்பம் என்பது இருப்பதை மறைத்து வேறுவிதமாக தோற்று விப்பதேயாகும். அதனுல் டம்பம் என்பது நேர்மைக்கு எதிராக வுள்ளதாகும். அதனுலேயே **कौटिल्यं** கோணலானது என்று அடைமொழி அதற்கு கொடுக்கப்பட்டது. **दम्भः** என்ற பதத் திற்கு **धर्मध्वजित्वं** என்பது ஸ்ரீ சங்கர பாஷ்யம். தர்மானுஷ்டா ளங்களை, தனக்கென்று செய்யாமல், பிறரை ஏமாற்று

வதற்காக, இருப்பதை மறைத்து, மிகப் பெரியதாக உலகத்தவர்கள் நினைக்கவேண்டும் என்று, கொடிகட்டி பறக்க விடுவது போல் பிரகாசப்படுத்துதல், என்று பொருள். இதுவும் உலகத்தின் தோற்றமேயாகும். அடுத்தபடி - ஸத்யம் — அனுருதம் என்ற விகாரமும் எனக்கு இல்லை என்று கூறப்பட்டிருக்கின்றது. ஸத்யம் என்பதற்கு உண்மை என்று ஒரு பொருள். மற்றும் सत् + त्य என்று வியாக்யானமுண்டு. இங்கு सत् என்பதற்கு ஆகாயம் - வாயு என்றும் त्य என்பதற்கு தேயு - ஜலம் - பூமி என்றும் சேர்ந்து பஞ்சபூதங்கள் ஸத்யம் என்றும், अनृत என்ற சொல்லுக்கு न + ऋत = अनृत என்று விக்ரஹ வாக்யங்கொண்டு உண்மையாக இல்லாதவை என்று பொருள். உலகில் கிளிஞ்சல் வெள்ளி - கயிற்றில் பாம்பு, இவைகளும் விகாரங்களேயாம். ஆக இந்த இருவிதமான உண்மை பொய் என்ற மாறுபாடுகளும் எனக்கு இல்லை. என்று கூறப்பட்டிருக்கிறது. ஆத்மஸ்வரூபம், எங்கும் பரவி, ஆகாயம் போலும், கற்கண்டுச் சுவைபோல், எங்கும் ஒரே ஸந்தோஷ ரஸம் நிரம்பியதும் ஜ்ஞானஸ்வரூபமாகவுள்ளதுமாகிற பரமாத்ம ஸ்வரூபமாகவே நான் இருக்கின்றேன். இவ்விதமாகவுள்ள என்னுடைய உண்மையான தத்வ ஸ்வரூபத்தில், உலகத்தோற்றம், தம்பம் - ஸத்யம் - பொய்மை என்கின்றதான தோற்றங்கள் கிடையாது என்கிறார்.

सन्ध्यादिकालरहितं नच मे वियोगः
ह्यन्तः प्रबोधरहितं बधिरो न मूकः ।
एवं विकल्परहितं नच भाव शुद्धं
ज्ञानामृतं समरसं गगनोपमोहम् ॥ १८ ॥

सन्ध्यादिकालरहितं ஸந்தியை முதலிய காலத்தவறுதல் என்ற वियोगः (பிரிவு) நஷ்டமும் नच मे எனக்குக் கிடையாது अन्तः प्रबोधरहितं हि ஏனென்றால் உள்ளே மனதில் ஜ்ஞானம் என்ற [விஷயப்பற்றுள்ள] அறிவும் கிடையாதே! [ஸ்வரூப ஜ்ஞானத்திலோ எந்தவிதமான பிரிவும் बोधः - प्रबोधः அறிவு-நல்ல அறிவு என்பது போன்றவைகளும் கிடையாது] ஆனால் நான் न बधिरः செவிடன் என்றவனுகவுமில்லை. नच मूकः ஊமையுமல்ல. एवं இம்மாதிரியான विकल्परहितं எந்தவிதமான பாகுபாடும் இல்லாததான, எங்கும் பரவியதும், ஒரே ரஸமானதுமாகவுள்ள ஜ்ஞானமிருதமாகவுள்ள ஆகாயம் போன்று நான் விளங்குகின்றேன். பிராத:காலம், ஸங்கவ காலம், மத்யான்ஹ

காலம், அபராண்ஹ காலம், ஸாயங்காலம் என்றெல்லாம் காலத்தின் பிரிவுகள் உலகத்தில் இருக்கின்றன. சிற்றறிவு, நுண்ணிய பொருளையும் ஊகித்தறிகின்ற உயர்ந்த ஜ்ஞானம், விஷயப் பற்றுள்ள ஜ்ஞானம் (வைஷயக அறிவுகள்) ஶப்த-ஸ்பர்ஶ-ரூப-ரஸ-கந்தங்களின் ஞானம் என்றெல்லாம் அறிவைப் பற்றிய பாகுபாடுகள் உலகத்தில் உள்ளன. இவ்விதமான எந்த வித்யாஸங்களும், ஜ்ஞானஸ்வரூபமாகவுள்ள ஆத்ம தத்வத்தில் கிடையாது. நானும் ஆத்மாவும் ஒன்றேதான்.

निर्नाथनाथरहितं हि निराकुलं वै
निश्चित्तचित्तविगतं हि निराकुलं वै ।
संविद्धि सर्वविगतं हि निराकुलं वै
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ २९ ॥

निर्नाथनाथरहितं हि தான், ஒரே வஸ்துவாகவுள்ளதை இரண்டு சொற்களால் நன்கு புரியும்படி கூறுகிறார். निर्नाथ என்றால் தனக்கு நாயகனாக, (அதிகாரியாக) எவரும் இல்லை என்பதையே மறுபடி, नाथरहितं हि என்று தனக்கு நாதனாக ஒருவரும் இல்லையல்லவா என்றும் அதனால் निराकुलं वै - आकुल என்றால் கலக்கமுடையது என்று அர்த்தம். निराकुल என்றால், கலக்கமேயில்லை என்று பொருள் वै என்ற சொல்லை एव என்று மாற்றிக்கொண்டால், கலக்கமற்றது என்பது திண்ணம் என்று பொருள்.

இவ்விதமே निश्चित्त - चित्त विगतं हि மனதிற்கு அப்பாற்பட்டதும், மனது என்றதை (அந்த:கரணம் என்ற கருவியின் சம்பந்தம் அற்றதுமான) உடைத்தாகாததுமான ஆத்மஸ்வரூபமானது निराकुलं वै கலக்கமற்றதாகவே உள்ளது- संवित् हि எல்லா இடங்களிலும் எல்லாவற்றையும் நன்கு தெரிவிக்கின்ற அறிவு (ஜ்ஞானம்) ஸ்வரூபமாகவுள்ள ஆத்மதத்வமானது सर्व விகத (உண்மையாக) ஒன்றோடும் சம்பந்தப்படாமல் இருக்கும் பொருளல்லவா - அதனால் निराकुलं वै எந்தவிதமாகவும் கலக்கமற்றதாகவே உள்ளது. அவ்விதமாகவுள்ளதும், ஆகாயம் போன்று எங்கும் வியாபித்து நிற்பதும் ஒரே ரஸமாகவுள்ளதும், ஜனன - மரண - ஸம்பந்தம் அற்றதுமான ஜ்ஞானரூபமாக வுள்ள ஆத்மஸ்வரூபமாகவே நான் இருக்கின்றேன்.

कान्तार मन्दिरमिदं हि कथं वदामि
संसिद्ध संशयमिदं हि कथं वदामि।
एवं निरन्तरसमं हि निराकुलं वै
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ३० ॥

इदं हि இந்த உலகமானது कान्तारमन्दिरं காட்டின் நடுவில் உள்ள குடிசை போன்றது कथं எவ்வாறு वदामि இதனைச் சொல்லுவேன். इदं हि இந்த உலகமானது संसिद्ध-संशयं தீர் மானமாக ஸந்தேகமானதுதான். அப்படியுள்ள இந்த உலகைப் பற்றி कथं वदामि எவ்வாறு கூறுவேன். एवं இவ்விதம் निरन्तर समं என்றுமே ஒரேமாதிரியாகவுள்ளதும் निराकुलं वै கலக்கமே இல்லாததுமான समरसं பிரஹ்மானந்த ரஸமாகவுள்ளதும் गगनोपमः ஆகாயம்போல் பரந்து விளங்குகின்றதுமான ज्ञानामृतं அமிர்தஸ்வரூபமாகவுள்ள பரமாத்ம தத்வமாகவே நான் இருக் கின்றேன்.

मन्दिरं என்ற சொல்லிற்கு மச்சுவீடு என்று அர்த்தம் சொல்லவேண்டும். அது பொருந்தாது. காட்டின் நடுவே மச்சு வீடு கட்டுவதில்லை. அதுமட்டுமின்றி நிலையற்றது என்று பொருள் கூறவேண்டும் என்பதற்காகவே ''காட்டில் வீடு'' என்ற சொல் அமைந்துள்ளது. காட்டின் நடுவில் உள்ள குடிசை வீடு, தீர்மானமாக ஒரே இடத்தில் நிலைபெற்று இருக்காது. कान्तारः பெருங்காடு என்று அர்த்தம். காட்டில் அடிக்கடி காட்டுத் தீ ஏற்படும். அந்த நெருப்பில் குடிசைகள் சாம்பல் ஆகிவிடும் அதனால் காட்டில் உள்ள குடிசை நிலையற்றது என்று பொருள் கொண்டு அதனைப்போல் உலகம் என்று கூறுகிறார். ஸந்தேஹம் ஏற்பட்டால் அந்தவஸ்து நிலையற்றது. அதுவும் நிச்சயமான ஸந்தேஹம் கொண்டது என்றால் கூற வேண்டாம். அதனால் உலகம் நிலையற்றது என்பதையும் இந்த் இரண்டு உதாரணத்தைக் கொண்டு கூறியிருக்கிறார்.

---

जननी पृथ्वी कामदुघाऽऽस्ते जनको देवः सकलदयालुः।
दाम्यत दत्त दयध्वं जनताः श्रेयो भूयात्सकल जनानाम्॥

தாயான பூமி விரும்பியதைப் பொழிபவளாக உள்ளாள். தந்தையான இறைவன் யாவரிடமும் பரிவுள்ளவர். மக்களே! அடங்குங்கள்! வாரி வழங்குங்கள்! பரிவுகாட்டுங்கள்! எல்லா மக்களுக்கும் மேன்மை ஏற்படட்டும்!

—காஞ்சி பரமாசாரியர்கள்.

# "ஆல்போல் வளர்ந்து அறுகுபோல் படர்ந்து"

(மயூரப்ரியா)

ஆலமரம் மிகவும் பெருமை வாய்ந்தது. ஆலமரம் பிரும் மாண்டமாக ஓங்கி வளர்ந்து வெகு கம்பீரமாக நிற்கும். அதன் விழுதுகள் தரையை நோக்கிவந்து, பூமியிற்பதிந்து, பெரிய மரங் களாகும். ஆலம்பழமோ மிகச் சிறியது. அதன் விதைகளும் மிக மிகச் சிறியவை! எனினும் தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை தான் எவ்வளவு பெரிய மரமாகி, விழுதுகள் தள்ளி அவைகளையும் மரங்களாகப் பின்னி, வளரச் செய்கின்றது! ஈஸ்வரனின் சிருஷ்டி யின் மகத்துவத்தைக் காண்கின்றோமன்றோ! ஆலமரத்தின் நிழலில் எண்ணிறந்த படைவீரர்களும் ஒதுங்கலாமே! கோடையில் குளிர்ச்சியையும், குளிர்நாட்களில் வெப்பத்தையுமளிக்கிறது இந்த 'வள்ளல்'! 'கைமாறு கருதாமல்'! பரமேஸ்வரனும் சாட்சாத் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமாய் ஆல விருட்சத்தினடியிலேதானே அமர்ந்ததாகத் தெரிவிக்கின்றனர். வைதீகச் சடங்குகளில் உபயோகப்படுவது ஆலஇலைச் சருகுகள்தானே? பிரளய காலத்தில் ஸ்ரீ கண்ணபிரான் ஆலஇலையில் ஸயனித்தவாறுதானே 'பவனி' வருகிறார்!

'ஆலும் வேலும் பல்லுக்குறுதி'

'ஆல்போல் வளர்ந்து, அறுகுபோல் படர்ந்துப் பன்னெடுங் காலம் பேறுடன் வாழ்க' என்று வாழ்த்துகிறோம். இவ்வளவு சிறப்புமிக்க 'ஆல்' இன்னும் நமக்கு ஓர் சுபமங்கள காரியத்திலே யும் பெரும் பங்கு வகிக்கின்றதென்று நாம் அறிவோம். அதுதான் 'பும்சுவனம்' என்று சொல்லப்படும் மங்கையருக்கான மங்கள் நிகழ்ச்சியாகும். கர்ப்பந்தரித்த பெண்ணுக்கு நான்காம் மாதமோ அல்லது ஆறு அல்லது எட்டாம் மாதத்திலோ செய்யும் முக்கிய மான சடங்கு பும்சுவனம் என்று கூறப்படும். ஆலமரத்தின் கிளை களில் கிழக்கு அல்லது வடக்கு நோக்கி வளர்ந்துள்ள கிளைகளில் முளைத்திருக்கும் மொட்டு ஒன்றினைக்கொண்டுவந்து இரு கன்னிகை பெண்களால் இடிக்கப்பட்டு, அந்த மொட்டினின்று வெளிவரும் பாலைக் கர்ப்பவதியின் வலது மூக்கின் துவாரத்தில் பிழிய வேண்டு மென்று விதிக்கப்பட்டிருக்கிறது. இது பிரம்மதேவனை வேண்டி, நல்ல ஆண்மகவைப் பெறவேண்டுமென்று ஹோமம் முதலியன நடந்த பின்னர், புருஷன் கிழக்கு முகமாய் நின்றுகொண்டு அக்னிக்கு மேற்குப்பக்கம் அமர்ந்துள்ள கர்ப்பவதியான தன் மனைவியின் மூக்கில் பிழியவேண்டுமென்பது சம்பிரதாயமான ஓர் நற்சடங்கு. சுகப் பிரசவமாகி ஜனிக்கும் சிசு நற்குணங்கள் மிகப் பெற்று சுகமாக 'ஆல்போல் வளர்ந்து அறுகுபோல் படர்ந்து' மேன்மையாக வாழலாம்.

(ஆதாரநூல் : 'கர்மாக்களின் தத்துவங்கள்' (ஞானயக்ஞம்)

# अवधूतगीता

## तृतीयोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்ருவது அத்தியாயம்

(தொடர்ச்சி)

किं नाम रोदिषि सखे न च ते वयांसि
किं नाम रोदिषि सखे न च ते मनांसि।
किं नाम रोदिषि सखे न तवेन्द्रियाणि
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ३६॥

सखे தோழனே! ते உனக்கு वयांसि வயதுகள் என்பது न च கிடையாது. இவ்விதமிருக்க किं नाम எதற்காக रोदिषि அழுகிருய்? 50-60-70 என்ற வயதுகள் இல்லாமலிருக்கலாம். ஆனாலும் மனது என்றகரணம் என்னை துன்புறுத்துகிறது என்றும் கூற முடியாது. सखे நண்பனே ते உனக்கு मनांसि மனதுகள் (மனதின் விருத்திகளைக்கொண்டு பன்மையாக கூறப்பட்டிருக்கிறது) न च கிடையாது किं नाम रोदिषि யாது காரணத்திற்காக புலம்புகிருய். இவ்விதமே सखे உயிர்த்தோழனே तव உனக்கு என்று इन्द्रियाणि புலன்கள் கண், காது, மூக்கு, நாக்கு, த்வக், வாக்கு, பாணி–பாத–பாயு-உபஸ்தம் என்கின்ற 10 புலன்களும் न கிடையாதே. இவ்விதம் மனது கிடையாது. இந்திரியங்களும் இல்லை, வயது என்பதும் கிடையாது. இங்ஙனமாயின் किं नाम रोदिषि எதற்காக விசும்புகிருய்.

ஏன் என்ருல் நானும் நீயும் வேறில்லை-நானே! ஆகாயம் போல் எங்கும் பரவியிருக்கின்றதும் ஜ்ஞானப் பிழம்பாகவும் ஒரே ஆனந்த ஸ்வரூபமாகவும் உள்ள ஆத்மஸ்வரூபமாகவே அல்லவா இருக்கின்றேன்.

किं नाम रोदिषि सखे न च तेऽस्ति कामः
किं नाम रोदिषि सखे न च ते प्रलोभः।
किं नाम रोदिषि सखे न च ते विमोहः
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ३७॥

सखे நண்பா! ते உனக்கு कामः காமம் என்ற விஷயப் பற்றும் न च கிடையாது. किं नाम रोदिषि எதற்காக அழுகிருய். सखे தோழனே, இவ்விதமே ते உனக்கு प्रलोभः பேராசை என்ற எண்ணமும் न च இல்லை किं नाम रोदिषि ஏன் வீணுக விசும்புகிருய், கலங்குகிருய் सखे நட்பில் சிறந்தவனே ते உனக்கு विमोहः மதிமயக்கமும் न च கிடையாது किं नाम रोदिषि எதற்காக அழுகிருய். சென்ற சுலோகத்தில் मनः மனது என்ற கருவியே இல்லை என்று கூறினுர். இந்த சுலோகத்தில் மனதின் விருத்திகளின் உட்பிரிவுகளான कामः प्रलोभः विमोहः என்றவைகளும் இல்லை என்பதை விளக்கியிருக்கிருர்.

இவ்விதம் எந்தவிதமான வஸ்து ஸம்பந்தமும் ஆத்மாவிற்கு கிடையாது என்பதை விளக்கிவிட்டு இப்படித் தூய்மையாகவுள்ளதும் எங்கும் பரவி நிற்பதும் ஒரே ஆனந்த ஸ்வரூபமானதும் ஜ்ஞான ஒளியாகவுள்ளதுமான பரமாத்ம தத்வமாகவே நான் இருக்கின்றேன் என்கிருர். மனது பலவிதமான உட்பிரிவுகள் (விருத்திகளுடன் கூடியது) கொண்டது என்பதை

कामः सङ्कल्पः विचिकित्सा श्रद्धा अश्रद्धा धृतिः अधृतिः ह्रीः धीः भीः इत्येतत्सर्वं मन एव।

என்ற உபநிஷத் வாக்யம் விஸ்தாரமாகக் கூறியிருக்கிறது.

ऐश्वर्यमिच्छसि कथं न च ते धनानि
ऐश्वर्यमिच्छसि कथं न च ते हि पत्नी।
ऐश्वर्यमिच्छसि कथं न च ते ममेति
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम्॥ ३८॥

ते உனக்கு धनानि च பொருள் (தங்கம், வெள்ளி, ஆடை, ஆபரணம், வீடுவாசல் என்றது போன்றவைகள் धन சப்தத்தால் விவரமாகக் கூறலாம்) என்பதும் न இல்லை. இவ்விதமிருக்க कथं எவ்வாறு ऐश्वर्यं எல்லாவற்றையும் அடக்கி ஆட்சி செய்வதற்கு வேண்டிய அதிகாரத்தை इच्छसि விரும்புகிருய். பல வஸ்துக்கள் இருந்தால் அவைகள் யாவும் நமக்கு உட்பட்டதாகவும் நம்மால் கொண்டு செலுத்தக் கூடியவைகளாகவும் நாம் தான் இவைகளுக்கு அதிகாரி என்றதுமான எண்ணம் தோன்றலாம். இவ்விதமான ஸ்தானத்தை ஆசைப்படுவேது உண்டு. மேலும் पत्नी மனைவி என்று ஒருவளும் ते உன்னைக்

காட்டிலும் தனியாக, உன் உரிமை, என்றவரும் स्वं கிடையாது कस्य? எதற்காக ऐश्वर्यं அதிகாரத் தன்மையை इच्छसि விரும்புவாய், மேலும் मम इति என்னுடையது என்று எண்ணக்கூடிய (ममकारः மமகாரமும்) न च ते உனக்கு இல்லை.

மமகாரம் இல்லை. மனைவி மக்கள் தனிப்பட்டு கிடையாது பணம் காசு என்பதும் தனித்துக் கிடையாது. எல்லாமே ஆத்ம தத்வமொன்றே! இவ்விதம் ஆகாயம் போன்ற வியாபகமாகவும் ஒரே ரஸமான ஆனந்த ரூபமாகவும் ஜ்ஞானச் சுடராகவும் உள்ள ஆத்மஸ்வரூபமாகவேதான் நான் (நீயும் கூட) இருக்கின்றேன்.

लिङ्ग प्रपञ्च जनुषी न च ते न मे च
निर्लज्जमानसमिदं च विभाति भिन्नम्।
निर्भेद भेदरहितं न च ते न मे च
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ ३९ ॥

மேலும் लिङ्ग प्रपञ्च जनुषी லிங்க சரீரத்தின் விஸ்தாரங்களான பிறப்பு முதலியவைகளும் न च ते உனக்கும் இல்லை न च मे எனக்கும் இல்லை. ஸூக்ஷ்ம சரீரம் என்றும் லிங்கசரீரம் என்றும் கூறப்படுவது ஒன்றே. ஜ்ஞானேந்திரியங்கள் 5. கர்மேந்திரியங்கள் 5. பிராணபேதங்கள் 5. மொத்தம் 15. மனது ஒன்று சேர்த்து 16 உறுப்புகள் கொண்டது லிங்கசரீரம் என்றும்ஸூக்ஷ்ம சரீரம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த லிங்கசரீரம் ஒவ்வொரு ஜீவனுக்கும் மோக்ஷம் ஏற்படும் வரை ஒவ்வொரு ஜன்மாவிலும் தொடர்ந்து வருகிறது. ஒரு ஜீவனுக்கு ஒரு லிங்கசரீரம் எனப்படும். மோக்ஷத்திற்கு लिङ्गभङ्गः என்றும் பெயர். இவ்விதமான லிங்கசரீரத்துக்கு உண்மையில் தோற்றம் (பிறப்பு) கிடையாது. எல்லாமே विभ्रमः என்பது வேதாந்த சாஸ்திரம். இவ்விதம் मानसं इदं च இந்த மனதும் கூட निर्लज्ज நிர்லஜ்ஜ! வெட்கமற்றவனே! भिन्नं வேறுப்பட்டதாக (நம்மைவிட வேருக ஒரு வஸ்து இருப்பது போல்) विभाति தோன்றுகிறது निर्भेदभेदरहितं வாஸ்தவமாக பார்த்தால் எந்தவிதத்திலும் வேறுபட்டதாக இல்லவே இல்லை. இது न च ते न च मे எனக்கும் உனக்கும் ஸமானமாகும். (உனக்கும் தனியாக இல்லை எனக்கும் இல்லை) இவ்விதம் (பல்வித கல்பனைகளுடன் கூடிய) உண்மைப்பொருளாக எங்கும் பரவி ஆகாயம்போலும் நித்யம் ஆனந்த ஸ்வரூபமாகவும், ஆனந்தஸ்வரூபமாகவும், ஜ்ஞான ஸ்வரூபமாகவும் உள்ள பரமாத்ம தத்வமாகவே நான் திகழ்கின்றேன்.

नो वाणुमात्रमपि तेहि विरागरूपं
नो वाणुमात्रमपि तेहि सरागरूपम् ।
नो वाणुमात्रमपि तेहि सकामरूपं
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ ४० ॥

विरागरूपं नैवते अणुमात्रमपि உனக்கு ஆசைகள் இல்லாத நிலே என்றும் சிறிதளவுகூட கூற முடியாது. இவ்விதமே सराग-रूपं ஆசையுடன் கூடிய நிலே என்றும் கூட அணுமாத்ரமபி नैव சிறிதளவுகூட கூற முடியாது. तेहि உனக்கு सकामरूपं இச்சை காமம், விஷயப்பற்று என்ற நிலேயும் கூட नैवाणुमात्रमपि சிறிதளவும் இல்லே. இவ்விதம் வைராக்யம், விஷயப்பற்று ஆசைகள் முதலியவைகள் ஒன்றுடனும் ஸம்பந்தம் இல்லாததான ஜ்ஞான ஸ்வரூபனுகவே நான் இருக்கின்றேன்.

(தொடரும்)

# अवधूतगीता

## तृतीयोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## மூன்றாவது அத்தியாயம்

(தொடர்ச்சி)

ध्याता न ते हि हृदये न च ते समाधिः
ध्यानं न ते हि हृदये न बहिः प्रदेशः।
ध्येयं न चेति हृदये नहिवस्तु कालः
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ ४१ ॥

ते हृदये உன்மனதினுள் ध्याता नहि தியானம் செய்பவன் என்ற எண்ணமும் இல்லை ते உன்னைப் பொருத்து समाधिः च ஸமாதிநிலை என்பதும் न இல்லை-கிடையாது ते हृदये हि உன் மனத்திற்குள் ध्यानं न தியானம் என்ற நிலையும் இல்லை बहिः प्रदेशः வெளியிடம் என்பதும் न கிடையாது (நீ இல்லாத இடமே கிடையாது) ते हि हृदये உன்னுடைய மனதில் ध्येयं इति च தியானம் செய்யப்படுகின்ற பொருள் என்பதும் न இல்லை कालः காலம் (வேளை) என்ற वस्तु பொருளும் नहि இல்லையே-இவ்வித மாகவுள்ளதும் ज्ञानामृतं ஸ்வரூப ஜ்ஞானம் என்ற அமிருத ரூப மானதும் समरसं ஒரே ரஸமாகவுள்ளதும் गगनोपमः ஆகாயம் போல் எங்கும் பரவியுள்ளதுமான अहं நான் ஒருவனே எஞ்சி இருக்கிறேன்-உண்மைப் பொருள் நான் ஒருவனேயன்றோ.

இந்த சுலோகத்தில் ध्याता-ध्यान-ध्येय என்ற முக்காலி போன்ற "த்ரிபுடி" இல்லை என்பதும் அதற்கு அடிப்படையாக உள்ள "காலமும்" ப்ரஹ்மானந்தத்தில் காணமுடியாது என்றும் கூறப்பட்டது.

यत्सारभूतमखिलं कथितं मयाते
न त्वं न मे न महतः नगुरुर्नशिष्यः।
स्वच्छन्दरूपसहजं परमार्थतत्त्वम्
ज्ञानामृतं समरसं गगनोपमोऽहम् ॥ ४२ ॥

ते உனக்கு मया என்ருல் अखिलं பாக்கியில்லாமல் सारभूतं यत् எது மிகவும் துல்யமாக சொல்லப்பட வேண்டுமோ அது कथितं இவ்வாறு கூறப்பட்டது न मे என்னுடையது என்பதும் ஒன்று இல்லை न त्वं நீ என்பதும் கிடையாது न महत: பெரியோர் கள் என்பதும் இல்லை न गुरुः குரு என்பவரும் இல்லை न शिष्यः சிஷ்யன் என்பவனும் ஒருவன் கிடையாது स्वच्छन्दरूपसहजं தன் இஷ்டப்படி உருவம் கொண்டதும், தன்பின்ஞேடு தான்மட்டுமே இருப்பதுமான परमार्थं तत्वं மிகவும் உண்மைப் பொருளாகவுள்ள ज्ञानामृतं ஜ்ஞானப்பிழம்பாகவுள்ளதும் समरसं எங்கும் என்றும் ஒரே ரஸரூபமாகவும் गगनोपमः ஆகாயம்போல் எங்கும் பரவி யுள்ளதுமான பிரஹ்மானந்த ஸ்வரூபமாகவே अहं நான் திகழ் கின்றேன்.

दशश्लोकी என்ற பிரகரணத்தில் न शिष्यः न शिक्षा न च त्वं न चाहं न चायं प्रपञ्चः என்று ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் கூறியிருக்கிருர்கள். அந்த இடத்தில் शिवः केवलोहं நான் தனிப் பட்ட சிவஸ்வரூபமாக இருக்கிறேன் என்று கூறியிருக்கிருர்கள். இங்கும் அதேபோல் சீடன், குரு, நான், நீ, தியானம், தியானம் செய்யும் வஸ்து, தியானிப்பவன் என்ற வேறுபாடுகள் ஒன்றும் கிடையாது என்பதையே இவரும் கூறுகிருர்.

कथमिह परमार्थं तत्वमानन्दरूपं
कथमिह परमार्थं नैवमानन्दरूपम् ।
कथमिह परमार्थं ज्ञान विज्ञान रूपं
यदिपरमहमेकं वर्तते व्योमरूपम् ॥ ४३ ॥

इह இங்கு (இப்போது) परमार्थं तत्वं உண்மைப் பொருளை आनन्दरूपं ஆனந்த உருவமானது என்று कथं எப்படி கூறமுடியும் இவ்விதமே பரமார்த்த உண்மையான பிரஹ்ம நிலையை नैव आनन्दरूपं ஆனந்த ஸ்வரூபமானது அல்ல என்று कथं எவ்வாறு கூறமுடியும் परमार्थं तत्वं உண்மைப் பொருளான ஆத்ம தத்வத்தை ज्ञान – विज्ञानरूपं சாஸ்த்ரங்களினின்று ஏற்பட்ட ஜ்ஞான ரூபம் என்ரே, அனுபவ ரூபமாகவுள்ள 'விக்ஞான' ரூபம் என்ரே कथं எப்படிக் கூறமுடியும். ஏனெனில் अहं நான் என்று சொல்லக்கூடிய வஸ்துவானது परं மிகவும் உயர்ந்ததாக

வும் எங்கும் பரவியுள்ளதாகவும் व्योमरूपं ஆகாயம்போல் வியாபித்து இருப்பதாகவும் वर्तते இருக்கிறது यदि एकं எப்பொழுது ஒரே பொருளாகவே இருக்கின்றது என்பது ஸித்தாந்தமாகவுள்ளதோ, அப்பொழுது எந்தவிதமான भेदव्यवहार த்திற்கும் இடமில்லை என்று ஏற்படுகிறது. இந்த நிலையில் பார்க்கும்போது, ஆனந்தம்-ஆனந்தமில்லை-ஜ்ஞானம் அனுபவம் என்ற பேச்சுக்களுக்கு அவகாசமே கிடையாது என்ற பரமதாத்பர்யம்கொண்டுதான் இந்த சுலோகம் இவ்விதம் கூறுகிறது.

दहन पवन हीनं विद्धि विज्ञानमेकं
अवनि जलविहीनं विद्धि विज्ञानरूपम् ।
समगमन विहीनं विद्धि विज्ञानमेकं
गगनमिव विशालं विद्धि विज्ञानमेकम् ॥ ४४ ॥

एकं विज्ञानं ஒரே ஜ்ஞான ஸ்வரூபமாகவுள்ள ஆத்மதத்வமானது दहन-पवन-हीनं நெருப்பு காற்று சம்பந்தம் இல்லாதது என்றும் अवनि-जल-विहीनं பூமி ஜலம் இவைகளுடைய சம்பந்தம் அற்றது என்றும் सम-गमन-विहीनं அசைவற்றது அசைவுள்ளது என்ற சம்பந்தமும் இல்லாததாகவும் गगनमिव विशालं ஆகாயம் போல் (முடிவுகாணமுடியாதபடி) எங்கும் பரவியுள்ளதுமான विज्ञानमेकं ஒரே ஜ்ஞானப்பிரகாசமாக இருக்கிறது विद्धि என்றும் தெரிந்துகொள்வாயாக என்று கூறுகிருர்.

नशून्यरूपं नविशून्यरूपं नशुद्धरूपं नविशुद्धरूपम् ।
रूपं विरूपं न भवामि किञ्चित् स्वरूपरूपं परमार्थ तत्वम् ॥ ४५ ॥

परमार्थं तत्वं உண்மையான ஆத்மஸ்வரூபம் स्वरूप-रूपं தன்னுடைய ஸ்வரூபம் தவிர வேறு உருவம்கொண்டது அல்ல, எவ்வாறு என்ருல் शून्यरूपं न ஒன்றுமேயில்லாத சூன்யமானது என்ருே विशून्यरूपं न கல்பித ஸ்வரூபம் கொண்டது என்ருே கூற முடியாது. இவ்விதமே ஸகுணம்-நிர்குணம் என்றும் (शुद्धं-विशुद्धं) रूपं - विरूपं அழகுள்ளது அழகற்றது என்றும் கூற முடியாதவனுக நான் ஒருவன் எப்போதும் விளங்குகின்றேன்.

मुञ्चमुञ्च हि संसारं त्यागं मुञ्च हि सर्वथा ।
त्यागात्यागं विषं शुद्धं अमृतं सहजं ध्रुवम् ॥ ४६ ॥

ஹே சீடனே! संसारं பிறவிக்கடல் என்று சொல்லக்கூடிய ஸம்ஸார பந்தத்தை मुञ्च मुञ्च हि அடியோடு விட்டுவிடு. ஸம்ஸார பந்தத்தை தியாகம் செய்துவிடுவாயாக सर्वथा हि எல்லா விதத்திலுமே त्यागं தியாகம் செய்துவிட்டேன் என்ற எண்ணத்தையும் கூட मुञ्च விட்டுவிடு. ஏனென்றால் त्यागा·त्यागं விட்டு ஒழித்தேன்-விடவில்லை என்ற இரண்டுவிதமான எண்ணமும் கூட विषं விஷம் போன்றது—விஷத்தை தூரத்திலேயே தள்ளிவிட வேண்டும் सहजः என்றும் அழியாமல்-மாருமல் இருக்கிற ஆத்ம ஸ்வரூபத்தில் अमृतं மரணமில்லாமை என்பது ध्रुवं சாஸ்வதமானது शुद्धं மிகவும் தூய்மையும் கொண்டதர்கும். இவ்வித நிலைதான் அடையத்தக்கது. வேதாந்தங்களில், புண்ய பாபங்களை விட்டுவிடு (ஸத்யம்-அன்ருதம்) உண்மை பொய் என்ற இரண்டையும் விட்டுவிடு. பிறகு எந்த மனதைப் பிடித்துக்கொண்டு இவைகளை தியாகம் செய்தாயோ! அந்த மனதையும் (மனதில் உள்ள எண்ணங்களையும்) விட்டுவிடுவாயாக என்று கூறுகிறது.

त्यज धर्ममधर्मं च उभे सत्यानृते त्यज ।
उभे सत्यानृते त्यक्त्वा येन त्यजसि तत् त्यज ॥

என்ற வாக்கியத்தின் கருத்தையேகொண்டு இந்த சுலோகத்தில் கூறி மூன்ரும் அத்யாயத்தை முடிக்கிருர்.

॥ इत्यवधूतगीतायां तृतीयोऽध्यायः ॥

இவ்விதம் அவதூதகீதையில் மூன்ருவது அத்யாயம் முற்றும்.

———

# अवधूतगीता

## चतुर्थोऽध्यायः

# அவதூத கீதை

வேதாந்த வித்வான் S. யக்ஞேச்வர சாஸ்திரிகள், அல்லூர்.

## நான்காம் அத்யாயம்

(முன் தொடர்ச்சி)

श्रीदत्त उवाच — ஸ்ரீ தத்தாத்ரேயர் கூறுகிறார்.

नावाहनं नैव विसर्जनं वा
पुष्पाणि पत्राणि कथं भवन्ति।
ध्यानानि मन्त्राणि कथं भवन्ति
समासमं चैव शिवार्चनं च ॥ १ ॥

आवाहनं न ஆவாஹனம் என்பதும் இல்லை विसर्जनं वा नैव விஸர்ஜனம் என்றுமில்லை पुष्पाणि புஷ்பங்களும் पत्राणि பத்ரங்களும்கூட कथं भवन्ति எவ்விதம் இருக்கின்றன (இருக்க முடியும்) शिवार्चनंचैव சிவபூஜையும் கூட समासमं च ஸமமும் அஸமமும் ஆகவே உள்ளது ध्यानानि த்யானங்கள் मन्त्राणि மந்திரங்களும் कथं भवन्ति எவ்விதம் இருக்க முடியும்?

தானே ஒருவன்தான் ஆத்ம ஸ்வரூபம் - தன்னைத் தவிர வேறு பொருள் உண்மையில் இல்லை. இவ்விதம் பார்க்கும்போது சிவபூஜை என்று ஒன்று தனியாக உண்டா? இல்லையே என்பதை ஆவாஹனம் — விஸர்ஜனம், புஷ்பங்கள் — பில்வம் முதலிய பத்ரங்கள், த்யானம், அதற்கான மந்திரங்கள் பொருத்தமானது, பொருத்தமற்றது என்று எல்லாம் பேசக்கூடிய சிவபூஜை என்பதும்கூட பொருத்தமற்றதுதான் என்கிறார்.

न केवलं बन्धविबन्धमुक्तो न केवलं शुद्धविशुद्ध मुक्तः।
न केवलं योगिवियोगमुक्तः स वै विमुक्तो गगनोपमोऽहम् ॥ २ ॥

बन्ध विबन्धमुक्तः केवलं न (நான்) பந்தத்திலிருந்தும் விசேஷமான பந்தத்திலிருந்தும் விடப்பட்டவன் என்றும்கூட கூற முடியாதவன் — (நான்) शुद्ध विशुद्ध मुक्तः केवलं न தூய்மையிலிருந்தும் மிகத் தூய்மையிலிருந்தும்கூட விடுபட்டவன் என்றும் கூற முடியாதவனாக இருக்கிறேன் योगि वियोगमुक्तः केवलं न

(நான்) யோகிகளிடமிருந்தும் - விசேஷமாகவுள்ள யோகங்களிலிருந்தும்கூட விடுபட்டவன் என்றும்கூட, வியவஹரிக்க முடியாதவன் **सर्वं गगनोपमः** அந்தவிதமான ஆத்மாவானது ஆகாயம் போன்றது. அவ்விதமாக முக்தனுகவே **अहं मुक्तः** நான் இருக்கின்றேன்.

ஆகாயமானது பந்தம், மோக்ஷம், தூய்மை, மிகவும் தூய்மை, யோகம், வியோகம் என்ற அஷ்டாங்க யோகங்களுடன் சம்பந்தமுடையது, சம்பந்தம் இல்லாதது என்றெல்லாம் எவ்விதம் பேச முடியாமல் இருக்கிறதோ அவ்விதம் ஆத்ம தத்வமும் கூட ஆகாயத்தையும்விட ஸூக்ஷ்மமாக இருக்கிறது. அவ்விடத்தில் எந்தவிதமான பேச்சுக்கும் ஆத்மாவிடமும் இடமே இல்லை என்பதை தெளிவாக சீடனுக்கு ஸ்ரீ தத்தாத்ரேயர் உணர்த்துகிறுர்.

**संजायते सर्वमिदं हितथ्यं संजायते सर्वमिदं वितथ्यम् ।**
**एवं विकल्पो मम नैव जातः स्वरूप निर्वाणमनामयोऽहम् ॥ ३ ॥**

மேலும் **सर्वमिदं** கண்ணுக்குத் தெரிகின்ற இவ்வுலகம் எல்லாம் **तथ्यं** உண்மையாகவே **संजायते हि** உண்டாகின்றன என்றே! **सर्वमिदं** இந்த உலகம் பூராவும் **वितथ्यं** (வீணுனது) உபயோகமற்றது — பொய்யாகவே **संजायते** தோன்றுகின்றது என்றே! **एवं** இம்மாதிரியான **विकल्पः** நேர்மாறுதலாகவுள்ள விகல்பமான தோற்றங்கள் **मम** எனக்கு **नैव जातः** ஏற்படவே இல்லை. ஏற்படவே வழி கிடையாது. ஏன் என்றல் **अहं** நான் **अनामयः** எந்தவிதமான தோஷங்களும் இல்லாதவன் **आमयः** தோஷம் — குற்றம். **न विद्यते आमयः यस्य** எவ்விதத்திலும் குற்றம் குறைகள் கூற முடியாதவனும் **स्वरूप निर्वाणं** நிர்வாணம் என்ற சொல்லிற்கு மோக்ஷம் — ஆனந்தம் என்று பொருள். **स्वरूपं** என்றல் - தன் உருவம் - ஸ்வயம் ஜ்யோதிஸ் - ஸ்வரூபம் என்று பொருள். நான் எப்போதுமே "ஸ்வயம் ஜோதிஸ்" ஸ்வரூபமாகவுள்ள **निर्वाणं** ஆனந்த நிலையிலுள்ள, பரமாத்ம ஸ்வரூபமாகவே நான் எப்போதும் திகழ்கின்றவன். ஆகையினல் நேர் எதிர் முறையில் உள்ள விகல்பங்கள் எனக்கு ஏற்பட வழியில்லை.

**न साञ्जनं चैव निरञ्जनं वा नचान्तरं वापि निरन्तरं वा ।**
**अन्तर्विभिन्नं नहिमे विभाति स्वरूप निर्वाण मनामयोऽहम् ॥ ४ ॥**

**अहं** நான் **अनामयः** எந்தவிதமான தோஷமும் இல்லாதவன் மிகத் தூய்மையான பரமாத்மாவும் நானும் ஒன்றே - வேறில்லை।

ஆகையினுல் (अञ्जन என்ருல் '' மை '' என்று அர்த்தம். அது எதோடு கூடினுலும் அந்த பொருளுடன் கூட ஒட்டிக்கொள்ளும் இயல்புடையது. இவ்விடத்தில் மற்ருென்றுடன் சேருவது என்ற அர்த்தத்தில் வருகிறது.) साञ्जनं च नैव ஆத்மா, வேருெரு வஸ்துவுடன் சேர்ந்து உள்ளதுமில்லை निरञ्जनं वा न மற்றதுடன் சேர்ந்து இல்லாததாகவுமில்லை अन्तरं वा இடைவெளியுள்ளது என்ரே இவ்விதமே निरन्तरं वा न இடைவெளியே இல்லாதது என்றும் இல்லை - கூற முடியாததாகும். मे எனக்கு अन्तर्विभिन्नं உள்-புறம், என்று வேறுபட்ட தோற்றமே न विभाति हि தோன்றுவது கிடையாது - தோன்ற இடமில்லையே! அவ்விதமாக உள்ள स्वरूप निर्वाणं இயற்கையாகவே, என்றும், எப்போதும் கூட ஒரே ஆனந்த ஸ்வரூபனுகவுள்ள மோக்ஷம் என்று சொல்லக் கூடிய பரப்ரஹ்ம ஸ்வரூபமாகவே நான் இருக்கின்றேன்.

अहं अनामयः स्वरूप निर्वाणं परं ब्रह्मैव।
अतः मयि विकल्पाः नैव सम्भवन्ति॥

अबोधबोधो मम नैव जातः बोधस्वरूपं मम नैव जातम्।
निर्बोधबोधञ्च कथं वदामि स्वरूप निर्वाण मनामयोऽहम्॥ ५॥

मम எனக்கு अबोधबोधः முதலில் அக்ஞானம் இருந்து பிறகு ஜ்ஞானம் உண்டாயிற்று என்று கூற முடியாது नैवजातः [ இந்த இடத்தில் पूर्वं सुप्तः पश्चात् उत्थितः सुप्तोत्थितः என்ற இடம்போல் அர்த்தம் கொள்ளலாம் என்று தோன்றுகிறது.] मम बोधस्वरूपं नैवजातं என்னுடைய அறிவு ஸ்வரூபமாகவுள்ள (ஆத்மாவானது) தத்வமானது नैवजातं '' உண்டாகின்ற வகையில்.'' சேர்ந்தது அல்ல निर्बोध बोधं [அந்தக் கரணம் என்கிற மனேவிருத்தியில் இருந்து ஏற்படுகின்ற விஷய ஞானத்திற்கு बोधः என்று பெயர் உள்ளது. இதை கேனேபநிஷத்தில் அறியலாம்.] இந்த இடத்தில் स्वरूपज्ञान மாகவுள்ள चिद्घन ஸ்வரூபம் बोध என்ற பதத்தினுல் கூறப்படுகிறது. இந்த बोधं மானது வேறு விருத்தியினுல் ஏற்படுவது அல்ல. அதனுல் निर्बोध बोधं ஸ்வரூப ஜ்ஞானமாகிய ஆத்ம ஸ்வரூபத்தை बोध என்ற சொல்லினுல் कथं वदामि எவ்விதம் கூறுவேன். இவ்விதமாகவுள்ள स्वरूपनिर्वाणमनामयोऽहं ஸ்வயம் ஜோதி ஸ்வரூபமாகவும் நித்யமாகவும் மோக்ஷ ஸ்வரூபமாகவுள்ள பரப்ரஹ்ம ஸ்வரூபமாகவே நான் விளங்குகிறேன்.



(தொடரும்)

## சின்னச் சின்னக் காவடி

(வேதாராகவன், கரூர்.)

சின்னச் சின்னக் காவடி — செந்தில் நாதன் காவடி
வண்ண வண்ணக் காவடி — வள்ளி நாதன் காவடி (சின்)

இங்கும் அங்கும் காவடி ஏர கத்தான் காவடி
அங்கும் இங்கும் காவடி அழகு வேலன் காவடி (சின்)

ஆட்டம் ஆடும் காவடி ஆண்டியப்பன் காவடி
பாட்டுப் பாடும் காவடி பழநியப்பன் காவடி (சின்)

முன்னும் பின்னும் காவடி முருக வேலன் காவடி
கண்ணும் மணமும் காவடி கந்த வேலன் காவடி (சின்)

இரத்தினக் காவடி இன்ப முட்டும் காவடி
பழநி மலைக் காவடி பஞ்சந் தீர்க்கும் காவடி (சின்)

சென்னி மலைக் காவடி சேவற் கொடியோன் காவடி
வெண்ணெய் மலைக் காவடி வேண்டும் வரம்தரும் காவடி (சின்)

பாலும் பழமும் காவடி பஞ்சாமிர்தக் காவடி
வேலும் மயிலும் காவடி வினைகள் தீர்க்கும் காவடி (சின்)

நன்றி :— கந்தன் பாமாலை.